ஸ்ரீ

    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இவர்கள் சந்தித்தால்

ஆழ்வார்களும்

எம்பெருமானும்

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இவர்கள் சந்தித்தால்

(ஆழ்வார்களும், எம்பெருமான்களும்)

ஆசிரியர்

புலவர் ஏ. பரந்தாம ராமாநுஜ தாசர், எம்.ஏ., பி.எட்.,

வெளியீடு:

திருவேங்கடவன் பதிப்பகம்
எண் 5, திருவள்ளுவர் தெரு,
மேத்தா நகர், சேலையூர் அஞ்சல்,
தாம்பரம், சென்னை 600 073

ஸ்ரீ

பத்மாவதி சமேத ஸ்ரீநிவாசாய நம:

திருமலை திருப்பதி
தேவஸ்தான சமய
நூல்கள் வெளியீட்டு நிதி
உதவித் திட்டத்தின் கீழ்
பொருள் உதவி பெற்று
இந்நூல்
வெளியிடப் பெறுகிறது.
தாளும் தடக்கையும்
கூப்பி
நன்றி நவிலுகின்றேன்.

அடியேன்
புலவர் ஏ. பரந்தாமன், M.A.

# நன்றியுரை

ஓங்கி உலகளந்த உத்தமனாகிய ஸ்ரீமந் நாராயணன் திருவருள் துணை நிற்க, இவர்கள் சந்தித்தால் (ஆழ்வார்களும் - எம்பெருமான்களும்) என்ற இந்நூலை வெளியிட, உறுதுணையாக இருந்து வாழ்த்தியருளி, நிதியுதவி அளித்த சான்றோர்கட்கு அடியேன் "தலையல்லால் கைமாறு இல்லை" யென தாள் பணிந்து நன்றி நவிலுகின்றேன்.

1. ஆசாரியப் பெருமக்கள்:

   ஸ்ரீ உ.வே. வேங்கடாசாரிய சுவாமிகள், ஸ்ரீபெரும்பூதூர்.

   ஸ்ரீ உ.வே.சே. இராமாநுஜசாரிய சுவாமிகள், சென்னை.

   ஸ்ரீ உ.வே. திருநாராயண ஐயங்கார் சுவாமிகள், திருக்குறுங்குடி.

2. திரு புலவர் மனசை ப.கீரன், சென்னை

3. அறநிலையங்கள், சென்னை

4. திரு ஜே.பி.ஏ.ஐ. அச்சகம், சிட்லபாக்கம்

இந்நூலை அடியேனது பெற்றோர்கள் நினைவாக வெளியிடுகின்றேன்.

அடியேன்,
புலவர் ஏ.பரந்தாம ராமாநுஜதாசன்
நரியம்பாக்கம்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**ஸ்ரீ உ.வே.ஆசூரி - வேங்கடாசாரியார்**
ப்ரவீன்-ப்ரசாத் ;
29/ஏ, மணவாள மாமுனி தெரு
ஸ்ரீபெரும்பூதூர் - 602 105.

நாள்: 4.7.1996

## மங்களா சாசனம்

ஸ்ரீமத் பூதபுரி வாசியும், ஸ்ரீ எம்பெருமானார் திருவம்சத்த வருமான ஸ்ரீ ஆசுரி அப்பளாச்சாரி சுவாமிகளின் திருக்குமாரரான அடியேன் திருவடி சம்பந்தம் பெற்றவர் வைணவமணி. புலவர் ஏ.பரந்தாம ராமாநுஜதாசர். இவர், எந்தை, தந்தை, தந்தை, தந்தைதன் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி எனும் அருளிச் செயலுக்கிணங்க, தமது முன்னோர்களைப் போன்று, பகவத்-பாகவத தொண்டும், வைஷ்ணவ ப்ரவசனங்களும் ; குமாரவாடி ஸ்ரீ உ.வே.சே. இராமாநுஜாசாரியார் சுவாமிகளுடன் இணைந்து; திருமாலடியார் குழாத்தின் செயலாளராக இருந்து கொண்டு; ஆழ்வார், ஆசாரியர் திருநட்சத்திர விழாக்களைக் கொண்டாடி வருவதும்; ஸ்ரீ வைஷ்ணவ வியாசங்களும், கிரந்தங்களும் எழுதி வெளியிட்டு வருவதும் மிகவும் பாராட்டத் தக்கது.

தற்போது **இவர்கள் சந்தித்தால்** (ஆழ்வார்களும் - எம்பெருமான்களும்) என்ற நூலில் அருளிச் செயல் பாசுரங்களையே கொண்டு உரையாடல் முறையில் எழுதியுள்ள உத்தி கண்டு பெரிதும் மகிழ்கின்றேன்.

இந்த உத்தம பாகவதரான பரந்தாம ராமாநுஜருக்கு ஆசாரியன் என்ற முறையில் இவரது ஸ்ரீ வைஷ்ணவ பகவத் - ஆசார்ய - பாகவத தொண்டு நாளும் வளர்ந்து சிறந்தோங்கவும், இவர் ஸ்ரீமந் நாராயணன், எம்பெருமானார், ஜீயர் சுவாமிகளின் திருவருளுடன் நோயற்ற நீண்ட ஆயுள் பெற்று, வாழ்க பல்லாண்டு பல்லாண்டு! என்று மங்களா சாசனம் செய்கின்றேன்.

நித்யஸ்ரீ - நித்ய மங்களம்!

மங்களாசாசகன்
ஆசூரி. வேங்கடாசாரி

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

குமாரவாடி சே. இராமாநுஜாச்சாரியார்
ஆசிரியர்
"திருமால்"
53, ஆபிரகாம் தெரு
மயிலாப்பூர்
சென்னை - 600 004

நாள் : 4.7.96

## அணிந்துரை

புலவர் திரு. பரந்தாமன் அவர்கள் எழுதியுள்ள **"இவர்கள் சந்தித்தால்"** எனும் நூல் ஓர் அரிய வெளியீடு.

முன் அறிமுகம் இல்லாத இருவர் சந்திக்கும் போது அவ்விருவரிடையே எழும் உணர்வுகளைக் கற்பனை செய்து வெளியிடும் உத்தி தமிழ் எழுத்துலகில் புதியதொரு வழக்கமாகி வருகிறது.

ஸ்ரீ வைஷ்ணவ பிரசார ஆர்வம் மிக்க நம் புலவர் இந்த உத்தியைக் கையாண்டு, 'வைதேவியும் வாயுபுத்திரனும்', 'முதலாழ்வார்களும் முகில் வண்ணனும்', 'திருமழிசையும் திருவெஃகாவும்', 'மாறனும் மதுரகவிகளும்' என்பது போன்று 12 தலைப்புகளில், இச்சிறு நூலை உருவாக்கியுள்ளார்.

அசோகவனத்துச் சீதையை அனுமன் சந்திக்கும் வாய்ப்பில் பெரியாழ்வாரின், "நெறிந்த கருங்குழல் மடவாய்" பதிகம் உட்புகுந்து பொருத்தமாக உதவுகிறது. ஆசிரியரின் புலமைக்கும், வைணவப் பற்றுக்கும் இது நல்ல எடுத்துக்காட்டு.

இராமாயணத்திலிருந்து திருக்கோவலூர் இடைகழிக்குத் தாவி அங்கு முதலாழ்வார் மூவரையும் சந்திக்க வைத்து; புறவிருள், அக இருள் அகல இருவகை விளக்குகளை எரிய விடுகிறார். பொய்கையாரின் புற விளக்கில் திரியில்லாக் குறையைப் பூதத்தாரின் அக விளக்கில் நிறை செய்யத் தூண்டும் பேயாழ்வாரின் தலையீடு சுவையூட்டும் நல்ல இலக்கியக் கற்பனை!

பேயாழ்வாரின் சிஷ்யர் தோன்றிய திருமழிசைக்கும், பொய்கையார் உதித்த திருவெஃகாவுக்குமிடையே உரையாடலை வைத்து, தலச்சிறப்புகளையும், அங்கு அவதரித்த ஆழ்வார்களின் பெருமையும் வெளியிட புலவர் புனைந்துள்ள உரையாடல் ரஸம் மிகுந்து சிந்தனைக்கு இனிமையூட்டுகிறது.

நான்காவது கட்டுரை ஆசார்ய வைபவமாகத் திகழ்கிறது! நம்மாழ்வாரைப் போன்ற ஒரு ஆசானையும், மதுரகவி போன்ற ஒரு சிஷ்யனையும் உலகில் காண்பது அரிது. ஆசார்ய – சிஷ்ய சந்திப்பில், கண்ணினுண் சிறுத்தாம்பின் உரை நூலையே நுழைத்து விட்டார்! ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவது அரிது, அரியதை எளியதாக்கி விட்டார் ஆசிரியர்.

கற்பனை வளம், நடையின் நயம், தமிழின் சுவை அனைத்தும் அமைந்துள்ள இந்நூல் வைணவ சமய பிரசாரத்துக்கு உறுதுணையாக உதவும். வைணவ இலக்கியத்துக்கு ஒரு புதிய சேமிப்பு. வரவேற்று மேலும் இத்தகு பல நூல்கள் இயற்ற வாழ்த்துகிறேன்.

சே. இராமாநுசன்

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வேங்கட குருவே நம:

**ஸ்ரீமான் உ.வே. கபிஸ்தலம் ஸ்ரீநிவாசாச்சாரியார்**
எண் :1, அகத்தியர் தெரு,
காந்தி நகர்,
சாலிகிராமம்,
சென்னை -600 093.

## அணிந்துரை

பாகவத ஸ்ரீ புலவர் ஏ. பரந்தாமன் அவர்கள் கல்வித் துறையில் பணியாற்றுவதோடு நில்லாமல், சமூகத்துக்கு கல்வி புகட்டும் அளவில் விளங்கி வருகிறார்கள். அடக்கமும், பெரியோர்களிடத்தில் மரியாதையுமுடைய சிறந்த அறிஞர். பல பெரியோர்களிடம் கேட்டறிந்து அதனைச் சொல்லாற்றலாலும், எழுத்தாற்றலாலும் விளங்கி வருகிறார்கள். அனேக ஸ்ரீ வைஷ்ணவ நூல்களை எழுதி வெளியிட்டவர்.

பேதைகளும் எளிதில் புரிந்து கொள்ளும்படி பல மேடைகளில் பேசும் வல்லமை படைத்தவர். அகில இந்திய வானொலி நிலையத்திலும், சென்னைத் தொலைக்காட்சி நிலையத்திலும் இலக்கியச் சொற்பொழிவுகள் ஆற்றுகின்ற பெருமகனார்.

"**இவர்கள் சந்தித்தால்**" என்ற நூலை வெளியிடுகிறார்கள். முன்னுரையிலேயே எழுதும் பொருளையும், குறிக்கோளையும் தெரிவிப்பது வரவேற்கக்கூடியது.

1. சீதை அனுமன் சந்திப்பு – சுந்தரகாண்டத்தையே பிழிந்து கொடுத்துள்ளார். பெரியாழ்வாரின் திருவுள்ளம் சிறப்பாக அமைந்துள்ளது. சம்பாஷணை மூலம் விளக்குவது தனிச் சிறப்பு. படிக்கப் படிக்கத் தெவிட்டாதது.

2. முதலாழ்வார்கள் சந்திப்பு மிக போற்றுதற்குரியது.

3. திரு வெஃகா, திருமழிசை இவை இரண்டும் பேசுவது உயிரோட்டம் உள்ளது ஆகும்.

4. மாறனும் மதுரகவியும் என்ற கட்டுரையில் ஆசார்ய நிஷ்டை பரக்கப் பேசப்பட்டுள்ளது.

5. குலசேகரர் — செங்கமலம் — நாயக — நாயகி பாவம் விளக்கம் சிறப்பானது. முதற் பரிசு அளிக்கலாம்.

வங்கத்தின் கூம்பேறும் மாபறவை. — இரண்டாமிடம் பெறுகிறது.

மேகம் — பயிர், கடல். — ஆறு விளக்கங்கள் வெகு பொருத்தம்.

குறளாசிரியர் பல இடங்களில் புகுவது உகந்தது.

6. பெரியாழ்வாரும் எம்பெருமானும் பேசிக்கொண்டது நன்று நன்று.

7 & 8. திருவரங்கன் பெருமையை தொண்டரடிப்பொடி, திருப்பாணன் ஆகியோர் பேசுவது பழத்திலிருந்து சாறு பிழிந்த ரசம் போன்றுள்ளது. போக்யமானது.

9. திருவேங்கடத்தில் ஊற்றும் அதிகம் உடையவர் — திருமங்கை மன்னன் தன் வரலாறுகளைச் சொல்ல வைக்கிறார்.

10. மாறனேரி நம்பி நிகழ்ச்சி — உலகத்தார் அறிய வேண்டிய ஒன்று. இந்நாட்களுக்கு மிகவும் உகந்தது.

மிகவும் உழைத்திருக்கிறார். உலக மக்கள் திருந்தி விடுவார்கள் என்ற எண்ணம் உண்டாகிறது.

இந்நூலை வாங்கிப் படிக்க எல்லோரும் முன் வர வேண்டும். படித்து இன்புற பல வாய்ப்புகள் உள்ளன. வைணவ, சித்தாந்த கருத்துகளை திரட்டிக் கொள்ள முடியும்.

நூலாசிரியர் மேலும் மேலும் இவ்வழியில் முன்னேறவும், நீடுழி வாழவும்; ஆழ்வார்கள், ஆசாரியர்கள் அடிபோற்றி; வணங்கி பிரார்த்திக்கின்றேன்.

மங்களங்கள் உண்டாகட்டும்!

**கபிஸ்தலம் ஸ்ரீநிவாச தாசன்.**

# முன்னுரை

உயர்வற உயர்நல முடையவனும், மயர்வற மதிநலம் அருளுபவனும், ஆகிய திருமால்; சம்சாரமாகிய கடலிலே விழுந்து துன்புறும் மக்களை, அத்துன்பக் கடலிலிருந்து கரையேற்றி தனது திருநாட்டுக்கு அழைத்துகொள்ள விரும்பினான். அதற்குத் துணையாக வேதங்களையும், சாத்திரங்களையும், புராணங்களையும் அவைகளின் சாரமான மந்திரங்களையும் தோற்றுவித்தான். அவற்றை மக்கள் உணர்ந்து, தீயவற்றை நீக்கி, நல்லனவற்றைக் கடைப்பிடித்து, தம்மைத் தோற்றுவித்த இறைவனுக்குத் தொண்டு செய்து, இறைவன் திருவடியைச் சேராதது கண்டு வருந்தினான். தன் நிலையைத் தாழ்த்திக் கொண்டு, தானே உலகில் தோன்றி, மக்களோடு மக்களாகப் பழகி, பல தர்மங்களைத் தானே கடைபிடித்துக் காட்டினான் அப்போதும் பலன் கிடைக்காமையால்; தனது திருநாட்டிலுள்ள நித்யசூரிகளை ஆழ்வார்களாகத் தோற்றுவித்து, அவர்களால் வேதக் கருத்துக்களையும், இறைநெறிகளையும், இனிய தமிழில் பாசுரங்களாகப் பாடித் தந்தருளினான். பின்பு அந்தப் பாசுரங்களுக்கு, விளக்கவுரைகளை எழுதி மக்களிடையே பரப்பி வர ஆசாரியர்களைத் தோற்றுவித்தான்.

இருப்பினும், இக்கலியுகத்தில் அதர்மமே மிகுந்து, தர்மம் தழைத்தோங்க முடியாமல் போகின்றது. இறையுணர்வு நூல்களைப் படிக்க பெரும்பாலோர் விரும்புவதே இல்லை. இன்றை நாளில் எளிய தமிழில், கதை, கட்டுரைப் போன்றவற்றையே மக்கள் விரும்புகின்றனர். எனவே, மக்கள் விரும்புகின்ற முறையில், கசப்பு மருந்தை இனிப்பு வெல்லத்திலும், தேனிலும் கலந்து தருவதைப் போல, கதை கலந்த கட்டுரைகளில் அறநெறிகளைப் புகட்டுவதே சாலச் சிறந்ததாகும். வைணவ நெறிகளை, ஆழ்வார்கள் பாசுரங்களை ஆதாரமாகக் கொண்டு, எளிய தமிழ் நடையிலும், உரைநடையிலும், கட்டுரைக் கதைகளாக, பாமர மக்களும் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் இந்நூலைப் படைத்துள்ளேன். இனிப்பில் கலந்த கசப்பு மருந்து உடல் நோயைப் போக்குவதைப் போல, இந்நூலும் மக்கள் அறியாமையைப் போக்கி, மெய்யறிவை வளர்க்கும் என நம்புகின்றேன்.

ஒவ்வொரு ஆழ்வார்களும் மற்ற மற்ற ஆழ்வார்களுடனும்; ஒரு திருப்பதி மற்ற திருப்பதியுடனும்; ஆழ்வார்கள் எம்பெருமான்களுடனும், திருமாலடியார்களுடனும்; ஆசாரியர் - மாணவருடனும் பேசுவது போல

வினா-விடையாகக் கட்டுரைகளை எழுதியுள்ளேன். கருத்துகளை வலியுறுத்த திவ்யப்பிரபந்தப் பாசுரங்களையும், புலவர்களின் பாடல்களையும், எடுத்துக்காட்டுகளாகப் பயன்படுத்தியுள்ளேன். இந்நூலின் பன்னிரெண்டு கட்டுரைகளும் கீழ்க்கண்டவாறு அமைக்கப்பட்டுள்ளன.

1. சொல்லின் செல்வன் அனுமன் - ஏற்றமிகு சிறையிருந்த சீதாதேவியிடம் இராமபிரான் சொன்ன அடையாளங்களைக் கூறுவதாகவும்,

2. முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் ஞானச்சுடர் விளக்கேற்றி, திருமாலைக் கண்டு தரிசித்ததைக் கூறுவதாகவும்,

3. திருமழிசை என்ற திருப்பதி திருவெஃகா என்ற திருப்பதியுடன் பேசி, அங்கு எழுந்தருளியுள்ள திருமால், ஆழ்வார் பெருமைகளைக் கூறுவதாகவும்,

4. மாறனாகிய நம்மாழ்வாருடன் அவரது சீடர் மதுரகவிகள் ஆசாரியர் பெருமையைக் கூறுவதாகவும்,

5. அரசனாயிருந்து ஆழ்வாராக மாறிய குலசேகரர் வித்துவக்கோட்டு எம்பெருமானிடம், நமக்கும் - அவருக்குமுள்ள ஒன்பது உறவுகளைக் கூறுவதாகவும்,

6. பக்தவச்சலனே பரம்பொருள் என்று உறுதிப்படுத்திய பட்டர்பிரான் அவருக்கு பல்லாண்டு பாடியதன் காரணத்தைக் கூறுவதாகவும்,

7. தொண்டரடிப் பொடியாழ்வார் - திருமாலடியார்களுடன் பேசி திருவரங்கன் பெருமையைக் கூறுவதாகவும்,

8. திருப்பாணாழ்வார் திருவரங்கனை, திருவடி முதல் திருமுடி வரை வணங்கி வழிபட்டதையும்,

9. திருமங்கை மன்னன் - திருவேங்கடவனிடம் பேசி சரணாகதி அடைந்ததைக் கூறுவதாகவும்,

10. பெரிய நம்பிகள் - உத்தமரான மாறனேரி நம்பிகளிடம் பேசி திருமாலடியவர் பெருமையைக் கூறுவதாகவும்,

11. இராமாநுஜர் தன் குருவாகிய திருக்கோட்டியூர் நம்பிகளுடன் பேசுவதாகவும்,

12. மணவாள மாமுனிகள் திருமாலடியார்களிடம் பேசுவதாகவும் 12 கட்டுரைகளைத் தந்துள்ளேன்.

இக்கட்டுரைகள் கூறும் கருத்துகள் அனைத்தும் திருமால்நெறிகளை உள்ளது உள்ளபடி உணர்த்துவனவேயாகும். "இவர்கள் சந்தித்தால்" என்ற தலைப்பில் எழுதப்பட்ட இந்நூலை அனைவரும் படித்துணர்ந்து, கூறும் நெறிகளைக் கடைப்பிடித்து, திருமால் திருவருள் பெற்று உய்யுமாறு வேண்டுகின்றேன்.

அடியேன்

நரியம்பாக்கம் புலவர் ஏ. பரந்தாம ராமாநுஜதாசன்

# உள்ளுறை

# வைதேவியும் - வாயுபுத்திரனும்

இராமாயணப் பாத்திரங்களுள் அநுமன் ஓர் முக்கிய பாத்திர மாவான். கிஷ்கிந்தா காண்டத்திலே அறிமுகப்படுத்தப்படும் அநுமன் அறிவிற் சிறந்தவன், ஆற்றல் மிக்கவன், சாத்திரங் கற்றவன், வீரம் மிக்கவன், சாதுர்யம் மிக்கவன், இனிமையாகப் பேசக்கூடியவன் என்று கம்பரால் இராமன் வாயிலாக போற்றப்படுகிறான். இன்சொல்லின் செல்வன் என்று பாராட்டப் படுகிறான்.

இராமன், இலக்குவர்களை சுக்ரீவனுக்கு நண்பர்களாக்கிய பெருமை அனுமனையே சாரும். இராமபிரானுக்கும் சுக்ரீவனுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையால் சீதையைத் தேடும் பணியில் தலை சிறந்தவன். இராமன் சொல்லியனுப்பிய அடையாளங்களைக் கேட்டுக் கொண்டும், கணையாழியைப் பெற்றுக் கொண்டும் இலங்கை நோக்கி வானில் பறந்து சென்று இலங்கையை அடைந்தான். இலங்கை காவல் தெய்வத்தை வென்று, மாறுவேடத்தில் இரவில் இராவணன் அரண்மனையெல்லாம் சுற்றித் தேடினான். ஆனால் சீதையைக்கண்டு பிடிக்க முடியாமல் அசோகவனத்தை அடைந்தான். ஒரு மரத்தடியில் பெண் ஒருத்தி சோகமாக அமர்ந்திருந்ததைக் கண்டு அங்கு சென்றான். அப்போது ஒரு அரக்கன் கம்பீரமாக வருவதைக் கண்டு மரத்தின் மீது அமர்ந்து கொண்டு நடப்பதைக் கூர்ந்து கவனித்தான். வந்தவன் அப்பெண்ணிடம் தகாத முறையில் பேசியதையும், அதற்கு அப்பெண் கடுமையாகப் பேசியதையும் கண்டு, அரக்கன் இராவணன் என்பதையும், அப்பெண் சீதை என்பதையும் உணர்ந்து, மிக்க கோபமும், வருத்தமும் கொண்டான் அநுமன்.

சற்று நேரத்திற்கெல்லாம் சீதை தன் தலை முடியை மரக்கிளையில் கட்டி, கழுத்தில் சுருக்கிட்டு தற்கொலைக்கு முயன்றாள். இதைக் கண்ட அநுமன் திடுக்கிட்டு கீழே குதித்தான். இராமநாமம் பலமுறை சொன்னான். இராம நாமத்தைக் கேட்டவுடன் சற்றுத் தயங்கினாள். தற்கொலை முயற்சியை விட்டாள். என்றாலும், இதுவும் அரக்க மாயையாக இருக்குமோ என்று சந்தேகித்தாள்.

சீதை: "யாரடா குரங்கே, நீ யார்? உண்மையைச் சொல். இராவணன் அனுப்பிய அரக்கனோ! இங்கே நில்லாது சென்று விடு"

அநுமன்: தாயே! நீர் என்னைச் சந்தேகப்படாதீர்! நான் உண்மையிலேயே இராம தூதன்தான். என் பெயர் அநுமன். நான் அஞ்சனா தேவிக்கு, வாயு பகவான் அருளால் புதல்வனாகத் தோன்றியவன். கிஷ்கிந்தையிலிருந்து வருகின்றேன். இராமபிரான் அங்குதான் உள்ளார். நீங்கள் இருக்கும் இடம் தெரியாமல் சோகமே வடிவாக, உயிரற்ற உடல்போல் துவண்டு போய் உள்ளார். நீர் கழற்றி எறிந்த ஆபரண மூட்டையைக் கண்டு, தென் திசையில் இலங்கையின் அரசனான இராவணன்தான் உங்களை எடுத்து வந்திருக்க முடியும் என்று ஊகித்து இங்கு வந்தேன். உங்களைக் கண்டேன்.

சீதை: நான் என் ஆபரணங்களைக் கழற்றி மூட்டை கட்டி எறிந்தது உண்மைதான். அது உங்கள் கையில்தான் கிடைத்ததா? அவற்றையெல்லாம் என் ஐயன் இராம பிரான் பார்த்தாரா? சொல். சொல் அநுமனே. ஆனால் ஒரு சந்தேகம். இவ்வளவு சிறிய வடிவில் உள்ள குரங்காகிய நீ எவ்வாறு கிஷ்கிந்தையிலிருந்து கடல் கடந்து வந்தாய். மற்றும் காவல் உள்ள இந்நகரத்தில் நுழைந்து, இங்கு எப்படி வந்து சேர்ந்தாய்? அதை நினைத்தால் என்னால் நம்பமுடியவில்லை. நீ எனது இராமபிரானின் தூதுவன் என்பது உண்மையானால் உன் உண்மையான உருவத்தைக் காட்டுவாயாக.

அநுமன்: தாயே! அதை நிரூபிக்கின்றேன். இதோ என் உருவைக் காணுங்கள். (அநுமன் விண்ணை முட்டும் அளவிற்கு தன் உருவத்தைப் பெருக்கிக் காட்டினான். அவன் மார்பகத்தின் மீது மேகங்கள் தவழ்ந்தன. அவன் முடி மீது விண்மீன்கள் ஒளி வீசின. இதைக்கண்ட சீதை பயந்தே விட்டாள்) இந்த உருவம் கொண்டே கடல் கடந்து வந்தேன். இலங்கை காவல் தெய்வத்தை வென்று, சிறிய வடிவில் இங்கு வந்தேன்.

சீதை: அநுமனே! போதும்! போதும்! உன் உருவை சுருக்கிக் கொள். அரக்கர்கள் யாரேனும் கண்டால் ஆபத்து. (உடனே அநுமன் தன் உருவைச் சுருக்கிக் கொண்டு பழைய வடிவில் பணிந்து நின்றான்)

அநுமன்: தாயே! இப்போதாவது என்னை நம்பினீர்களே! மிக்க மகிழ்ச்சி. என்னை வாழ்த்துங்கள் தாயே!

சீதை: அநுமனே! பல்லாண்டு பல்லாண்டு வாழ்வாயாக! பல வெற்றிகளைப் பெறுவாயாக! ஏன் என் ஐயன் இன்னும் என்னை வந்து மீட்கவில்லை. இந்த இராவணனாலும், இந்த அரக்கியர்களாலும் "செந்நாய்களின் இடையே அகப்பட்ட மான் போல" நான் படும் துன்பத்தை நீயே நேரில் பார்த்தாய் அல்லவா? இன்னும் எத்தனை காலம் நான் இப்படி துன்பப்பட வேண்டுமோ? தெரியவில்லை. (இவ்வாறு சீதை உள்ளமும், உடலும் தளர்ந்து அசோகமரத்தின் மீது சாய்ந்தாள்) அதைக் கண்ட அநுமன் பதைபதைத்தான்)

அநுமன்: தாயே! மனம் தளர வேண்டாம். இனி வருந்த வேண்டாம். நீங்கள் இருக்கும் இடம் தெரியாமல் இராமபிரான் படும் துயரம் சொல்ல முடியாது. நான் சென்று உடனே இராம பிரானை அழைத்து வந்து, இராவணனை அழித்து, உம்மை மீட்கச் செய்கின்றேன். இது உறுதி.

சீதை: அநுமனே! என் ஐயன் இராமபிரான் எனக்குச் சொன்ன செய்திகளைக் கொண்டு தான், நான் உம்மை முழுமையாக நம்ப முடியும். சொல்! சொல்!

அநுமன்: தாயே! இந்த அரக்கர்கள் சூழ்ச்சியைக் கண்டு மனம் தளர்ந்துள்ள நீங்கள் அடியேனை நம்புவதற்கென்றே பல அடையாள நிகழ்ச்சிகளைச் சொல்லி அனுப்பியுள்ளார். அவற்றைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

சீதை: வாயு புத்திரனே! கூறுங்கள். அவற்றைக் கேட்க மிகவும் ஆவலாக உள்ளேன்.

அநுமன்:

"நெறிந்த கருங்குழல் மடவாய் நின்னடியேன் விண்ணப்பம்
செறிந்த மணிமுடிச் சனகன் சிலை யிறுத்து நினைக்கொணர்ந்த
தறிந்து அரசுகளைகட்ட அருந்தவத்தோன் இடைவிலங்க
செறிந்த சிலை கொடு தவத்தைச் சிதைத்ததுவுமோர் அடையாளம்"

தாயே! உமது அடியவனாகிய யான் கூறும் அடையாளத்தைக் கேட்பீராக! இரத்தினங்கள் பதிக்கப்பட்ட முடிகளை யணிந்த உமது தந்தை சனக மகாராசன் சபையில், உம்முடன் பிறந்த வில்லை ஒடித்து, உம்மைத் திருமணம் கொண்டு, அயோத்திக்கு இராமபிரான் திரும்புகையில், இராமபிரானை எதிர்த்த, இருபத்தேழு தலைமுறை அரசர்களைக் கொன்று குவித்த பரசுராமனது வில்லை வாங்கி, வளைத்து, அம்பைப் பூட்டி, அந்த அம்புக்கு இலக்காக பரசுராமனது தவ வலிமையை அழித்த இராமபிரானது செயலை ஓர் அடையாளமாகக் கூறினார்.

சீதை: வாயு புத்திரரே! நீர் சொன்ன அடையாளத்தைக் கேட்டவுடன் என் மனம் மகிழ்ச்சியடைகிறது. உனது வருகையால் எனக்கு நன்மையுண்டாகட்டும். இன்னும் என்ன அடையாளங்களைக் கூறினார் சொல்லும்.

அநுமன்:

"வாரணிந்த முலைமடவாய் வைதேவீ விண்ணப்பம்
தேரணிந்த அயோத்தியர்கோன் பெருந்தேவீ கேட்டருளாய்!
கூரணிந்த வேல்வலவன் குகனோடும் கங்கைதன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதுமோர் அடையாளம்"

பெருமைக்குரிய வைதேவியாகிய சீதா தேவியே! நீரும் இராமபிரானும், இலக்குவனும் கங்கா நதியைக் கடக்க உதவிய வேடர் தலைவனான குகனோடு நட்பு கொண்டதுவும் ஓர் அடையாளமாகக் கூறினார் இராமபிரான்.

சீதை: ஆகா! என்னே அருமையான நிகழ்ச்சி. இன்றும் என் கண்முன்னே அக்காட்சியை அழகாகக் காட்டிவிட்டீர். நினைக்க நினைக்க உள்ளம் உருகும் அருமையான காட்சி. இன்னும் என்ன அடையாளங்களைக் கூறினார் கூறும்.

அநுமன்: எனதருமைத் தாயே! உமது முகத்தில் சிறிதளவு மகிழ்ச்சியைக் காணும் என் உள்ளம் உகக்கின்றது. இன்னும் கூறுகின்றேன் கேளும்.

"மானமரும் மென்நோக்கி வைதேவீ விண்ணப்பம்
கானமரும் கல்லதர்போய் காடுறைந்த காலத்து
தேனமரும் பொழிற்சாரல் சித்திரக் கூடத்திருப்ப
பான்மொழியாய் பரதநம்பி பணிந்ததுமோர் அடையாளம்

சிறிய சலனத்தைக் கண்டு மருளக்கூடிய மான் போன்ற குணமுடைய எனது அருமைத் தாயே, கூர்மையான பரற்கறற்களையும், முட்களையும் உடைய காடுகளை யெல்லாம் கடந்து; நீர் இராமபிரானோடு சித்திரக்கூட மலைச் சாரலில் தங்கியிருந்த போது, உங்களை மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் சென்று, இராமபிரானுக்கு முடிசூட்ட விரும்பி, சித்திரக்கூடத்திற்கு ஓடோடி வந்து, உங்களை பரத நம்பி பணிந்து வேண்டியதும் ஓர் அடையாளமாகக் கூறினார் இராமபிரான்.

வைதேவி: வாயு புத்திரா! என்னே உருக்கமான காட்சி. பரதனின் பேரன்பும், பணிவும் இன்றும் என்னை மகிழ்விக்கின்றன. அவர் பாதுகையைப் பெற்றுக் கொண்டு, பிரிய மனமின்றி உள்ளம் வருந்த வாட்டமுடன் சென்ற காட்சி எனது மனத்தை உருக்குகின்றது. எவ்வாறு உள்ளரோ என் மைத்துனர் பரதாழ்வார். ஹூம், என் செய்வது.

அநுமன்: தாயே! கலங்காதீர். இன்னும் சிறிது நாட்களுள் எனது ஐயன் இராமபிரான் உங்களை மீட்க வந்து விடுவார். இன்னுமோர் அடையாளம் கூறுகின்றேன் கேளும்.

"சித்திரக் கூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே! இராமாவோ! நின்னபயம் என்றழைப்ப
அத்திரமே அதன்கண்ணை அறுத்துதமோர் அடையாளம்"

சீதா தேவியே! சித்திரக் கூடத்தில் ஒருநாள் இராமபிரான் உமது திருமடியில் உறங்கிக் கொண்டிருந்தபோது; இந்திரன் மகன் ஜயந்தன் காக்கை உருக்கொண்டு உமது மார்பகத்தைக் கொத்தி விட, பீறிட்டெழுந்த இரத்தம் இராமபிரான் முகத்தில் பட, விழித்தெழுந்த ஐயன் காரணம் கேட்க; நீர் காக்காசுரனைச் சுட்டிக்காட்ட; கோபித்த ஐயன் அருகிலிருந்த அருகம் பில்லை

பிரம்மாஸ்திரமாக காகாசுரன் மீது ஏவி விட; அவ்வம்பு துரத்த, இந்திரன், பிரமன், சிவன் முதலியவர்களைச் சரணடைந்தும், அவர்களால் காக்க முடியாமையால், மீண்டும் ஓடோடி வந்து உமது திருவடிகளில் விழவும்; நீர் அவன் மீது கருணை கொண்டு, அவனை இராமபிரான் திருவடிகளில் சரணம் அடையும்படிச் செய்யவும்; ஐயன் இராமபிரான் அவன் செய்த பாபத்திற்கு ஒரு கண்ணின் பார்வையை நீக்கி, சரணாகதி அடைந்ததால் அவன் உயிரைக் காத்து அருள் புரிந்ததும் ஓர் அடையாளம். என்னே உமது கருணை. உமக்குத் தீங்கு செய்த காக்காசுரனுக்கு உயிர் பிச்சை அளித்த உமது அருளுக்கு இணையேதும் உண்டோ.

ஜானகி: ஆகா! என்னே வியப்பு! இந்த நடுநாயகமான நல்ல நிகழ்ச்சியை எடுத்துக்கூறி, ஆத்மத் தந்தையான இராமபிரானின் காத்தல் தன்மையையும், தவறுக்கு தண்டனையளிக்கும் கடமை உணர்வையும், எடுத்துக் கூறினீர். மிக்க மகிழ்ச்சி. இன்னும் என்ன அடையாளம் கூறினார்? அவற்றைக் கூறும் வாயுபுத்திரரே!

வாயுபுத்திரன் :

"மின்னொத்த நுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம்
பொன்னொத்த மான் ஒன்று புகுந்தினிது விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்து எம்பிரா னேக
பின்னே அங்கிலக்குமணன் பிரிந்ததுமோர் அடையாளம்"

தாயே! நீங்கள் கானகத்தில் இருக்கும் போது, உங்களைப் பிரிப்பதற்காகச் சூழ்ச்சி செய்த இராவணன் மாரீசனை பொன்மானாக உருவெடுத்து உம்முன் விளையாடும்படிச் செய்தான். அந்த மான் உண்மையான மான் என்று நம்பி, நீர் அம்மானைப் பிடித்துத் தரும்படி இராமபிரானை வேண்டினீர். இது மாய மான் என்று கூறியும், கேளாது பிடிவாதம் பிடித்தீர். உம்மீது உள்ள அன்பினால் அம்மானைப் பிடிக்க முயன்றபோது, அது அகப்படாமல் அங்கிருந்து ஓட ஆரம்பிக்க, ஐயன் அதைத்தொடர்ந்து துரத்திச் சென்றார். கைக்கு அகப்படாமல் ஓடுவதைக் கண்டு அம்பெய்த; மாயமானான மாரீசன் இறக்கும்போது;

சீதா! இலக்குமணா! என்று இராமபிரான் குரலில் கத்தியதைக் கேட்ட நீவிர்; இராமபிரானுக்கு ஆபத்து என்று கருதி, இலக்குமணனை உடனே செல்லும்படிக் கூறினீர். ஆனால் இலக்குமணரோ இராமபிரானுக்கு எந்த ஆபத்தும் வராது, அந்தக் குரல் மாரீசன் குரல், கவலைப்படாதீர் என்று கூறினார். நீர் அவரைப் பழித்துக் கூற, பாதுகாப்புக் கோடு கிழித்து, மனமின்றி பிரியவும், இராவணன் மாறுவேடத்தில் வந்து, உம்மைப் பிரித்ததுவுமோர் அடையாளம்.

வைதேவி: எனதருமைப் புதல்வனே! என் மதி கெட்டு, மாய மானை உண்மை மானென்று நம்பி, இராமபிரானை நானே பிரியும்படிச் செய்தேன். அதுமட்டுமின்றி, உத்தம பாகவதரான எனதருமை மைத்துனரை கடுமையான கொடிய வார்த்தைகளால் பேசினேன். எனவே பாகவத அபசாரம் என்னைச் சில நொடிகளில் பிரித்து, இங்கு வந்து, இந்த கொடிய அரக்கர்களிடையே, "ஓநாய்களின் இடையே அகப்பட்ட மான்போல" மிகவும் துன்பப்படுகின்றேன். நான் "அலைகடலில் அகப்பட்ட துரும்பென" அல்லலுருகின்றேன். அநுமனே! இதுவரை வெளிப்படையாக நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினீர். எங்கள் இருவருக்கும் நடந்த அந்தரங்க நிகழ்ச்சிகள் எதையேனும் அடையாளமாகக் கூறினாரா? கூறும்.

வாயுபுத்திரன்: ஆம் தாயே! அந்தரங்கமான ஒரு அடையாளத்தையும் சொல்லியனுப்பியுள்ளார். கூறுகின்றேன், கேளும்.

"அல்லியம் பூமலர்க் கோதாய் அடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க் கண்மடமானே!
எல்லியம் போதினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில்
மல்லிகை மாமாலை கொண்டு அங்கு ஆர்த்தது மோர்
அடையாளம்"

தாயே! அயோத்தியில் ஒருநாள் இரவு நீங்கள் இருவரும் சதுரங்கம் ஆட, இராமபிரான் தோற்க, அவரை நீங்கள் மல்லிகை மாலையினால் ஒரு முகூர்த்த நேரம் கட்டி இருந்தது. ஓர் அந்தரங்க அடையாளமாகும். இனியாவது அடியேனை இராம தூதனாக நம்பி, உமது தாசனாகவும், புதல்வனாகவும் ஏற்றுக் கொள்வீராக.

வைதேவி: வாயுபுத்திரரே ! இனி எனக்கு எந்த ஐயமும் இல்லை. இந்த இறுதி அடையாளம் என்னை அயோத்திக்கே அழைத்துச் சென்று விட்டது. இனி உம்மைச் சந்தேகிப்பது மிகுந்த பாபமாகும். உன்னை முழுதும் நம்புகின்றேன். நீ எனது பக்தனாவாய். எனது அருமைப் புதல்வனுமாவாய். கவலைப்படாதே. எனது ஐயன் எனக்கெந்த பொருளையும் கொடுத்தனுப்பவில்லையா?

வாயுபுத்திரன்: கொடுத்தனுப்பியுள்ளார் ! விலைமதிப்பும், பெருமையும், உயரியதுமான ஒரு பொருளைக் கொடுத்தனுப்பியுள்ளார்.

"மைத்தகுமா மலர்க்குழலாய் வைதேவி விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட
அத்தகுசீர் அயோத்தியர் கோன்அடையாளம் இவை மொழிந்தான்
இத்தகையால் அடையாளம் ஈதவன்கை மோதிரமே!"

தாயே! மிதிலை நகரில் உங்கள் திருமணத்தின் போது உமது தந்தை சனக மகாராசன் இராமபிரானுக்குத் திருமணப் பரிசாக கையில் அணிவித்த இந்த மோதிரத்தை அடையாளமாகத் தரும்படிக் கொடுத்து அனுப்பினார். இதோ பெற்றுக் கொள்வீராக!

சீதை: ஆஹா! என்னே என் ஐயனின் அன்பும் பாசமும். இதையறியாமல் அவர் மீது கோபம் கொண்டிருந்தேனே!

"திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்றநாள்
மிக்கபெரும் சபைநடுவே வில்லிறுத்தான் மோதிரம்கண்டு
ஒக்குமால் அடையாளம் அநுமான் என்றுச்சிமேல்
வைத்துக் கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே"

அனைத்து உலகத்தாராலும், அனைத்து திசைகளில் வாழ்வோராலும் புகழக்கூடிய எனது தந்தை சனக மகாராஜனின் சபையில்; யாராலும் தூக்கியெடுத்து வளைக்க முடியாத வில்லை, மிகவும் சுலபமாகத் தூக்கி நிறுத்தி, வளைத்து, ஒடித்த எனது ஐயன் இராமபிரானுக்கு எனது தந்தை திருமணப் பரிசாக அளிக்கப்பட்ட மோதிரம் இதுவேதான். ஐயமில்லை. இதனை என் உச்சி மேல் வைத்து மகிழ்கின்றேன். எனது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அநுமன்: தாயே! இப்போதாவது யான் கூறிய அடையாளங்களை நம்பினீர்களே! மிக்க மகிழ்ச்சி. இனி கவலையற்று இருங்கள். யான் உணவருந்தி பல நாட்களாயின. இந்த சோலையிலுள்ள பழங்களைப் பறித்துத் தின்ன அனுமதிக்க வேண்டும்.

சீதை: மகனே! நீ உன் விருப்பம் போல் உண்டு விரைவில் வந்து விடு. அரக்கர்கள் கண்டால் ஆபத்து.

(அநுமன் அசோகவனத்தில் புகுந்து, பழங்களைப் பறித்துத் தின்றதோடல்லாமல், அசோகவனத்தை அழித்து, அரக்கர்களை அடித்துத் துன்புறுத்தினான். பல அரக்கர்களைக் கொன்றான். அரக்கர் பயந்து ஓடிச் சென்று இராவணனிடம் தெரிவித்தனர். இராவணன் அனுப்பிய பல அரக்கர்கள் அழிய, இறுதியில் இந்திரஜித் வந்து அநுமனை பிரம்மாஸ்திரத்தால் கட்டி, அரச சபைக்கு அழைத்துச் சென்றான். இராவணனைக் காண இதுதான் தக்க வாய்ப்பு என்றறிருந்து அநுமனும் அமைதியாகச் சென்றான். இராவணன் "யாரடா குரங்கே! நீ! எங்கு வந்தாய்? ஏன் அசோக வனத்தை அழித்து, அரக்கர்களைக் கொன்றாய்?" என்று கேட்டான். அநுமன், தான் இராமதூதன் என்று கூறி, சீதையை இராமபிரானிடம் ஒப்படைத்து, மன்னிப்புக் கேட்டு, பிழைத்துப் போகும்படியும் கூறினான். இதைக்கேட்டு இராவணன் கனலெனக் கொதித்தான். தூதுவனுக்குத் தரவேண்டிய மரியாதையைத் தராமல் அநுமனின் வாலில் துணியைச் சுற்றி, எண்ணெய் ஊற்றி, தீயிடும்படி ஆணையிட்டான். இந்த செய்தி சீதைக்கு எட்டியது. சீதை அக்கினி பகவானை நினைத்து அநுமனுக்கு யாதும் தீங்கு செய்ய வேண்டாம் என்று வேண்டினாள். அநுமன் வாலில் வைத்த தீயினால் இலங்கைக்கு தீ மூட்டினான். இலங்கையில் அசோகவனம் தவிர மற்ற இடங்களிலெல்லாம் தீ பற்றி இலங்கை எரிந்து கொண்டிருந்தது. இராவணன் முதலாக இலங்கைவாழ் அரக்கர்கள் அனைவரும் ஆச்சரியப்பட்டு அல்லலுற்றனர். அநுமன் கடலில் தன் வாலில் ஏற்பட்ட தீயை அணைத்து, சீதையின் முன்னே வந்து வணங்கி நின்றான்).

சீதை: அநுமனே! என்ன காரியம் செய்து விட்டாய். தனியாளாக வந்து, இத்தகைய பெரும் அழிவினைச் செய்துவிட்டாயே! இனியும் நீ இங்கிருந்தால் உனக்குப் பெரும் துன்பம் உண்டாகும். நீ உடனே புறப்படு. என் ஐயன் இன்னும் ஒரு மாத காலத்திற்குள் என்னை வந்து

மீட்கவில்லையென்றால், நான் உயிரை மாய்த்துக் கொள்வேன். எனக்குரிய இறுதிக் கடனை கங்கைக் கரையில் செய்துவிடச் சொல். இதோ என் சூடாமணியைத் தருகின்றேன். இதைப் பத்திரமாக எடுத்துச் சென்று என் ஐயனிடம் கொடுக்கவும். உனக்கு வழியில் எந்தவித இடையூறும் உண்டாகாமல் பயணம் நன்கு அமையட்டும். நீ என்றும் சிரஞ்சீவியாக வாழ்வாயாக! சென்று வா.

அநுமன்: தாயே! உம்மை இந்த நிலையில், இந்த அரக்கர்களிடம் விட்டு எவ்வாறு செல்வேன். என் மனம் நிலை கலங்குகிறது அம்மா. உங்களை என் தோளின் மேல் எடுத்துச் செல்ல எண்ணுகின்றேன். அநுமதி தாருங்கள் அம்மா!

சீதை: அநுமனே! என்னே உன் அன்பின் மிகுதி. அன்பின் மிகுதியால் உன் புத்தியும் கலங்கி விட்டதோ! பசுவுக்குக் கன்றைப் போல, நீ எனக்குப் புதல்வனே ஆனாலும் நீ எண்ணியது சரியன்று. இராவணன் தான் திருட்டுத்தனமாக என்னை எடுத்து வந்தான் என்றால், நீயும் அப்படி நினைக்கலாமா? அது உனது அன்புக்கு அழகல்லவே? அது இராமபிரான் வீரத்துக்கு இழுக்காகும். என்னால் இராவணனைச் சுட்டெரிக்க முடியும். ஐயன் புகழுக்கு இழுக்காகும் என்று எண்ணிதான் இவ்வளவு துன்பங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கின்றேன். எனவே அந்த எண்ணத்தை விட்டு சீக்கிரமே புறப்படு.

அநுமன்: அன்பின் மிகுதியாலும், உங்கள் துயரத்தைக் காண சகிக்க முடியாமலும் அவ்வாறு எண்ணினேன். என்னை மன்னித்து விடும். வாழ்த்துங்கள். அடியேன் இதோ இப்போதே புறப்படுகின்றேன். இராமபிரானை அடைந்து, உமது நிலையைக் கூறி, நீர் சொன்னபடி ஒரு மாத காலத்திற்குள் இலங்கை மீது படையெடுத்து, இராவணனைக் கொன்று, உம்மை மீட்போம். இது உறுதி! தாயே வருகின்றேன். ராம்! ராம்! ஜெயராம்!

(இராம நாமத்தைச் சொல்லிய வண்ணம் தனது விசுவரூபத்துடன் புறப்பட்ட அநுமன், இராமனை அடைந்து, "கண்டேன் சீதையை" என்று

கூறி, சீதை தந்த சூடாமணியை இராமபிரானிடம் தந்து வணங்கி நின்றான். நல்ல செய்தி கொண்டு வந்த அநுமனைக் கட்டித்தழுவி ஆனந்தமடைந்தான் இராமபிரான். பின் வானர வீரர்களுடன் படையெடுத்துச் சென்று, இராவணனைக் கொன்று, சீதையை மீட்டு, அயோத்தி சென்று இராம பட்டாபிஷேகத்தை முடித்து, சீதா தேவியுடன் மகிழ்ந்திருந்தான் இராமபிரான்.

அநுமன் இராம தூதனாகப் புறப்பட்டது முதல் சீதையைக் கண்டு, அடையாளங்களைச் சொல்லி, இலங்கைக்குத் தீமூட்டி, பின் சீதையிடமிருந்து சூடாமணியைப் பெற்றுக் கொண்டு வந்து இராமபிரானிடம் கொடுத்தது வரை சுந்தரகாண்டப் பகுதியைச் சார்ந்த, சிறந்ததோர் பகுதியாகும். அநுமனின் வீரமும், நுண்ணறிவும், சாதுர்யமும், பணிவும், அடையாளங்கள் சொன்ன சொல்லாற்றலும் போற்றப் போற்ற உள்ளம் பூரிக்கும். இவ்வரலாற்றைக் கேட்டவரும், படித்தவரும் துன்பங்கள் நீங்கி இன்பம் பெறுவது "உள்ளங்கை நெல்லிக் கனி" ஆகும். இராமாயணத்தில் சுந்தரகாண்டமே சிறந்த காண்டமாகும். இக்காண்டத்தில்தான் "சீதையின் ஏற்றம்" சிறப்பிக்கப்படுகிறது. சீதையின் தியாக உள்ளமும், பக்தர்களுக்காக பத்து மாதம் சிறையிலிருந்த பாங்கும் பளிச்சிடுகிறது. இதனால்தான், "ஸ்ரீராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் கூறுகின்றது" என்று சீதையின் சிறப்பு கூறப்படுகிறது. "துயரம் தீர சுந்தர காண்ட பாராயணம் செய்" என்று பெரியோர்கள் கூறியிள்ளனர். எனவே நாமும் இந்த அநுமன் தூது அடங்கிய சுந்தரகாண்டப் பகுதியைப் படித்து, துயர் நீங்கி இன்பம் அடைந்து நீடுழி வாழ்வோமாக!)

ராம! ராம! ராம! ராம! ராம! ராம! ஹரே ஹரே!

"சரணம் சரணம் அநுமந்தா!
தந்தருள்வாய் வரம் அநுமந்தா!



"அந்தரத் தமரர் வாழ்த்தும்
ஆதியாய் நின்ற சோதி
சுந்தர ஆஞ்ச நேயா
சூர சம்மார தீரா
உன்தனைப் புகழ்ந் துரைக்க
உன்வர லாற்றை யெல்லாம்
என்தன் நாவினில் உரைக்க
எனக்கருள் புரிகு வாயே!"

# முதலாழ்வார்களும் முகில் வண்ணனும்

ஆழ்வார்களுக்கெல்லாம் முன்னம் தோன்றி நற்றமிழால், அந்தாதிப் பாடல்களால் வேதக் கருத்துக்களை அருளிச் செயல் பாசுரங்களாக, நாட்டு மக்கள் உய்யும் வண்ணம் பாடியருளியதால்; பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதலாழ்வார்கள் என்று போற்றப்பட்டனர்.

காஞ்சிப் பெரியவர் பொய்கையார் கவிஞர் போரேறு என்றும்; கடல்மல்லைக் கவிஞர் பூதத்தார் ஞானத்தமிழன், பெருந்தமிழன் என்றும்; திருமயிலைப் பேயாழ்வார் தமிழ்த்தலைவன் என்றும் போற்றும் பெருமைக்குடையவர்கள். இம்மூவரும் ஒரு சமயம் திருக்கோவலூரில் மழைநாளில் இடைகழியில் சந்தித்து இறைவனைக் காண, பக்திச்சுடர் விளக்கேற்றி, திருமாலின் திருவுருவை ஞானமென்னும் உட்கண்ணால் கண்டு வணங்கிய பெருமை உடையவர்கள். இனி, அவர்கள் சந்தித்ததையும், விளக்கேற்றியதையும், முகில்வண்ணனைக் கண்டு வணங்கிய வரலாறும் காண்போம்.

இம்மூவரும் எம்பெருமானுடைய குணங்களை அனுபவித்துக் கொண்டு ஒவ்வொரு திருப்பதியாகச் சென்று, அங்கு எழுந்தருளியுள்ள பெருமாளைக் கண்ணாரக் கண்டு, வாயாரப் பாடி, கைகளால் வணங்கி வந்தனர். ஒரு நாள் தங்கிய இடத்தில் மறுநாள் தங்காமல் ஓடித்திரியும் ஞானிகளாய் ஒருவரை ஒருவர் சந்திக்காமல் தனித்தனியே புனிதப் பயணம் செய்து வந்தனர். இம்மூவரையும் ஓரிடத்தில் சந்திக்க வைத்து, அவர்கள் மூலம் உலகத்தை வாழ்விக்க திருமால் திருவுள்ளம் கொண்டார்.

ஒரு நாள் கதிரவன் மறைந்த பின்பு பெருமழையும், பெருங்காற்றும் உண்டாயின. நடந்து திரிந்து கொண்டிருந்த மூவரும் தங்குமிடம் தேடினர். மூவரும் மூன்று திசைகளில் இருந்து திருக்கோவலூர் எனும் திருப்பதியை அடைந்தனர். முதலில் பொய்கையார் மிருகண்டு முனிவரின் திருமாளிக்கைக்குச் சென்று இடைகழியில் படுத்துக் கொண்டிருந்தார். சற்று நேரத்திற்கெல்லாம் பூதத்தாழ்வாரும் அதே இடத்திற்குச் சென்று, பொய்கையாழ்வாரைக் கண்டு வணங்கினார். பொய்கையாரும் பூதத்தாழ்வாரை வணங்கினார். ஒருவர் மட்டும் படுக்க இருந்த இடத்தில் இருவரும் உட்கார்ந்திருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம் பேயாழ்வாரும் அங்கு வந்து சேர்ந்தார். மூவரும் ஒருவரையொருவர் வணங்கிக் கொண்டனர். மூவரும் நின்று

கொண்டிருந்தனர். திருமால் குணங்களைக் கூறுவதும் கேட்பதுமாக காலம் கழித்துக்கொண்டிருந்தனர்.

திருக்கோவலூரில் எழுந்தருளியுள்ள உலகளந்த பெருமான் முன்னிலும் அதிக இருட்டும் அதிக மழையும் பொழியும்படிச் செய்தார். அத்துடன் பெரிய உருவத்துடன் சென்று அவர்கள் கண்களுக்குத் தோன்றாமல் அவர்களை நெருக்கினார்.

**பொய்கையார்:** பூதத்தாழ்வாரே! நாம் மூவரும் சிரமமின்றி நின்று கொண்டு, எம்பெருமான் குணங்களைக் கூறியும் கேட்டும் வந்தோம். ஆனால், தற்போது வேறு யாரோ ஒருவர் நம்மிடையே புகுந்து நம்மை நெருக்குவது போல் தோன்றுகின்றதே.

**பூதத்தார்:** பொய்கையாரே! நீர் சொல்லுவது முற்றிலும் உண்மையே. இந்த இருட்டில் யார் என்று தெரியவில்லையே! என் செய்வது? பேயாழ்வாரே! உமது கண்களுக்குத் தோன்றுகின்றதா? கூறும்.

**பேயாழ்வார்:** பொய்கையாழ்வாரே! பூதத்தாழ்வாரே! நீங்கள் இருவரும் கூறுவது முற்றிலும் உண்மையே. ஆனால் அடியேன் கண்களுக்கும் தோன்றவில்லையே. யாராக இருக்கக்கூடும். நமது கண்களுக்குப் புலப்படாமல் நம்மை நெருக்குவது சாதாரணமானவராக இருக்க முடியாது. ஒருவேளை நம்மை சோதிக்க எம்பெருமான் உலகளந்துப் பெருமாள் நினைத்தாரோ! அவர்தான் இங்கு எழுந்தருளியுள்ளாரோ! பொய்கையாரே! புற இருளை நீக்க ஒளி விளக்கேற்ற எந்தவித விளக்கும் நம்மிடம் இல்லையே! என் செய்வோம்?

**பொய்கையார்:** பேயாழ்வாரே! உமது கருத்துப்படி உலகளந்தான் திருவிளையாடலாக இருந்தாலும் இருக்கலாம், சற்றே பொறும். அடியேன் ஒரு விளக்கு ஏற்றுகின்றேன்.

மண்ணை உண்டு, மண்ணை அளந்து, மண்ணைக் காத்த உலகளந்தானைக் காண; உலகத்தையே அகலாக்கி, கடலையே நெய்யாக்கி, கதிரவனையே ஒளியாக்கினேன். இனி இருப்பது யார் என்று காண்போம்.

"வையம் தகளியா வார் கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன் மாலை
இடராழி நீங்குகவே யென்று"

**பேயாழ்வார்:** பொய்கையாழ்வாரே! நீர் ஏற்றிய விளக்கில் திரி எதுவும் போடவில்லையே, நெய்யை இழுத்து வெப்பமாக்கி ஒளியாக்க திரி அவசியம் வேண்டுமல்லவா. திரியோடு ஒரு விளக்கேற்ற வேண்டுமே! என் செய்வது, பூதத்தாரே திரியோடு கூடிய விளக்கொன்றை விரைவில் ஏற்றும்.

**பூதத்தாழ்வார்:** பேயாழ்வாரே! நீர் கூறுவது முற்றிலும் உண்மையே! உமது கட்டளைப்படி இதோ யான் ஒரு விளக்கேற்றுகின்றேன்.

அன்பாகிய பக்தியை அகலாகவும், ஆர்வத்தை நெய்யாகவும், இன்புருகும் உள்ளத்தைத் திரியாகவும், ஞானமாகிய சுடர் விளக்கை இதோ ஏற்றுகின்றேன் பாரும்.

இப்போதாவது மறைந்து நிற்பவர் யார் என்று தெரிகிறதா பாரும்.

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"

**பேயாழ்வார்:** பொய்கையாரே! பூதத்தாரே! நீங்கள் இருவரும் ஏற்றிய விளக்குகளால் நம்மிடையே மறைந்து நிற்பவர் யார் என்று கண்டு கொண்டேன். உலகளந்த பெருமானே நம்மிடையே வந்து நின்று நம்மை நெருக்குகின்றான். அவன் உருவம் இவ்வாறு உள்ளது.

திருமகளாகிய ஆத்மத் தாயைக் கண்டேன். பொன் போன்ற மேனியையும், கருநீல வண்ணத்தையும், அவனது வலது கரத்திலே சக்கரத்தையும், இடது கரத்திலே சங்கினையும் ஏந்தியுள்ள திருவுக்கும் திருவான திருமாலைக் கண்டேன்.

"திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்க னணிநிறமும் கண்டேன், செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்ஆழி வண்ணன்பால் இன்று"

**பொய்கையார், பூதத்தார், பேயார்:** உலகளந்த பெருமானே! உள்ளம் உவந்து, எம்மோடு வந்து இருந்து, உமது மாயையைக் காட்டி, எங்களைத் திகைக்க வந்த எம்பெருமானே! நீர் எங்கும் நிறைந்து இருப்பதால்

விஷ்ணு எனும் பெயரையும், அனைத்துப் பொருள்களிலும் நிறைந்திருப்பதால் நாராயணன் எனும் பெயரையும்

"கரந்த பாலில் நெய்யே போலும்"

"உடல்மிசை உயிரென கரந்தெங்கும் பரந்துளீர்" என்பதை எண்ணிப் பார்க்க முடியாமல் போனோம். தற்போது உண்மை உணர்ந்தோம். அடியோங்களுக்கு அருள்புரிவீராக!

**உலகளந்தான்:** (அசரீரியாக) பொய்கையாரே! பூதத்தாரே! பேயாழ்வாரே! இவ்வுலகில் தோன்றிய மக்கள்; தோற்றுவித்த என்னையும், பூதவுடல் கொண்டு செய்ய வேண்டிய பகவத் தொண்டையும், பாகவத தொண்டையும் மறந்து; சம்சாரமாகிய பெருங்கடலிலே விழுந்து துன்பம் அடைகின்றனர். அவர்களைக் கரையேற்றி பரமபதம் அழைத்துக் கொள்ள திருவுள்ளம் கொண்டு பல அவதாரங்களை எடுத்தேன். பல தர்மங்களைப் புகட்டினேன். எனினும் பலன் கிட்டவில்லை.

"யானையைப் பிடிப்பார் யானையைக் கொண்டே
யானையைப் பிடிப்பார்" அதுபோல

இம்மனித சாதியாரைப் பிடித்து பரமபதம் அழைத்துச் செல்ல நித்திய சூரிகளாக விளங்கிய உங்களை மனித சாதியிலே தோற்றுவித்தேன். எம்பெருமானாகிய என்னைப் பற்றியும், எனக்கு அவர்கள் செய்ய வேண்டிய பகவத் தொண்டைப் பற்றியும், எனக்கு விருப்பமான என் அடியவர்களாகிய திருமால் அடியார்களுக்குச் செய்ய வேண்டிய பாகவத தொண்டைப் பற்றியும், அவர்கள் அறிந்த தமிழ் மொழியில் எளிய நடையில் பாசுரங்களைப் பாடுங்கள், அவர்களைப் பரவசப்படுத்துங்கள். அவர்களுக்கு இறையுணர்வில் ருசியை உண்டு பண்ணுங்கள். பலன் கிட்டும். தொண்டே செய்து என்றும் தொழுது வழி ஒழுகப் பண்டே பரமன் ஆகிய நான் பணித்த பணிவகையை அவர்களுக்கு உணர்த்துங்கள். பின்பு மீண்டும் பரமபதம் வாருங்கள்.

**முதலாழ்வார்கள் மூவரும்:** உலகளந்த பெருமானே! உமது கட்டளையை சிரமேற்கொண்டு செயலாற்றுவோம். உம் புகழ்பாடி, உலகில் திரிந்து, உலகமக்களைத் திருத்திப் பணி கொள்வோம்.

"மூவுலகளந்தான் திருவடிகளே! சரணம்!"
முதலாழ்வார்கள் திருவடிகளே! சரணம்!"

# திருமழிசையும் திருவெஃகாவும்

திருமால் மக்களை இவ்வுலகில் தோற்றுவித்தான். அனைத்துப் பிறவிகளிலும் மக்கட் பிறப்பே மிகச்சிறந்தது. ஏனெனில் எது நன்று, எது தீது, எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்பதைப் பிரித்து அறிய உதவுகின்ற பகுத்தறிவு மனிதனுக்கு மட்டுமே உண்டு. இதைக் கொண்டு தம்மைத் தோற்றுவித்தவன் யார்? அவனுக்குத் தாம் செய்ய வேண்டிய தொண்டுகள் யாவை? அவன் விரும்பும் தொண்டு யாது? என்பதையெல்லாம் ஆராயாது, உண்டு, உறங்கி, உலகச் சிற்றின்பங்களையே அனுபவித்து, சம்சாரமாகிய கடலிலே விழுந்து துன்பப்படுகிறான். இதையறிந்த திருமால் மனம் மிக வருந்தினான். அவர்கள் செய்ய வேண்டியது இறைவனது தொண்டும், திருமால் அடியார்களுக்குத் தொண்டுமேயாகும். இதனையே

**"திருமாலுக்கு அடிமை செய், தீவினை அகற்று"**

என்று தமிழ்ப்பெரு மூதாட்டி ஔவையும்,

**"திருமாலடியார்களை பூசிக்க நோற்றோமே"**

என்று ஆழ்வாரும்,

**"தொண்டே செய்து, என்றும் தொழுது வழி ஒழுகப் பண்டே பரமன் பணித்த பணிவகையே"**

என்று நம்மாழ்வாரும்,

**"தொண்டு பூண்டு அமுதம் உண்ணா தொழும்பர்"**

(தொண்டு செய்யாமல் உண்டு வசிப்பவர் கீழ்மக்கள்)

என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும் கூறியுள்ளனர்.

இப்படி இறைவனது தொண்டையும், திருமால் அடியார் தொண்டையும் செய்யாமல் துன்பப்படும் மக்களைத் திருத்திப் பணி கொள்ள, திருமால் திருவுள்ளம் கொண்டார். வேதங்கள், புராணங்கள், சாத்திரங்கள், வேதக்கருத்துகள் அடங்கிய திருமந்திரம் முதலியவற்றைத் தோற்றுவித்தார். அவற்றை அறிந்து, அதன்படி நடவாமல் போயினர். யானையைக் கொண்டே யானையைப் பிடிப்பாரைப் போல, இந்த மனித சாதியாரை நல்வழிப்படுத்தி, பரமபதம் பிடித்துச் செல்ல தானே "இராம, கிருஷ்ண அவதாரங்களை எடுத்து, மக்களிடையே மக்களாகப் பழகி,

அவர்களுக்கு அநீதியின் கொடுமைகளையும், நீதிகளின் நன்மைகளையும் எடுத்துக் காட்டினார். இது ஒரு காலக் கட்டமே. அப்பொழுதும் மக்கள் திருந்தவில்லை. எனவே, மக்கள் என்றும் கண்ணாரக் கண்டு வணங்கி, நற்பேறு பெற எளிய முறையாக கல், மரம் உலோகங்களால் செய்யப்பட்ட அர்ச்சை எனும் உருவ வடிவங்களாக முனிவர்களாலும், பக்தர்களாலும் எழுந்தருளும்படியாக நூற்றெட்டு திருப்பதிகளில் இருந்து வருகின்றான். இந்நிலை எளிமையானதால் இதனை,

"அர்ச்சை தேங்கிய மடுக்களின் நீர்போல"

என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. இப்படித் தோன்றிய திருப்பதிகளுள் சில திருப்பதிகள் பல காரணங்களால் சிறப்பு வாய்ந்தவையாகும். அவற்றுள் பொய்கையார் தோன்றிய காஞ்சியில் உள்ள திருவெஃகாவின் சிறப்பையும் — திருமழிசைப் பிரான் தோன்றிய திருமழிசையின் சிறப்பையும்; அந்தந்த திருப்பதிகள் கூறுவதன் மூலம் இங்கு காண்போம்.

(திருவெஃகாவும் திருமழிசையும் ஒன்றையொன்று சந்தித்து உரையாடுகின்றன)

திருவெஃகா: வாரும் திருமழிசையே! நலமா? உம்மூரில் தோன்றிய ஆழ்வார் திருமழிசைப் பிரானும், ஜெகன்னாதாப் பெருமாளும் நலமா?

திருமழிசை: வாரும் திருவெஃகாவே! நானும், எம்மூர் ஆழ்வாரும் எம்பெருமானும் நலமே. நீர் நலமோ? உமது திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் நலமா? பொய்கையார் நலமா? அவர் தோன்றிய திருக்குளம் நலமா? நீர் நிறைந்து, மலர்கள் பூத்து எம்பெருமான் வழிபாட்டுக்கு மலர்களைத் தருகின்றதா? யான் பலவளமும் பெற்று பெருஞ் சிறப்புடன் வாழ்கின்றேன். எனக்கு இணை இந்த உலகத்தில் யார் இருக்க முடியும்?

திருவெஃகா: திருமழிசையே! நலம் கூறினீர். கேட்க மிக மகிழ்ச்சி. என்னிடமும் எம்பெருமான் எழுந்தருளியுள்ளான். என்னிடம் உள்ள திருக்குளத்தில் தாமரைப் பூவிலே பொய்கையாழ்வார் தோன்றியுள்ளார். என் காஞ்சியும் பல வளமும் பெற்றுள்ளது. அப்படியிருக்க உமக்கு இணை இவ்வுலகில் யாருமில்லை என்று கர்வத்துடன் கூறிகின்றாயே இது தவறல்லவா?

திருமழிசை: என் பெருமையை யான் கூறவில்லையே. சான்றோர் அல்லவா கூறுகின்றனர். அது எப்படித் தவறாகும்?

திருவெஃகா: அப்படி என்ன சிறப்பாகக் கூறியுள்ளனர் கூறும்.

திருமழிசை: கூறுகின்றேன் கேளும். கேட்டு மகிழும். கேட்டு அதன் பின் பேசும். "மன்னு திருமழிசை" (நிலை பெற்றுள்ள திருமழிசை) என்று நான் பாராட்டப்பட்டுள்ளேன். அது மட்டுமா!

" **உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து, தம்மில்**
**புலவர் புகழ்க்கோலால் தூக்க — உலகுதன்னை**
**வைத்தெடுத்த பக்கத்தும், மாநீர் மழிசையே**
**வைத்தெடுத்த பக்கம் வலிது.**

என்னை ஒரு தட்டிலும், உலகை ஒரு தட்டிலும் வைத்து தராசு கொண்டு நிறுத்தால் நான் வைக்கப்பட்ட தட்டே பெருமையெனும் புகழ் பளுவால் தாழும் என்று கூறினாரே இதிலிருந்தே தெரிந்து கொள்ளும் என் பெருமையை.

திருவெஃகா: திருமழிசையே! வீணாகக் கர்வம் கொள்ளாதே! என்னையும் தான் புலவர்கள் புகழ்ந்துள்ளார்கள். என்னையும் என் மற்ற நண்பர்கள் ஆறு பேரையும் சேவித்தால் முக்தி கிடைக்கும் என்று கூறினார்களே தவிர, உம்மை சேவித்தால் முக்தி கிடைக்கும் என்று கூறவில்லையே!

"**முக்தி தரும் நகர் எழில் முக்கியமாம் கச்சி**"

ஏழு நகரங்களில் எனக்கே முதலிடம் தந்துள்ளாரே! மற்றும் கார்மேனி வண்ணன் பேரருளாளன் எழுந்தருளியுள்ள காஞ்சி மாநகரத்துக்கு பாவங்களையெல்லாம் போக்கக் கூடிய காசி போன்ற நகரங்களெல்லாம் ஒப்பாகாது என்றும் கூறியுள்ளனரே.

"**காசி முதலாய நன்னகரியெல்லாம் கார் மேனி அருளாளர் கச்சிக்கு ஒவ்வா**" என்று சிறப்பித்துக் கூறியுள்ளனரே.

திருமழிசை: நீ சிறந்தவன் என்று பாடினால் மட்டும் போதுமா? உன்னிடத்தில் பிறந்த ஆழ்வார் பொய்கையாரை விட என்னிடம் பிறந்த ஆழ்வாரின் பெருமையே அதிகம். கூறுகின்றேன் கேள். **உலகின் துயர் தீர** "திருச்சந்த

விருத்தம்" பாடிய மழிசைப்பிரான் அல்லவா எங்கள் ஊர் ஆழ்வார். சிவபெருமானே அவரிடம் தோற்று, அவருக்கு "பக்தி சாரர் " என்று "பட்டப் பெயர்" சூட்டினாரே! இதனையே சான்றோர் "**தாரணியின் துயர்தீரத் திருச்சந்த விருத்தம் செய் திருமழிசைப் பிரான் வருமூர்**" என்று பாராட்டியுள்ளனர். அது மட்டுமா! எம்மாழ்வார் பல சமயங்களிலும் சென்று, ஆராய்ந்து, பரம்பொருளை யார் என்று உணராமல், பின்பு திருமாலே பரம் பொருள் என்று உணர்ந்து பாடிய ஆழ்வார் அல்லவா? அவரையே வாழ்த்து என்றல்லவோ புலவர் பாடினர் அதைக் காண்பாய்!

**"நாராயணன் படைத்தான் நான் முகனை — நான்முகனுக்கு**
**ஏரார் சிவன் பிறந்தான் என்னுஞ்சொல் — சீரார்**
**மொழி செப்பி வாழலாம் நெஞ்சமே — மொய்பூ**
**மழிசைப் பரனடியே வாழ்த்து "**

திருவெஃகா : திருமழிசையே! வீணாகக் கர்வம் கொள்ளாதே! உம்மாழ்வரை விட எம்மாழ்வாரே பல வழிகளிலும் சிறந்தவர். கூறுகின்றேன் கேள். ஆழ்வார்களுள் எம்மாழ்வாரே முதல்வர். உம்மாழ்வார் நான்காம் வரிசையிலே வைத்து எண்ணப்படுபவர் ஆவர். இதனையே "**பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார், புகழ்மழிசை ஐயன்**" "**வருந்தும் புறவிருள் மாற்ற எம்பொய்கைப் பிரான்**" என்று கூறப்பட்டுள்ளது.

திருமழிசை : ஐயோ! திருவெஃகாவே! எம் ஊரில் பிறந்த ஆழ்வாரின் சிறப்பை இன்னும் கூறுகின்றேன் கேள். என்னிடம் பிறந்த ஆழ்வார் பெரும்புலியூரில் தங்கியிருந்தபோது அவர் திரும்பிய பக்கமெல்லாம் அவ்வூர் பெருமாளும் அதே திசைகளில் எல்லாம் திரும்பினாரல்லவா! அதுமட்டுமா! உன்னிடம் எழுந்தருளியுள்ள எம்பெருமான், கணிக் கண்ணன் என்ற பக்தன் நாடு கடத்தப்பட்ட போது அவனது குருவான என் ஆழ்வாரும் உடன் செல்லத் தீர்மானித்து, உன் பெருமாளையும் எழுந்து வரச் சொன்னபோது, உடன் சென்றவரல்லவா உம்பெருமான். மற்றும் திருக்குடந்தையில் கிடந்த கோலத்தில் இருந்த

ஆராவமுதப் பெருமானை "எழுந்திருந்து பேசு" என்றவுடனே எழுந்தாரல்லவா! இப்படி அர்சாவதாரப் பெருமான்களைத் தான் சொன்னபடியெல்லாம் ஆட்டு வித்தவரல்லவா என் ஆழ்வார்.

திருவெஃகா : திருமழிசையே! வீணாகப் பெருமை பேசாதே! உம் ஆழ்வாரைத் திருத்திப் பணி கொண்டவர் எங்கள் பேயாழ்வார்தானே. அவருடைய சீடர்தானே உம் ஆழ்வார். சீடரின் பெருமை குருவைத்தானே சேரும். இதைவிட எம் பெருமானின் சிறப்பைப் பற்றிக் கூறுகின்றேன் கேளும்.

காஞ்சி பேரருளாளனுக்காக பிரமன் சரசுவதியின் துணையின்றி யாகம் செய்ய, கோபித்த கலைமகள் வேகவதியாகப் பிறந்து ஓடிவந்தாளே! வேகத்தால் யாகம் கலைந்து விடுமே என்று பயந்து, எம்பெருமான் குறுக்கே படுத்து, வெள்ளத்தைத் தடுத்து யாகத்தைக் காத்து பேரருளாளனாகத் தோன்றியவர் எம் பெருமான் தானே! இத்தகைய சிறப்பு உனக்கும் உன் பெருமானுக்கும் உண்டோ!

சாரம்: திருமழிசையும் திருவெஃகாவும் பேசிக் கொண்ட இந்த உரையாடலின் மூலம் கீழ்க்காணும் சிறப்புகளை நாம் நன்கு உணர முடிகிறது.

1. திருமழிசையின் பெருமையும், திருவெஃகாவின் பெருமையும்,

2. திருமழிசைப் பிரான் பெருமையும், பொய்கையார் பெருமையும்,

3. திருவெஃகாவில் எழுந்தருளிய சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளும், பெரும்புலியூர் பெருமாளும், திருக்குடந்தை ஆராவமுதப் பெருமாளும் ஆழ்வாருக்காக அவர் சொன்னபடியெல்லாம் செய்த சிறப்பையும்,

4. எம்பெருமானிடம் ஆழ்ந்த பக்தி கொண்டால் எம்பெருமான் அடியவர்க்காக எதையும் செய்வான் என்பதையும்,

5. ஆழ்வார்கள் பிறப்பதாலும், எம்பெருமான் எழுந்தருளுவதாலும் அந்தந்த ஊர்களெல்லாம் திருப்பதிகளாகக் கருதப்பட்டு சிறப்படைகின்றன என்பதையும்,

6. இத்திருப்பதிகளை சேவிப்பதால் முக்தியடையலாம் என்பதையும் அறிகின்றோம்.

நாம் அனைவரும் இத்திருப்பதிகளுக்குச் சென்று ஆழ்வார்களையும், எம்பெருமான்களையும் சேவித்து முக்தி அடைவோமாக !



திருமழிசையாழ்வார்

# மாறனும் மதுரகவிகளும்

திருமால் உகந்து எழுந்தருளிய திருப்பதிகளுள் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆழ்வார் திருநகரியும், திருக்கோளூரும் முறையே நம்மாழ்வாரும் (சடகோபர்) மதுரகவி ஆழ்வாரும் பிறந்த ஊர்களாகும்.

ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்த காரியார் தம்பதிகள் வேண்டுத லுக்கிணங்க, திருக்குறுங்குடி நம்பியே ஒரு தெய்வீகப் பண்பு வாய்ந்த குழந்தையாகப் பிறந்தார். அக்குழந்தை பிறந்தது முதல் பால் குடிக்காமலும், அழாமலும் இருந்தது. அதைக் கண்டு வருந்திய பெற்றோர் அக்குழந்தையை, அவ்வூர் ஆதிநாதப் பெருமாள் திருக்கோயில் கருவறையில் கிடத்தி, தங்கள் குறைபோக்க வேண்டினர். சடம் என்னும் வாயுவை வென்றதால் அதற்கு சடகோபர் என்று பெயரிட்டனர். அனந்தாழ்வான் அம்சமாகத் தோன்றியிருந்த புளிய மரத்தினடியில் தொட்டிலிட்டு பாதுகாத்து வளர்த்து வந்தனர். இப்படியே பதினாறு ஆண்டுகள் கழிந்தன. சடகோபர் அந்த புளிய மரத்தடியிலேயே பத்மாசனம் இட்டு அமர்ந்து மௌனியாக இருந்து வந்தார்.

அருகே உள்ள திருக்கோளூர் என்னும் திருப்பதியில் பிறந்த மதுரகவிகள் வடதேச யாத்திரை சென்று, அயோத்தியில் தங்கியிருந்தார். அப்போது சடகோபரைப் பற்றி கேள்விப்பட்டார். ஒருநாள் அவருக்கு ஒரு பேரொளி தென்பட்டது. அந்த ஒளியைத் தொடர்ந்து திருக்குருகூர் வந்தபோது ஒளி மறைந்தது. அவ்வூர் மக்கள் மூலம் சடகோபரைப் பற்றி கேள்விப்பட்டார். திருக்கோயில் சென்று சடகோபரைக் கண்டார். அவருக்கு உணர்ச்சி உள்ளதா என்று அறிய அவர் முன் ஒரு சிறு கல்லையெடுத்துப் போட்டார். சடகோபர் கண்விழித்துப் பார்த்தார். உடனே மதுரகவிகள் அவருக்குப் பேச்சு உண்டோ என்று அறிய விரும்பினார்.

மதுரகவிகள் : சடகோபரே! அசித்தாகிய உடலிலே அணு அளவான உயிர் தோன்றினால் அது எதை உண்டு எங்கு இருக்கும்? (செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?)

சடகோபர் : மதுரகவியாரே! அந்த ஆத்மாவாகிய உயிர் அந்த உடலைச் சார்ந்த இன்ப துன்பங்களை அனுபவித்துக்

கொண்டு அந்த உடலையே சார்ந்து கொண்டிருக்கும். (அத்தைத் தின்று அங்கே கிடக்கும்)

மதுரகவிகள் : சடகோபரே! உமது விளக்கம் மிக மிக நன்று. மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். உமது திருவடிகளையே சரணமாகப் பற்றுகின்றேன். அடியேனை உமது சிஷ்யனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனுடைய திவ்விய குணங்களையும், நிலைகளையும், வேதக் கருத்துக்களையும் அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும்.

சடகோபர் : மதுரகவிகளே! நீர் மிகுந்த ஆவலுடனும், பக்தியுடனும் கேட்டுக் கொண்டதற்கிணங்க உம்மை எமது சிஷ்யராக ஏற்றுக் கொள்ளுகின்றேன். பஞ்ச சம்ஸ்காரத்தைப் பெற்றுக் கொள்ளும். எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் தான் முழு முதற் கடவுள். அவனே மேலானவன். எளிமையும் இரக்கமும் உடையவன். அவனே வேதத்தின் சாரமாவான். அவனை அடைவதற்கு ஆசாரியனே உறுதுணை செய்வான்.

மதுரகவிகள் : ஆசாரியப் பெருமானே! ஆசாரியரின் பெருமைகளை அடியேனுக்கு உரைத்தருள வேண்டுகின்றேன்.

சடகோபர் : மதுரகவிகளே! கேளும்.

1. ஆசாரியர் உறவின்றி இறைவனுடன் உறவு கிட்டாது.

2. ஆசாரியரே இறைவனுடன் உறவை ஏற்படுத்துகின்றார்.

3. சேதனன் சம்சாரமாகிய கடலைக் கடந்து இறைவனை அடைய ஆசாரியரே தெப்பமாக உதவுகின்றார்.

4. அனைவருக்கும் தலைமையான ஆசாரியர் எம்பெருமானே.

5. எம்பெருமானே ஆசாரியராக இருந்து நரநாராயணனுக்கு திருமந் திரத்தையும், பெரிய பிராட்டிக்குத் துவய மந்திரத்தையும், அர்ச்சுனனுக்கு சரம சுலோகத்தையும் வெளியிட்டருளினார்.

6. ஆசாரியர் அறியாமையாகிய இருளை நீக்கி, அறிவாகிய ஒளியைப் புகட்டுவார்.

7. ஆசாரியர் சிஷ்யனுடைய ஆருயிரைக் காப்பாற்றுவார்.

8. சாத்திரங்கள் குருவை எம்பெருமானோடு சமமாகக் கொண்டாடுகின்றன.

9. ஆசாரியர் இறைவனின் தூதுவராவார்.

10. ஆசாரியர் எம்பெருமானுக்குச் சமமானவர்.

11. ஆசாரியரைக் கண்ணால் கண்டு சேவித்து பலன் பெறலாம்.

12. ஆசாரியர் உபதேசமின்றி மந்திரங்கள் பலன் தராது.

13. ஆசாரியர் நீர்த்துறை போன்று ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றுவார்.

14. ஆசாரிய சம்பந்தத்தால் ஒருவனுடைய முன்னோர்க்கும் பின்னோர்க்கும் மோக்ஷம் கிடைக்கும்.

15. ஆசாரிய நினைவு இன்ப ஊற்றாகும்.

16. ஒரு பெண்ணுக்கு திருமாங்கல்யம் போல் சிஷ்யனுக்கு ஆசாரியர் ஆவார்.

மதுரகவிகள் : ஆசாரியரே ! மிக்க பேறு பெற்றேன். தேவரீரை ஆசாரியராகப் பெற்றது அடியேன் செய்த நல்வினையேயாகும். இன்று முதல் தேவரீர் அருளிய திவ்யப் பிரபந்தங்களைப் பாடிக் களிப்பேன். அடியேனை வாழ்த்தியருள வேண்டும்.

சடகோபர் : மதுரகவிகளே ! உமது உறுதிமொழியைக் கேட்டு மகிழ்கின்றேன். ஆசாரியரை முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானைச் சேர்வீராக!

(ஆசாரியரின் அறிவுரைப்படி ஆசாரிய பக்தியுடன் ஆசாரியர் அருளிய அருளிச் செயல்களைப் பாடிப் பரவி வந்தார். பின்னர் ஆச்சாரியரின் பெருமை பற்றி 10 பாசுரங்களைப் பாடிப் பரவினார். அவை பின்வருமாறு)

மதுரகவிகள் : **நாவுக்கு அமுதம்**

**"கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்**
**பண்ணிய பெரு மாயன் என்னப்பனில்**
**நண்ணித் தென் குருகூர் நம்பி என்றக்கால்**
**அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே."**

கிருஷ்ணாவதார காலத்தில் யசோதையினால் கயிற்றால் கட்டும்போது முதலில் கட்டுக்கு அடங்காமல், தாய் வருந்துவதைக் கண்டு தானே கட்டுண்ட எனது ஆத்மத் தந்தையாகிய திருமாலின் பெயரைச் சொல்வதனால் உண்டாகும் இன்பத்தை விட, எனது ஆசாரியரும், திருக்குருகூரில் அவதரித்தவருமான சடகோபராகிய உமது பெயரைச் சொல்வதால் அடியேனது நாவும், வாயும் அமுதத்தை விட இனிமையைப் பெறுகின்றன.

சடகோபர் : மதுரகவிகளே! திருமாலே பரம்பொருளும், முழு முதற் கடவுளும், நமக்கெல்லாம் முதல் ஆசாரியரும் ஆவார். அப்படியிருக்க அவரது நாமத்தைச் சொல்வதைக் காட்டிலும், உமது ஆசாரியரும் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவனுமான என்னுடைய நாமத்தைச் சொல்வது இன்பம் அளிக்கின்றது என்று நீர் சொல்வது எப்படிப் பொருந்தும்.

மதுரகவிகள் : ஆசாரியரே! நீர் அன்றோ அடியேனுக்கு எம்பெருமானையும், அவனது பெருமைகளையும் காட்டிக் கொடுத்தவர். சாத்திரங்கள், குருவை எம்பெருமானுக்குச் சமமாகக் கொண்டாடுகின்றன என்று நீர் அன்றோ அடியேனுக்கு உபதேசித்தீர். எனவே உமக்கு ஸ்ரீமந் நாராயணன் எப்படி உகந்தவரோ? அதைப் போன்று நீர்தான் எமக்கு உகந்தவர். நீர்தான் எமது பரம்பொருள்.

சடகோபர் : மதுரகவிகளே! மிக்க மகிழ்ச்சி. இத்தகைய சிறந்த சிஷ்யரைப் பெற்றதால் யான் பெருமகிழ்வு அடைகின்றேன். இன்னும் பாடும். இங்கு **"உம் குருக்கள் தம் பதத்தே வையும் அன்புதன்னை"** என்னும் மணவாள மாமுனிகள் வாக்கு நோக்கத் தக்கது.

மதுரகவிகள் : **தேவுமற்றறியேன்**

> "நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்
> மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே
> தேவு மற்றறியேன் குருகூர் நம்பி
> பாவின் இன்னிசை பாடித் திரிவனே."

ஸ்ரீமந் நாராயணனுடைய பெயரைச் சொல்வதைக் காட்டிலும் அடியேனது ஆசாரியரான சடகோபரது பெயரை ஒருமுறை சொன்ன மாத்திரத்திலே நாக்குக்கு அமுதத்தைவிட இன்பம் கிடைத்தது. எனக்கு இனி எம்பெருமான் தெய்வமாவதை விட, என் ஆசாரியனே தேவனாவான். அடியேனும் வேறு யாரையும் தெய்வமாகக் கொள்ள மாட்டேன். எனவே அடியேனது தெய்வமான சடகோபர் இயற்றிய திவ்வியப் பிரபந்தங்களையும், அவரது பெயரையும் பலகாலும் பாடிக்கொண்டே இருப்பேன். அதுவே எனக்குப் பேரானந்தத்தைத் தரும். எனது பொழுதுபோக்கும் ஆகும்.

சடகோபர் : மதுரகவிகளே ! ஆசாரியரது புகழையும், அவர் இயற்றிய பிரபந்தங்களையும் பலகாலும் பாடித்திரிவதே பேரானந்தம் என்று கூறினீர். நீரன்றோ சிறந்த சிஷ்யர். உம்மைச் சிஷ்யனாகப் பெற்றதால் நானும் பேரானந்தம் அடைகின்றேன். இன்னும் பாடும்.

மதுரகவிகள் : அடியேன் பெற்ற நன்மை

"திரிதந்தாகிலும் தேவபிரானுடைக்
கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்
பெரிய வண்குருகூர் நகர் நம்பிக்காள்
உரியனாய், அடியேன் பெற்ற நன்மையே."

கருமாணிக்கக் குன்றினைப் போன்ற எம்பெருமான் தேவபிரானுடைய கரிய கோலத் திருவுருவைக் கண்டுகளிப்பவர் எனது ஆசாரியரான சடகோபர். ஆனால் யானோ எனது ஆசாரியரது திருவுருவைக் கண்டு சேவிப்பது எம்பெருமானைச் சேவிப்பதற்கு ஒப்பாகும் என்று கருதுகின்றேன். எம்பெருமானை ஆசாரியரின் திருவுருவில் கண்டு சேவித்தேன். இதுவே அடியேன் பெற்ற பேறு.

சடகோபர் : திருக்கோளூர் செல்வரே! என்னே உமது ஆசாரிய பக்தி. உம்முடைய ஆசாரிய பக்தியினால் எம்பெருமான் திருவுருவையே ஆசாரிய திருவுருவத்தில் கண்டு சேவித்ததாகக் கூறினீர். இது முற்றிலும் உண்மையே.

மிக்க மகிழ்ச்சி. இன்னும் பாடும். கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கின்றது.

மதுரகவிகள்: **அன்னையும் அப்பனும்**

> "நன்மையால் மிக்க நான் மறையாளர்கள்
> புன்மை யாகக் கருதுவ ராதலின்
> அன்னையாய் அத்தனாய் என்னை யாண்டிடும்
> தன்மையான், சடகோபன் என் நம்பியே"

அடியேன் ஆசாரியரை விட்டு, நேரே எம்பெருமானைப் பற்ற நினைத்தால், என்னை மாபாபி என்று நினைத்து, இவன் பாபங்கள் மன்னிக்க முடியாது என்று, நான்கு வேதங்களையும் அறிந்த சான்றோர்கள் என்னை விலக்கி விடுவர். எனவே யான் ஆசாரியரான உம்மையே சரணமாகப் பற்றினேன். நீர் என்மீது அன்பு காட்டும் அன்னையாகவும், என் மீது பரிவு காட்டி ஆதரிக்கும் தந்தையாகவும், எனது பாபங்களைப் போக்கி எனக்குப் பரமபதத்தை அளிக்கும் தலைவராகவும் விளங்கி, அடியேனை ஆட்கொள்ளுவீராக!

சடகோபர்: மதுரமான கவிகளைப்பாடி என்னை மகிழ்விக்கும் சிஷ்யரே! என்று நீர் எம்மை ஆசாரியராகப் பற்றினீரோ! அன்றே உமக்குப் பரமபதம் உறுதியாயிற்று. யான் உமது விருப்பப்படியே உமக்குத் தாயாகவும், தந்தையாகவும் இருந்து உம்மை ஆட்கொள்ளுவேன். கவலைப் பட வேண்டாம். உமது பாடலைக் கேட்கக் கேட்க என் காதுகள் பேரின்பம் அடைகின்றன. இன்னும் பாடும்.

மதுரகவிகள்: **குருகூர் நம்பிக்கு அன்பன்**

> "நம்பினேன் பிறர்நன் பொருள் தன்னையும்
> நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
> செம்பொன் மாடத்திருக் குருகூர் நம்பிக்கு
> அன்பனாய், அடியேன் சதிர்த்தேன் இன்றே"

சடகோபராகிய அடியேனது ஆசாரியப் பெருமானே! உம்மை அடைந்த நாள் முதலே நான், எனது என்னும் கர்வங்களை நீக்கிக் கொண்டேன். நல்லோர்கள் பொருள்களையும், பிற பெண்களையும் விரும்புவதையும்

ஒழித்து விட்டேன். இனி யான் விரும்பும் ஒரே பொருள் ஆசாரியரான நீரே ஆவீர் என்னும் உறுதிப்பொருளை உணர்ந்து விட்டேன். அடியேனை நல்வழிப் படுத்துவீராக!

சடகோபர் : எனதருமைச் சிஷ்யரே! எம்மை அடைந்த அன்றே நீர் தீயகுணங்களை ஒழித்து விட்டதாகக் கூறினீர். அன்றே நீர் நல்வழிப் பட்டீர்! இன்னும் ஏன் கவலைப்படுகின்றீர். கவலை நீங்கி, களிப்படைவீராக!

மதுரகவிகள் : என்றும் என்னை இகழ்விலன்

"இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான்
நின்று தன்புகழ் ஏத்த வருளினான்
குன்ற மாடத்திருக் குருகூர் நம்பி
என்றும் என்னை இகழ்விலன் காண்மினே!"

ஆழ்வாரே! உம்மை ஆசாரியராக அடைந்த நாள் முதல் இனி வரும் காலங்களிலெல்லாம் உமது திவ்விய குணங்களையே நினைந்து, பேசி, துதிக்கும் மெய்யறிவைப் பெற்று விட்டேன். அப்படியே உமது குணங்களையும், நீர் அருளிச் செய்த திவ்வியப் பிரபந்தங்களையும் தினமும் மக்களுக்குப் புகட்டுவேன். அனைவரையும் நல்வழிப்படுத்துவேன்.

சடகோபர் : மதுரகவிகளே! உமது குறிக்கோள் உயர்ந்ததாகும். தான் மட்டும் நல்வழிப்படுவதோடு நில்லாமல் மற்றவர்களையும் நல்வழிப்படுத்துவதற்கு அன்றோ எம்பெருமான் நம்மைத் தோற்றுவித்தார்.

"தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப்
பண்டே பரமன் பணித்த வகை" அல்லவா.

உமது தொண்டு தொடரட்டும். பரமன் பரந்தாமன் பணித்த பணி சிறக்கட்டும். உமக்கு எனது மங்களா சாசனங்கள்.

மதுரகவிகள் : பண்டை வல்வினை போக்கினான்

"கண்டுகொண் டென்னைக் காரிமாறப் பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினான்

எண்டிசை யும்அறிய வியம்புகேன்
ஒண்டமிழ்ச் சடகோப னருளையே"

ஆழ்வாரே! உம்மைச் சரணமாக அடைந்த அடியேனை ஆதரித்து எனக்கு அருள் சுரந்தீர். அது மட்டுமன்றி, பண்டைக் காலந்தொட்டு என்னைப் பற்றியிருந்த பலவிதமான பாடங்களையெல்லாம் போக்கி அருளினீர். ஆசாரியரது குணங்களைப் போற்றி உலக மக்கள் அனைவரும் அறிந்து, நற்பயன் அடையும்படிச் செய்ய வேண்டியது சிஷ்யன் கடமையாதலால், உமது நற்குணங்களைப் போற்றி, உலகோர் அறியும்படிச் செய்வேன்.

சடகோபர்: திருக்கோளூர் அவதரித்த கவிகளே! உமது கடமை என்ன என்பதை உணர்ந்து, செயல்படுவதாகக் கூறியதைக் கேட்ட என் உள்ளம் பூரிக்கின்றது. உமது செயல் சிறக்க என் வாழ்த்துக்கள்.

மதுரகவிகள் இன்றமிழ் பாடினான்

"அருள் கொண்டாடும் அடியவர் இன்புற
அருளினான் அவ்வரு மறையின் பொருள்
அருள்கொண் டாயிரம் இன்தமிழ்ப் பாடினான்
அருள் கண்டீரிவ் வுலகினில் மிக்கதே"

எம்பெருமான் சிறந்த பெருமைகளைக் கொண்டாடும் பக்தர்கள் மகிழும்படியாக சிறந்த வேதக் கருத்துக் களையெல்லாம் ஓராயிரம் இனிய தமிழ்ப் பாசுரங்களில் அமைத்து திருவாய்மொழி என்னும் திவ்வியப் பிரபந்தத் தைப் பாடியருளினீர்! இத்தகைய சிறப்பு வாய்ந்த, தேவரீர் கருணை உலகில் என்றும் சிறந்தோங்கும்.

சடகோபர்: மதுரகவிகளே! யான் பாடித்தந்த வேதக் கருத்துக்களை நீர் எவ்வாறு உணர்ந்துள்ளீர் என்பதை உமது இன்றமிழ் கவியினில் பாடுவீராக!

மதுரகவிகள்: நெஞ்சுள் நிறுத்தினான்

"மிக்க வேதியர் வேதத்தி னுட்பொருள்
நிற்கப் பாடிஎன் நெஞ்சுள் நிறுத்தினான்

தக்கசீர் சடகோப னென்நம்பிக்கு, ஆட்
புக்க காத லடிமைப் பயனன்றே."

உபாயங்களுள் சரணாகதி எப்படி உயர்ந்ததோ, அப்படியே, பலன்களுள் பகவத் தொண்டிற்கு எல்லை நிலமான பாகவதத் தொண்டே உயர்ந்தது என்பதையும்; அதுவே வேதத்தின் உள்ளடங்கிய பொருள் என்பதையும், நீர் பாடியருளிய திருவாய் மொழியின் மூலம் உறுதியாக உணர்ந்தேன். திருக்கல்யாண குணங்களையுடைய, சடகோபர் ஆகிய எமது ஆசாரியரான உமக்கு அடிமை செய்யும் பேற்றினை யான்பெற்றதே பெரும் பேறாகும் என்பதையும் உணர்ந்தேன்.

சடகோபர் : மதுரகவியே! மிக்க மகிழ்ச்சி. என்னே யான் பெற்ற பேறு. உம்மை சிஷ்யனாகப் பெற்றது பெறுவதற்கரிய பேறாகும். உமது ஆசாரிய பக்தி பல்கிப் பெருகி, பேரின்ப வெள்ளமாகப் பாயட்டும்.

மதுரகவிகள் : திருத்திப் பணி கொள்வான்

"பயனன் றாகிலும் பாங்கல்ல ராகிலும்
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்
குயில்நின் றார்பொழில் சூழ்குரு கூர்நம்பி
முயல்கின் றேன்உன்றன் மொய்கழற் கன்பையே"

ஆழ்வாரே! எம்பெருமான் குணக்கடலில் ஆழ்ந்திருக்கும் நீவிர்; பகவத், பாகவதத் தொண்டு செய்வதற்கு, தகுதியற்ற வர்களையும், திருத்திப் பணி செய்விக்கத் தகுதியற்ற வர்களையும், உமது பெருங்கருணையாலே திருத்தி அவர்கள் செயல் எம்பெருமான் திருவுள்ளத்திற்கு விருப்பமாகும்படிச் செய்தீர். இத்தகைய கருணைக் கடலாகிய உமது திருவடிகளிலே என்றும் மாறாத பக்தியுடன் வாழ்ந்திருக்க முயலுகின்றேன். அடியேனுக்கு அருள்புரிவீராக!

சடகோபர் : தேனினும் இனிய மதுரமான கவிகளைப்பாடி எனது மனத்தை மகிழ்வித்த மதுரகவிகளே! இதுவரை நீர் பாடிய கவிகளில் நீர் கூறிய பகவத், பாகவத, ஆசாரிய, சிஷ்ய சம்பந்தமான கருத்துக்களைப் படிப்பவரும், கேட்பவரும்

அடையும் நன்மைகள் யாவை? அவை எத்தகையவை என்பதைப் பாடுவீராக!

மதுரகவிகள்: வைகுந்தம் காண்மினே

"அன்பன் தன்னை அடைந்தவர் கட்கெல்லாம்
அன்பன், தென்குரு கூர்நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவி சொன்ன சொல்
நம்புவார் பதி, வைகுந்தம் காண்மினே"

எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனைப் பற்றிய அனைத்து பக்தர்களிடத்திலும் சிறந்த பேரன்புடையவர் நீர். அத்தகைய சிறந்த ஆசாரியராகிய உம்மிடம் சிறந்த ஆசார்ய பக்தியுடையவன் அடியேன். அடியேன் சொன்ன இப் பத்துபாடல்களும், வேதக்கருத்துக்களையும், சாஸ்திர அர்த்தங்களையும் கூறும் பாடல்கள் என்று நம்பி, அதன்படி ஆசாரிய பக்தியில் சிறந்து விளங்குபவர்கள் விரைவில் தவறாமல் பரமபதம் அடைவார்கள்.

இதுவரை நம்மாழ்வாரும், மதுரகவிகளும் சந்தித்து உரையாடிய கருத்துக்களின் சாரம் "ஆசாரிய பக்தியே எளிதில், விரைவில் பரமபதம் நல்கும்" என்பதை உணர்ந்தோம். எனவே நாமும், ஞானம் உடைய ஆசாரியரை அடைந்து அவரது கருணையால் பரமபதமாகிய பேரின்பம் அடைவோமாக!

  

---

"உண்டோ வைகாசி விசாகத்துக்கு ஒப்பொருநாள்
உண்டோ சடகோபர்க்கு ஒப்பொருவர் – உண்டோ
திருவாய் மொழிக்கு ஒப்பு தென்குருகைக் குண்டோ
ஒருபார் தன்னிலொக்கு மூர்"

---

## நம்மாழ்வார்

ஆன திருவிருத்தம் நூறும் அருளினான் வாழியே!
ஆசிரியம் ஏழு பாட்டு அருளினான் வாழியே!
ஈனமற அந்தாதி எண்பத்தேழு ஈந்தான் வாழியே!
இலகு திருவாய்மொழி ஆயிரத்து ஒருநூற்று
இரண்டுரைத்தான் வாழியே!

வானணியும் மாமாடக் குருகை மன்னன் வாழியே!
வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே!
சேனையர் கோன் அவதாரம் செய்த வள்ளல் வாழியே!
திருக்குருகைச் சட கோபன் திருவடிகள் வாழியே!

## மதுரகவிகள்

ஏரார் மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள் — பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்
உற்ற தெமக்கென்று நெஞ்சே ஓர்.

சித்திரையில் சித்திரை நாள் சிறக்க வந்தோன் வாழியே!
திருக்கோளூர் அவதரித்த செல்வனார் வாழியே!
உத்தர கங்கா தீரத்து உயர் தவத்தோன் வாழியே!
ஒளி கதிரோன் தெற்குதிக்க உகந்து வந்தோன் வாழியே!
பத்தியொடு பதினொன்றும் பாடினான் வாழியே!
பராங்குசனே பரனென்று பற்றினான் வாழியே!
மத்திமமாம் பதப் பொருளை வாழ்வித்தான் வாழியே!
மதுரகவி திருவடிகள் வாழி! வாழி! வாழியே!



# வில்லவர்கோனும், வித்துவக் கோட்டம்மானும்

திருமால் நம்மையெல்லாம் நல்வழிப்படுத்த அர்ச்சை நிலையிலே (திருமேனி) தானே உகந்து எழுந்தருளிய திவ்விய தேசங்களில் மலையாள நாட்டிலுள்ள திருவித்துவக்கோடும் ஒன்றாகும். இவ்வூர் இயற்கை வளங்கள் நிறைந்த ஊராகும். குலசேகர மன்னனின் ஆட்சிக்குட் பட்டிருந்தது. இத்திருப்பதியில் திருமால் வித்துவக்கோட்டம்மான் என்னும் பெயருடன் எழுந்தருளி அருள் சுரந்து வருகின்றார்.

மன்னராயிருந்த குலசேகரரை ஸ்ரீமந் நாராயணன் தன்பால் பக்திகொள்ள திருவுள்ளம் கொண்டார். திருமாலிடத்தில் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்த காரணத்தினால் குலசேகரர் ஆழ்வார் என்று அழைக்கப்பட்டார். இறையுணர்வில் தான் மட்டும் இன்பமடைவதை விரும்பாமல் தன் நாட்டு மக்களையும் ஈடுபடுத்தி அவர்களையும் இன்பமடையச் செய்தார். திருமாலின் அவதாரங்களில் இராமாவதாரத்தில் ஈடுபட்டு தன் சபையிலே இராமகாதையைக் கூறும்படிச் செய்து, மக்களுடன் தாமும் கேட்டு இன்புற்றார்.

பின்னர் திருவரங்கம், திருவேங்கடம் போன்ற திவ்விய தேசங்களுக்குச் சென்று, அந்த எம்பெருமான்களை சேவித்து மகிழ விரும்பினார். தனது நாட்டிலுள்ள திருவித்துவக்கோடு என்ற திவ்விய தேசம் சென்று, அங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் போற்றிப் பாடினார். தன்னையும் அவரையும் பலவித உறவுகளாகப் பாவித்துப் பாடி மகிழ்ந்தார். அவற்றை இங்கு காண்போம். தலைவன் – தலைவி, தாய் – குழந்தை, மன்னன் – மக்கள், மேகம் – பயிர், கடல் – நதி, கதிரவன் – தாமரை, கப்பல் – பறவை போன்ற பலநிலைகளில் பாடி மகிழ்ந்ததைக் காண்போம்.

மக்கள் தங்கள் குறைகளை இறைவனிடத்தில் கூறி, அவனது திருவடிகளையே வணங்கி, குறைகளைப் போக்கும்படி வேண்டுகின்றனர். அப்படியிருந்தும் அவரவர் செய்த தீவினைக்கேற்ப குறைகளைப் போக்குவதில் காலதாமதம் செய்வதோடு, முழுமையாகப் போக்குவ தில்லை. எனவே அவர்கள் செய்த தீவினைப் பயனை அனுபவித்தே தீர வேண்டியுள்ளது. உண்மையுணராதவர் இறைவனை வெறுப்பதும் உண்டு. பழிப்பதும் உண்டு. உண்மையுணர்ந்தவர் தாம் செய்த தீவினைப் பயன்

என்று உணர்ந்து, அப்போதும் இறைவனை வெறுக்காமல், அவனை வணங்குவதில் தவறுவதில்லை. பின்னே கூறிய நிலையில் நின்று குலசேகரர் வித்துவக் கோட்டம்மானை வணங்குகின்றார். இக்கருத்தினை

> **"தீதும் நன்றும் பிறர் தர வாரா,**
> **நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன"** என்று புறநானூறும்,
>
> **"மொய்த்த வல்வினையுள் நின்று"** என்று திருமாலையும்,
>
> **"தீயவை செய்தார் நெடுதல் நிழல்தன்னை**
> **வீயாது அடிஉறைந் தற்று"** என்று திருக்குறளும்

கூறுவது இங்கு நோக்கத் தக்கனவாகும்.

குலசேகரர் நமக்காக, தம்மை முன்னிட்டுக் கொண்டு வித்துவக் கோட்டு எம்பெருமானிடம் வேண்டுகின்றார். நாம் செய்யும் குற்றங்களை அவர் செய்ததாகக் கூறி, அருள் புரியும்படி நமக்காக வேண்டுகின்றார்.

## தாய், சேய் உறவு

குலசேகர ஆழ்வார்:

> **தருதுயரம் தடையேல் உன்சரணல்லால் சரணில்லை**
> **விரைகுழுவும் மலர்ப்பொழில்சூழ் வித்துவக் கோட்டம்மானே!**
> **அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்**
> **அருள்நினைந்தே அழுங்குழவி அதுவேபோன் றிருந்தேனே.**

உயிர்க்கெல்லாம் தாயாய் அளிக்கின்ற தண்டாமரைக் கண்ணா! திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! யான் உமது அடியவன். தன் குழந்தையின் மீது மிகுந்த அன்புடைய தாயானவள் மிகுந்த கோபத்தினால் அதை வெறுத்துத் தள்ளினாலும், அக்குழந்தை தன் தாயின் அன்பையே நினைத்து, அவளைப் பின் தொடர்ந்து செல்லுமே அல்லாமல் வேறெங்கும் செல்லாது. அதைப்போல் நீர் எனது மூன்றுகால துயரங்களைப் போக்கவில்லையென்றாலும், என் தீவினையின் பொருட்டு என் மீது அருள் புரியாமல் என்னை வெறுத்து ஒதுக்கினாலும் யான் உமது திருவடிகளை வணங்குவதை விட்டு, விலக மாட்டேன். எனவே என் மீது அருள் பொழிவீராக!

| | |
|---|---|
| வித்துவக்கோட்டு எம்பெருமான்: | எனதரும் புதல்வரே! வாரும், உமது வரவு கண்டு மகிழ்கின்றேன். நீர் கூறியபடி உமது துயரங்களைப் |

போக்குவது எனது கடமைதான். அதைப் போக்காமல் இருப்பதும் எனது தாய் நிலைக்கு சரியல்லதான். இருப்பினும் நீர் செய்த தீவினைகட்கு ஏற்ற துன்பங்களை அனுபவிக்கவில்லை என்றால் மீண்டும் தவறுகளை செய்து கொண்டே இருப்பீர்! துன்பங்களை அனுபவித்து மனம் திருந்தி வாரும். உம்மை வாரி அணைத்து உச்சி மோந்து மகிழ்வேன். கவலைப்படாதீர். சென்று வாரும்.

## தலைவன் – தலைவி உறவு

குலசேகர ஆழ்வார்:

**"கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்**
**கொண்டானை யல்லால் அறியாக்குல மகள்போல்**
**விண்டோய் மதிள்புடை சூழ்வித்துவக் கோட்டம்மா! நீ**
**கொண்டாளா யாகிலும் உம்குரைகழலே கூறுவனே"**

வித்துவக்கோட்டு எம்பெருமானே! தனது கணவன் பிறர் இகழும்படியான இழிச்செயல்களைச் செய்தாலும் தன் கணவனையன்றி மற்ற ஆண்களை தன் மனத்தில் நினைக்க மாட்டாள் நல்ல குலத்தில் பிறந்த பத்தினிப் பெண். அதைப் போல அடியேன் மனத்தினில் தூய்மையற்றும், வாயினால் இனிய சொல்லைப் பேசாமலும், செயலால் நல்ல செயல்களைச் செய்யாமலும் இருந்து பிறர் இகழும்படியானவனாக இருந்த காரணத்தினால் என்னை வெறுத்து ஒதுக்கினாலும், உம்மை விட்டு பிரியாமல், உமது திருவடிகளையே வணங்கி, பிற தெய்வங்களை வணங்க மாட்டேன்.

வித்துவக்கோட்டு எம்பெருமான்! குலசேகரரே! நான் உம்மை வெறுத்து ஒதுக்கின போதும், எனது திருவடிகளையே வணங்கியிருக் கின்றீரே! ஏன்?

குலசேகர ஆழ்வார்: வித்துவக்கோட்டு எம்பெருமானே! அடியேனது குறிக்கோள் பரமபதத்தை அடைய வேண்டு மென்பதே தவிர வேறில்லை. அத்தகைய திருநாட்டை அளிக்கக்கூடியவர் உம்மைத் தவிர வேறு எத்தெய்வங்களாலும் முடியுமோ? முடியாது. இத்தகைய சிறப்பைப் பெற்ற உமது திருவடி களையே அடியேன் வணங்குவதற்கு வேறு காரணம்

ஏதேனும் இருக்க முடியுமோ! முடியாது. இதனையே,

**"நாராயணனே நமக்கே பறை தருவான்"** என்கின்றார் ஆண்டாள்.

ஏன்! நீரே பாரதப் போரில் தேர் தட்டில் நின்று பார்த்தனிடம்

**"நான்தான் பரம்பொருள் என்னையே சரணாகப்பற்று"**

என்று கூறியுள்ளீர். இவற்றை விட வேறு காரணங்களும் வேண்டுமோ?

வித்துவக்கோட்டு எம்பெருமான்: குலசேகரரே! நன்று சொன்னீர்! மிக்க மகிழ்ச்சி. இன்னும் என்னைப் பாடும். கேட்க மிக்க ஆவலாக உள்ளேன்.

## மன்னனும் – மக்களும்

குலசேகர ஆழ்வார்:

**" மீன் நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மா.
என்பால் நோக்கா யாகிலும்உன் பற்றல்லால் பற்றிலேன்
தான் நோக்கா தெத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே! "**

"மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" என்றபடி நாட்டின் மன்னனையே தங்கள் உயிராகக் கருதுவர் மக்கள். அதேபோல் நாட்டு மக்களின் நல்வாழ்வே தன் நல்வாழ்வாகக் கருதுவான் நல்ல மன்னன். எனவேதான் "திருவுடைய மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்றார் பெரியோர். அத்தகைய மன்னன் மக்களின் நலம் கருதாமல் தீமையே செய்தபோதும், அந்த மன்னனின் சிறந்த நல்லாட்சி ஆகிய செங்கோலையே மக்கள் விரும்பி, ஆவலுடன் எதிர்நோக்கி இருப்பர். அதைப்போல் நீரும் எனக்குத் துன்பத்தையே தந்து, இன்பத்தைத் தரவில்லையென்றாலும், உம்மையே துணையாகக் கொள்வனே அல்லாது வேறு யாரையும் துணையாகக் கொள்ள மாட்டேன். எனவே அடியேனுக்கு அருள்புரிந்து நன்மையைத் தருவீராக!

வித்துவக்கோட்டு எம்பெருமான்: ஆஹா! என்னே ஆச்சரியம். ஆழ்வாரே எங்கு கற்றீர்? இத்தகைய அருமையான உவமையினை. இதற்கென்ன காரணம் கூறப்போகின்றீர்?

குலசேகர ஆழ்வார்: பெருமானே! உமது அருளே! அடியேன் வாக்கினில் வெளிப்படுகின்றது. காக்கின்ற தன்மையால் நீரும் மன்னனும் ஒன்றானதால்தானே உமக்கும்

மன்னனுக்கும் "கோ" என்றும்; மன்னன் வாழும் அரண்மனைக்கும், நீர் வாழும் ஆலயத்திற்கும் "கோயில்" என்றும் பெயரிட்டனர். பெருமானே அடியேன் உம் திருக்கோயிலை வந்தடைந்து உம்மைச் சரணமாகப் பற்றினேன். என்னைக் காத்தருள்வீராக!

வித்துவக்கோட்டு எம்பெருமான் : எனதருமைக் குடிமகனான குலசேகரரே! உமது விளக்கம் கேட்டு எல்லையில்லா இன்பம் அடைந்தேன். தம் மக்கள் மழலைச் சொல்லைக் கேட்டு, குழலோசையையும், யாழிசையையும் கேட்பதை விட பெரிதும் மகிழும் பெற்றோரைப் போல் எனது ஆத்மக் குழந்தையாகிய உமது திருவாக்கைக் கேட்டு மகிழ்ந்தேன். நீர் வாழ்க பல்லாண்டு! இன்னும் பாடும். பேரார்வம் பொங்கி எழுகின்றது.

இங்கு கீழ்க்காணும் திருக்குறள்கள் நோக்கத் தக்கவை

**"குடிதழீஇ கோலாச்சும் மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கும் உலகு"**

**"முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறை யென்று வைக்கப் படும்"**

## மருத்துவனும் — நோயாளனும்

குலசேகர ஆழ்வார்:

**"வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால்**
**மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்**
**மீளாத் துயர்தரினும் வித்துவக் கோட்டம்மா — நீ**
**ஆளா வுனதருளே பார்ப்பன் அடியேனே"**

நோயாளனுக்கு ஏற்பட்ட ராஜபிளவை என்ற கட்டியை அறுத்து, அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவன், புரையோடாமல் காப்பதற்காக அந்த இடத்தில் தீயை வைத்துச் சுட்டு துன்புறுத்திய போதும் நோய் தீருகின்ற காரணத்தால் அவனிடம் கோபம் கொள்ளாமல், மிகுந்த அன்பு கொள்வான் நோயாளி. அதைப்போல் அடியேனிடத்தில் உள்ள தீய

எண்ணங்களையும், தீய செயல்களையும் போக்க, எனக்குத் தீராத துன்பங்களைக் கொடுத்து துன்புறுத்தினாலும்; அதனால் என்னைத் தூய்மைப்படுத்துவதை எண்ணி துன்பப்படாமல் இன்பமே அடைவேன்.

வித்துவக்கோட்டு எம்பெருமான் : குலசேகரரே! நீர் பக்தர் என்று மட்டும் தான் இதுவரை எண்ணியிருந்தேன். ஆனால், நீர் கூறிய கருத்துக்களைக் கேட்டதிலிருந்து நீர் ஒரு சிறந்த மருத்துவர் என்பதை அறிந்து கொண்டேன். இந்த மருத்துவர் – நோயாளி உறவு கொண்டு பாடியதற்கு என்ன காரணம் கூறப் போகின்றீர்.

குலசேகர ஆழ்வார்: மருத்துவரோ! உடல் நோயைப் போக்குபவர். ஆனால் நீரோ அடியேனது மனநோயைப் போக்கும் மனநோய் மருத்துவரல்லவா? அறியாமையாகிய நோயைப் போக்கி ஞானம் என்னும் மெய்யறிவைப் புகட்டுபவர் அல்லவா? எனவே தான் உம்மை மருத்துவராகவும் அடியேனை நோயாளியாகவும் உவமித்துப் பாடினேன்.

வித்துவக்கோட்டு எம்பெருமான்: அருமை! அருமை! ஆழ்வாரே! ஆனந்தமடைந்தேன். நீர் இன்னும் பாடும். கேட்கக் கேட்க தெவிட்டாத இன்பம் எய்துகின்றேன்.

## வங்கமும் (கப்பலும்) பறவையும்

குலசேகர ஆழ்வார்:

**வெங்கட்டின் களிறடர்த்தாய் வித்துவக் கோட்டம்மானே**
**எங்குப் போய் உய்கேன் உன் னிணையடியே அடையலல்லால்**
**எங்கும் போய்க் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்**
**வங்கத்தின் கூம்பேறும் மாபறவை போன்றேனே.**

குவலயா பீடம் என்ற யானையின் கர்வத்தை அடக்கி வென்றவனே! வித்துவக்கோட்டில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! கரையில் துறைமுகத்தில் நின்று கொண்டிருந்த கப்பலின் பாய்மரத்தில் அமர்ந்திருந்த ஒரு பறவை உறங்கி விட்டது. கப்பல் புறப்பட்டு நடுகடலை அடைந்து விட்டது. விழித்துக்கொண்ட பறவையானது கரையைக் காணாமல் தவித்தது. பல திசைகளிலும் பறந்து சென்று கரையைக் காணாமல் மீண்டும் கப்பலையே வந்தடைந்தது. கப்பல்

மீண்டும் துறைமுகத்தை அடையும்வரை கப்பலிலேயே தங்கியிருந்தது. துறைமுகத்தை வந்தடைந்ததும் நாட்டை அடைந்து மகிழ்ந்தது. அதைப்போல அடியேனும் முதலில் உமது திருவடியே தஞ்சம் என்று அறிந்து, மகிழ்ந்து, உம்மை விட்டகலாமல் இருந்தேன். ஆனால், இடையில் யான் செய்த தீவினையின் பயனாக உமது திருவடியை மறந்து, பல தெய்வங்களை நாடிச் சென்று அற்ப நன்மைகளையே பெற்றேன். பலவித துன்பங்களை அடைந்தேன். இறுதியில், உமது திருவடிகளே பரமபதம் தரவல்லது என்பதை உணர்ந்து உம்மை அடைந்துள்ளேன். உண்மை உணர்ந்து விட்டேன். எனவே அடியேனை ஆட்கொள்வீராக! இதனையே,

**"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் – நீந்தார்**
**இறைவனடி சேராதவர்"**

என்று திருக்குறளும்,

**" நன்றாக நான் உன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே**
**நீ யென்னை யன்றியில்லை"**

என்று திருமழிசையாரும் கூறுகின்றார்.

**"பாரினில் நின்பாத மூலம் பற்றினேன் பரமமூர்த்தி**
**காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்"**

என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரும் கூறுகின்றனர்.

வித்துவக்கோட்டு எம்பெருமான் : ஆழ்வாரே! என்னே! உமது அனுபவம். என்னைக் கப்பலாகவும், உம்மைப் பறவையாகவும் உருவகித்து, சம்சாரமாகிய பெருங்கடலைக் கடக்க, எனது திருவடிகளே தெப்பம் என்பதை மிகவும் அழகாகக் கூறினீர். உமக்கு அருள் புரிகின்றேன்! உமது பாடலை இன்னும் கேட்க விரும்புகின்றேன்! பாடும்.

# கதிரவனும் கமல மலரும்

குலசேகர ஆழ்வார்:

> " செந்தழலே வெந்தழலைச் செய்திடினும் செங்கமலம்
> அந்தரம்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
> வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட் டம்மா! உன்
> அந்தமில் சீர்க்கல்லால் அகம்குழைய மாட்டேனே "

வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் திருமாலே! கதிரவனுடைய வெப்பக்கதிர்கள் தன் மீது பட்டவுடன்தான் தாமரை மலர் மலருமே அல்லாது, கதிரவன் ஒளியின் வெப்பத்தை விட மிகுந்த வெப்பத்தை நெருப்பின் மூலம் நாம் அதன் அருகில் கொடுத்தாலும் தாமரை மலர் மலராது. அதைப் போல நீர் எனது கொடிய துன்பங்களைப் போக்கவில்லையென்றாலும் அடியேன் உமது திருமுகத்தின் அழகைக் கண்டால்தான் முகம் மலர்ந்து மகிழ்வேனே தவிர, மற்ற தெய்வங்களின் தரிசனத்தால் என் முகம் மலராது. நீரே எனது மனங்கவர்ந்த இறைவனாவீர்! எனவே எனது கொடிய துன்பங்களைப் போக்கி அருள்புரிவீராக!

வித்துவக்கோட்டு எம்பெருமான்: குலசேகரரே! உம்மைப் போன்ற உறுதியான பக்தியுடைய அடியார்கள் ஒரு சிலரையே காண முடிகிறது. உமது உறுதியான பக்தியைக் கண்டு உள்ளம் களிக்கின்றேன். என்னைக் கதிரவனாகவும் உம்மை தாமரை மலராகவும் உருவகித்துப் பாடியதற்கு என்ன காரணம்?

குலசேகர ஆழ்வார்: கதிரவன் இவ்வுலக இருளைப் போக்கி, மக்களின் உலக வாழ்வினுக்கு மூல காரணமாக விளங்கு கின்றான். நீரின்றி அமையாத இவ்வுலகுக்கு நீரைக் கொடுக்க உதவுகின்றான். உலக நீர்நிலைகளிலுள்ள நீரைத் தன் வெப்பத்தால் ஆவியாக்குகின்றான். அதுமட்டுமின்றி தாவரங்கள் உணவு தயாரிக்கவும் கதிரவனின் ஒளி அவசியமாகிறது. அதைப்போலவே உமது கருணையாகிய ஒளிக்கதிர்கள் எம்மீது படுவதால் அறியாமையாகிய இருள் நீங்கி, மெய்யறிவாகிய ஞானம் என்னிடம் தோன்று கின்றது. என் செயல்களுக்கெல்லாம் தேவரீரே மூல காரணமாக விளங்குகின்றீர்.

தாமரை நீரிலே வளர்கின்றது. குளிர்ச்சியுடையதாக உள்ளது. அதன் பூவிதழ்கள் மென்மையும், நறுமணமும், அழகும் கொண்டு மிளிர்கின்றது. தன்னிடம் உள்ள தேனை வண்டுகளுக்கு வழங்கி வாழ்கின்றன. அதைப் போல திருமாலடியவனாகிய நானும் இரக்க குணம், பக்தி, நற்குணங்கள் ஆகிய நறுமணத்தைப் பெற்றுள்ளேன். உமது சின்னமாகிய திருமண்காப்பினை அணிந்து அழகாக விளங்குகின்றேன். திருமாலடியவர்களுக்கு திருவமுது படைக்கின்றேன். தாமரை மலரில் எனது ஆத்மத் தாயாகிய திருமகள் வாழ்வதால் அத்தாமரை மலராகி அவர்களைச் சேர்ந்து வாழ்கின்றேன். மற்றும் புருட உத்தமனாகிய உம்மைச் சூரியநாராயணனான ஆணாகவும், தலைவனாகவும் தலைவன் வரவு கண்டு முகம் மலருகின்ற பெண்ணாகவும் அதாவது நாயக-நாயகி பாவமாக நினைத்துப் பாடியுள்ளேன். இவற்றை விட வேறு காரணங்கள் வேண்டுமோ?

வித்துவக்கோட்டு எம்பெருமான் : ஆச்சரியம்! ஆச்சரியம்! என்னே உமது மெய்யறிவு. கேட்கக் கேட்க என் உடல் சிலிர்க்கின்றது. பேரானந்தம் அடைகின்றேன்? பாடும். பாடும். இன்னும் பாடிக்கொண்டே இரும்.

குலசேகர ஆழ்வார்: அடியேன் நற்பேறு பெற்றேன். நீர் கேட்க யான் பாடாமல் இருப்பேனா. பாடுகின்றேன் கேளும். கேட்டு மகிழும்

## பசுங்கொண்டலும் — பைங்கூழும்
## (மேகமும் — பயிரும்)

குலசேகர ஆழ்வார்:

**எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்**
**மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்**
**மெய்த்துயர் வீட்டாவிடினும் வித்துவக் கோட்டம்மா! என்**
**சித்தமிக வுன்பாலே வைப்ப னடியேனே.**

வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் வாசுதேவனே! மேகமானது வானத்திலே உலவிக்கொண்டு இருந்து, மழையைப் பெய்தால் உலகில் பயிர்கள் நன்கு வளர்ந்து, நல்ல பலனை அளிக்கும். வானம் மழையைப் பெய்யாவிடில் பயிர்கள் வாடி விடும். எப்பொழுது வானம் மழையைப் பொழியும் என்று வானத்தையே நோக்கிக் கொண்டிருக்கும். அதைப்போல நீர் எனது துயரங்களைப் போக்கவில்லையென்றாலும்,

உமது அருளையே எதிர்நோக்கியிருப்பேன். எனவே எனது துயரங்களைப் போக்கிவிடுவீராக !

வித்துவக்கோட்டு எம்பெருமான் : ஆழ்வாரே! நன்று சொன்னீர்! என்னை மேகமாகவும், உம்மைப் பயிராகவும் உருவகித்த தற்கு என்ன காரணம் என்பதை அறிவிப்பீரா?

குலசேகர ஆழ்வார்: பெருமானே! நீவிர் குணத்தாலும், நிறத்தாலும் மேகத்தைப் போன்றவரல்லவா? கரிய நிறமுடைய மேகத்தைப் போன்ற நிறத்தைப் பெற்றதனா லன்றோ கருமுகில்வண்ணனன், என்ற பெயரைப் பெற்றீர். யாரிடமும் எந்த ஒரு உதவியையும் எதிர்பாராமல் அவர்க்கு வேண்டியவற்றை வழங்கு கின்ற வள்ளலாகத் திகழ்கின்றீரே! கருணாகரன் என்ற உமது பெயருக்கு களங்கம் ஏற்படாதிருக்கு மாறு எனக்கு அருள்புரிவீராக!

வித்துவக்கோட்டு எம்பெருமான் : குலசேகரரே! உமது அனுபவம் ஆச்சரியம்! ஆச்சரியம்! கேட்கக் கேட்க தெவிட்டவில்லை. இன்னும் பாடும்.

## ஆழியும் — ஆறும்

குலசேகர ஆழ்வார்:

**“ தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே**
**புக்கின்றிப் புறம்நிற்க மாட்டாத மற்றவைபோல்**
**மிக்கிலங்கு முகில்நிறத்தாய் வித்துவக்கோட் டம்மா! உன்**
**புக்கிலங்கு சேரல்லால் புக்கிலன்காண் புண்ணியனே**

கருமுகில் வண்ணனான கண்ணனே! வித்துவக்கோட்டில் எழுந்தருளியுள்ள விமலனே! மலையிலே தோன்றி காடுகள், சமவெளிகள் மூலமாகப் பாய்ந்து ஓடி வருகின்ற ஆறுகள் எல்லாம் இறுதியாகக் கடலைச் சென்று அடைவதைப் போல், அடியேனும் ஊழ்வினை யென்னும் ஆற்றினிலே சம்சாரமாகிய படகினிலே ஏறிக் கொண்டு பயணம் செல்கின்றேன். இவ்வுலகப் பற்றினால் துன்பங்களில் முட்டி மோதி அல்லல் உறுகின்றேன். பின்பு உம்மீது ஏற்பட்ட பக்தியென்னும் துடுப்பைக் கொண்டு என் வாழ்க்கைப் படகைச் செம்மையாக ஓட்டிக்கொண்டு, காத்ததற்கடவுளும் வீடுபேற்றை அளிக்கக்

கூடியவனுமாகிய உமது திருவடிகளாகிய கடலை வந்தடைந்தேன். இனி எனக்கு எந்தவித துன்பமும் தோன்றாது. அடியேனைக் காத்து இரட்சித்தருளும்.

வித்துவக்கோட்டு எம்பெருமான் : ஆழ்வாரே! நீர் என்பால் பக்தி கொண்டு பலவிதமான எடுத்துக்காட்டுகளைக் கூறிப் பாடினீர். பெரிதும் புளகாங்கிதம் அடைந்தேன். நீர் என்னைக் கடலாகவும், உம்மை ஆறாகவும் உருவகித்துப் பாடியதற்கான காரணங்களைக் கூறவும்

குலசேகர ஆழ்வார்: உலகில் முக்கால் பங்கு கடலாக உள்ளது. அக்கடலில் உள்ள நீரையெல்லாம் கதிரவன் தன் கதிர்களால் ஆவியாக்கி மேகமாக்குகின்றான். மேகம் மழையைப் பெய்து நீர்நிலைகளையெல்லாம் நிரப்புகின்றது. நீர் நிலைகளிலுள்ள நிர் மதகுகளின் வாயிலாக, வயல்களிலுள்ள பயிர்களுக்கு வாய்க்கால்கள் மூலம் பாய்கின்றது. பயிர்கள் நன்கு வளர்ந்து நல்ல விளைச்சலைத் தந்து குடிமக்களை உயர்த்துகின்றது. குடிமக்கள் உயர, மன்னன் உயருகின்றான். நாடு வளம் பெறுகின்றது. அதைப் போல உம்மிடம் இருந்து பெற்ற வேத, சாஸ்திர, புராணங்களையெல்லாம் பிரமன் முனிவர்களுக்கு வழங்க, அவர்கள் அதையெல்லாம் உணர்ந்து தங்கள் மனமாகிய ஏரிகளில் தேக்கி வைத்திருந்தனர். பின்னர் ஆழ்வார்களாகிய மதகுகளின் வழியே, வாய்க்கால்களாகிய ஆச்சாரியார்களின் மூலம், வயல்களாகிய இவ்வுலகில், வளரும் பயிர்களாகிய மக்களுக்கு வேதக்கருத்துகளாகிய நீரை வழங்குகின்றனர். ஆசாரியர்கள் மூலம் பெற்ற வேதக்கருத்துக்களான விளைச்சலைப் பெருக்கினர் மக்களாகிய பக்தர்கள். இறைவனாகிய உமது திருவடியை அடைந்தனர். பக்தர்களின் நற்பணிகளால் நாடுமுழுவதும் அறம் பெருகியது. அறம் பெருகிட, அதைக் கண்டு மகிழ்ந்தீர். அறக்கடவுளாகிய நீவிர். இவையனைத்திற்கும் நீரே மூல் காரணனாவீர். இவ்வாறு கடல் மழையைப்

பொழிந்து; மக்கள் வளத்திற்கும், மன்னன் வளத்திற்கும், நாட்டு வளத்திற்கும் மூல காரணமாக விளங்கியது போல உமதருளால் நாட்டில் அறம் பெருகியது. எனவே உம்மைக் கடலாகவும் எம்மை ஆறாகவும் உருவகித்துப் பாடினேன்.

வித்துவக்கோட்டு எம்பெருமான்: என்னே உருவகம். வேதக் கருத்துகளைச் சாறாகப் பிழிந்து தந்துவிட்டீரே! பழச்சாறு எவ்வாறு எளிதில், விரைவில் நோயாளிகளுக்கு பலத்தைத் தருகின்றதோ! அவ்வாறே உமது எளிய அரிய கருத்துகள் மக்களின் மனநோயைப் போக்கி எனது திருநாட்டை அடைய வழி வகுக்கும். வாழ்க நீர் பல்லாண்டு!

குலசேகர ஆழ்வார்:

**"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்**
**தன்னையே தான்வேண்டும் செல்வம்போல் மாயத்தால்**
**மின்னையே சேர்திகிரி வித்துவக் கோட்டம்மா!? நின்னையே**
**தான்வேண்டி நிற்பன் அடியேனே"**

வித்துவக்கோட்டு எம்பெருமானே! அடியேன் பாடிய பாடல் கருத்துகள் நன்று! நன்று! என்று பாராட்டி விட்டு, யான் வேண்டு வதைக் கொடுக்காமல் இருப்பது சரியோ! அல்லவே! இது உமது கருணைக்குப் பொருந்தாதே.

இவ்வுலகில் பெரும்பாலான மக்கள் செல்வத்தையே வேண்டி உமது அருளை விரும்பாமல் உள்ளனர். சிலர் உமது அருளையே வேண்டி செல்வத்தை விரும்பாமல் இருப்பர். ஆனால் செல்வமோ இருவரையும் சென்று அடைகின்றது.

செல்வம் வேண்டியவர்களில் சிலர் செல்வம் பெற்றவுடன் நன்மை செய்கின்றனர். பலர் நன்மையான செயல்களுக்குப் பயன்படுத் தாமல் தீயவழிகளில் பயன்படுத்துகின்றனர்.

ஆனால் செல்வத்தை விரும்பாதவரிடம் செல்வம் விரும்பிச் சென்றடைகின்றது. ஏனென்றால் அவர்கள் அந்த செல்வத்தை தனக்கென்று வைத்துக் கொள்ளாமல் ஊரின் நடுவில் உள்ள குடிநீர் குளத்தைப் போலவும், ஊரின் நடுவில் உள்ள உண்ணக்கூடிய இனிய பழங்களைத் தரும் பழமரத்தைப் போலவும்; மக்களுக்காக மக்கள்

நன்மைக்காகப் பயன்படுத்துவர். நீரும் நல்லோரைப் போன்றவராவீர். உம்மை வந்தடைந்த எம்போன்ற பக்தர்களாகிய செல்வத்தை மக்கள் நன்மைக்காக பாடுபடக்கூடிய பயனுள்ளவர்களாக மாற்றுவீர். நாமும் உமது திருவடிகளை அடைந்து, நாம் மட்டுமின்றி அனைவரையும் உமது அடியவர்களாக மாற்றுவோம். எனவே எம்மை ஏற்று எமக்கு அருள்புரிவீராக!

வித்துவக்கோட்டு எம்பெருமான் : குலசேகரரே! செல்வத்தை விரும்பாத மக்கள் ஆயிரத்தில் ஒருவரே இருப்பர். அத்தகையவரில் நீரும் ஒருவராக உள்ளீர். உமக்கு எத்தனை சோதனைகளை உண்டாக்கினாலும் நீர் அவற்றையெல்லாம் வென்று விட்டீர்! உறுதியுடன் என்னையே பற்றுகின்றீர்.

பொன்னை திராவகத்தில் இட்டு உஷ்ணப்படுத்தி அதில் உள்ள அழுக்குகளையெல்லாம் போக்கி, அதைத் தூய்மைப்படுத்துவர். அதைப் போலவே நானும் அடியவர்களைச் சோதிக்க பல துன்பங்களைக் கொடுத்து, அவர்களிடம் உள்ள தீய குணங்களைப் போக்கி, நல்ல குணவான்களாகவும், பக்திமான்களாகவும் மாற்றுகின்றேன். உம்மையும், உமது மன உறுதியையும், ஆழ்ந்த பக்தியையும் உலகிற்கு உணர்த்தவே இதுநாள்வரை தாமதித்தேன். வருந்தாதீர்! வாரும்.

குலசேகர ஆழ்வார்: வித்துவக்கோட்டு எம்பெருமானே! நீர் என்னை விரும்பினாலும், விரும்பவில்லையென்றாலும், அடியேன் மற்ற எவரைச் சென்று அடைவேன்? அடைய மாட்டேன். உமது திருவடிகளையே சரணாகப் பற்றுவேன். எம்மீது கருணைகாட்டி என்னை காத்தருள்வீராக! அடியேன் தேவரீரைப் புகழ்ந்து பாடிய இந்த நல்ல பாடல்களைப் பாடுபவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் திருநாடு நல்க வேண்டும். உமது திருவடிகளைச் சரணமடைகின்றேன்.

வித்துவக்கோட்டு எம்பெருமான் : ஆழ்வாரே நீர் இதுவரை எம்மையும் உம்மையும் தலைவனும் தலைவியாகவும்; மன்னனும்-

மக்களாகவும்; மருத்துவனும் - நோயாளியாகவும்; கட்டலும் - பறவையாகவும்; கதிரவனும்-கமல மலராகவும்; மேகமும் - பசும் பயிராகவும்; கடலும்- ஆறாகவும் உருவகித்துப் பாடிப் பரவசம் அடைந்தீர்.

நானும் காதாரக் கேட்டு மகிழ்ந்தேன். உமது பக்தியை மெச்சுகின்றேன். உமக்கு திருநாடு அளிக்கின்றேன். உமது பாடலைப் பாடுபவர் களுக்கும், கேட்பவர்களுக்கும் பரமபதம் அளிக்கிறேன். இப்போது திருப்திதானே! மகிழ்ச்சி தானே! வாழ்க நீர் பல்லாண்டு!

முடிவுரை

நாமும் குல சேகராழ்வாரைப் போன்று ஸ்ரீமந் நாராயணனிடத்தில் ஆழ்ந்த பக்தி கொண்டு அவர் பாடல்களைப் பாடி, பரமபதம் அடைவோமாக!



குலசேகரப் பெருமாள்

# விஷ்ணுவும் — விஷ்ணுசித்தரும்

ஆழ்வார்கள் அருளிய அருளிச் செயல்களாம் நாலாயிரம் பாடல்களில் திருப்பல்லாண்டு என்னும் பாசுரங்கள் மிகவும் சிறப்பானதாகும். வேதத்துக்கு முன்னும் பின்னும் எப்பொழுதும் ஓம் என்று ஓத வேண்டும். ஓதுவது சிறப்பு வழக்கமாகும். அதைப்போல நாலாயிரத் திவ்வியப்பிரபந்தப் பாடல்களைப் பாடுவதற்கு முன்னும், பின்னும் திருப்பல்லாண்டு ஓதுவது சிறப்பு வழக்கமாகும். இதனால் திருப்பல்லாண்டு "ஓம்" என்னும் பிரணவத்திற்கு சமம் என்பது நன்கு புலனாகிறது. இதனையே

> **"கோதிலவாம் ஆழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம்**
> **ஆதிதிருப் பல்லாண்டு ஆனதுவும் — வேதத்துக்கு**
> **ஓம் என்னு மதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்த்**
> **தான் மங்கலம் ஆதலால்"**

என்கின்றார் மணவாள மாமுனிகள்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருப்பல்லாண்டு பாசுரங்கள் தோற்றத்தைச் சுருக்கமாகக் கண்டு பின்னர் விஷ்ணுவும், விஷ்ணுசித்தரும் சந்தித்து உரையாடியதைக் காண்போம்.

பண்டைய நாளில் பாண்டியநாட்டு மன்னன் வல்லப தேவனுக்கு பரம்பொருள் பற்றி ஏற்பட்ட ஐயத்தைப் போக்கி, ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்பதை புலவர்களின் வினாக்களுக்கு தக்க பதிலளித்தும் தடைகளுக்கு விடையளித்தும் உறுதிப்படுத்தி, அவனால் அளிக்கப்பட்ட பொன்முடிப்பைப் பெற்றார் விஷ்ணுசித்தர். மகிழ்ந்த மன்னன் விஷ்ணு சித்தரை யானை மீது அமர்த்தி திருவீதி வலம் வரும்படி வேண்டி, உலா நடத்தினார். இதைக்கண்டு மனமுவந்த ஸ்ரீமந் நாராயணன் பலரும் காணும்படி கருடன் மீது அமர்ந்து வந்து காட்சியளித்தார். விஷ்ணுவின் அழகைக் கண்டு தரிசித்து, அவனுக்கு என்ன தீங்கு நேர்ந்து விடுமோ என்று அஞ்சி, தன் நிலையையும் அவன் சீர்மையையும் மறந்து, பொங்கும் பரிவாலே பல்லாண்டு பாடத் தொடங்கினார். எந்த ஆழ்வாரும் பாடாத பல்லாண்டு பாடிய காரணத்தினால் பெரியாழ்வார் எனப் பாராட்டப்பட்டார். இதனையே மணவாள மாமுனிகள்,

**"மங்களா சாசனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்**
**தங்க ளார்வத் தளவுதானன்றி – பொங்கும்**
**பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்**
**பெரியாழ்வார் என்னும் பெயர் (உபதேச ரத்தினமாலை)"**

திருமால் காட்சி தந்தபோது, தமக்கு நன்மைகள் தந்து தீமைகளைப் போக்கவும் வேண்டவில்லை. நாராயணனின் திருவருளே தமக்கு எல்லா பலனும் என்றெண்ணி, அவனுடைய அழகு, எளிமை, இரக்கம் ஆகிய குணங்களுக்கு என்ன தீங்கு நேர்ந்துவிடுமோ என்று வருந்தி, அவருடைய அழகில் ஆழ்ந்து மூழ்கி விடாமல், அவருக்கு பல்லாண்டு பாடி காப்பிட்டார். வைகுண்டத்திலும், இப்பூலகிலும் எத்தகைய தீங்கும் நேராதிருக்க வேண்டுமென்று பாடியதால் இப்பல்லாண்டு பாசுரங்கட்கு ஒப்பதோர் வேறு பாசுரம் (கலை) இல்லை என்றார் மாமுனிகள்.

**"உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலை**
**உண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்"**
(உபதேச ரத்தினமாலை)

பெரியாழ்வார் : ஸ்ரீமந் நாராயணனே! சாணூரன், முஷ்டிகள் முதலிய மல்லர்களைக் கொன்ற திடமான மிக்க பலம் பொருந்திய தோள்களை உடையவனும், மாணிக்கம் போன்ற நிறத்தையும், குணத்தையும் உடையவனே; சிறந்த செம்மையான திருவடிகளை உடையவனே நீர் பல்லாண்டு பல்லாண்டு, பல ஆயிரம் ஆண்டுகள், பலகோடி நூறாயிரம் ஆண்டுகள் உமக்கு யாதொரு குறைவு மில்லாமல் இருக்க வேண்டும்.

**"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு**
**பலகோடி நூறாயிரம்**
**மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா! உன்**
**செவ்வடி செவ்வி திருக்காப்பு"**

திருமால்: ஆழ்வாரே! எல்லா வலிமையும் பெற்று, எல்லோருடைய துன்பங்களையும் போக்கிக் காக்க வல்லவனாகிய எனக்கு நீர் பல்லாண்டு பாடுவது மிகவும் வியப்பாக உள்ளது. புதரில் கிடக்கும் புலியைக் காக்க, காவலரை அமர்த்துவது போல் உள்ளது உமது செயல். ஏன் உமக்கு இப்படி ஒரு பயம் ஏற்பட்டது?

ஆழ்வார்: நீர் எமக்குக் காட்சி கொடுத்ததோ அறியாமை மிகுந்த பூவுலகமல்லவா? நீர் அவதாரம் செய்த காலங்களில் இரணியன், இராவணன், மாரீசன், கும்பகர்ணன், சிசுபாலன் போன்ற தீயவர்களால் தீமைகள் நேர்ந்த உலகமல்லவா? காலமோ! தர்மதேவதையாகிய பசு ஒரு காலில் நிற்கும் கலியுகமன்றோ? தர்மவான்கள் குறைவாகவும், அதர்மவாதிகள் அதிகமாகவும் வாழும் காலமல்லவா? முளைக்கும் செடிகளெல்லாம் (வேலிக் காத்தான் போன்றவை) அசுரத் தன்மையுள்ள விஷமுள்ள செடிகளாகவுள்ளனவே? எனவே உமக்கு பல்லாண்டு பாடுவதன்றி வேறு பாதுகாவலும் மதிலும் உண்டோ?"

திருமால்: ஆழ்வாரே! என்னுடைய வலிமை வாய்ந்த திரண்ட தோள்களை மறந்து விட்டீரோ? கிருஷ்ணாவதார காலத்தில் சிறுபிள்ளையாய் இருக்கும்போதே, பல யானைகள் பலம் பெற்றவர்களான சாணூரன், முஷ்டி போன்ற அரக்கர்களையும், வலிமை மிகுந்த கம்சனையும் துரியனிடம் தூது சென்றபோது துரியன் பொயாயாசன மிட்டபோது கீழே இருந்த பல மல்லர்களையும், இராமவதார காலத்தில் இரு தோளுடைய இராமனாக இருந்து இருபது தோள்களைப் பெற்றிருந்த இராவணனையும் கொன்று குவித்த இந்த வலிமைபெற்ற தோள்களைக் காணுங்கள். இன்னும் ஏன் உமக்கு என் வலிமையில் சந்தேகம். ஏன் என்தோள்களுக்கு பல்லாண்டு பாடினீர்கள்.

ஆழ்வார்: எம்பெருமானே! வலிமை வாய்ந்த உமது தோள்களே எனது பயத்துக்கும் காரணமாயிற்று. தோள் வலிமையால் இவ்வுலகில் எதிரிகளைக் கண்டு அஞ்சாமல் தனி ஒருவனாய் முழங்கிப் புறப்பட்ட சிங்கமாயிற்றே. நீர் ஆபத்பாந்தவனாகையால், உமது பக்தர்கள் துன்பம் அடைந்து கூக்குரலிட்டு அழைத்தபோதெல்லாம், குரல் ஒலி குறையும் முன்பே ஆயுதம் ஏதும் இன்றி, தோள் வலிமையையே துணையாகக் கொண்டு அவர்கள் துன்பம் துடைக்க ஓடியவனன்றோ, வீரப் புதல்வனைப் பெற்ற தாய் அவனுக்கு எந்த ஆபத்து நேருமோ என்று பயப்படும் தாயைப் போல் யானும் அஞ்சுகின்றேன். வெண்ணெய்

உண்டு வளர்ந்த சிறுபிள்ளையாகிய உமது மார்பெங்கே? மிகுந்த வலிமையும், தந்திரங்களும் நிறைந்த முரட்டு அசுரர்களின் சரீரமெங்கே? நீர் கம்சனைக் கொல்ல மதுராபுரி நோக்கிச் சென்றபோது, மதுரா மக்கள் வாய்விட்டு அலறவில்லையா?

எம்பெருமான்: விஷ்ணுசித்தரே! உம் போன்ற அடியவர்களைக் காக்கும் எனது கைகளைக் காணுங்கள். மாபலியின் தானத்திற்குத் தடையாகி நின்ற சுக்ராச்சாரியின் கண்களைத் துரும்பால் குத்தியதும், இரணியன் மார்பகத்தைக் கீறிக் கொன்றதும் இக்கைகளன்றோ? வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது போல, ஒரு புல்லை பிரம்மாஸ்திரமாக்கி காகாசூரன் மீது விட, அனைத்து உலகமும் திரிந்து ஓடி, யாராலும் காக்க முடியாமல் மீண்டும் என்னையே சரணடைந்ததும், பல்லாயிரம் அரக்கர்களைத் தனி ஒருவனாய் இருந்து மாய்த்ததும், நீங்கள் அறியாததோ? இவ்வுலகில் உள்ள எத்தகைய கொடிய அரக்கர்கள் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் ஒரு நொடியில் புழு பூச்சிகளை நசுக்குவது போல் நசுக்குவேன் என்று சுக்ரீவனிடம் கூறியதை நீர் அறியவில்லையோ? நிலத்தில் தனி ஒருவனாய் நின்று ஒரே பாணத்தினால் இராவணனுடைய மூலபலச் சண்டையை அடியோடு அழிக்கவில்லையா? கொடியவர்களைத் துலைக்கவும், அன்பர்களைப் பாதுகாக்கவும் நான் கங்கணம் கட்டிக்கொண்டிருக்க நீர் நமக்குப் பல்லாண்டு பாடுவதேன்?

விஷ்ணுசித்தர்: அச்சுதனே! அனைவருக்கும் அபயமளிக்கும் உமது அழகிய கைகளே அடியேன் ஐயத்திற்கும், கண் கலக்கத்திற்கும் காரணமாயிற்று. உமது பக்தர்கள் துன்பந்துடைக்க உமது திருமகளே தடையாக நின்றாலும் கவலைப் படாமல் பிரிந்து செல்வீரே. இராமாயண காலத்தில் தண்டக வனத்து ரிஷிகளைக் காக்க, அரக்கர்களை அழிக்க முயன்ற போது சீதை தடையாக நிற்க, "என் பக்தர்களாகிய இந்த ரிஷிகளைக் காக்க, உன்னையும், இலக்குவனையும், என் உயிரையும் கூட விடுவேனே ஒழிய என் பக்தர்களைக் காக்காமல் விட மாட்டேன் என்று கூறினவராயிற்றே!

அப்படி நீர் முயற்சிக்கும்போது உமக்கு ஏதேனும் ஆபத்து வந்து விடுமோ என்று தான் பல்லாண்டு பாடினேன்.

திருமால்: பெரியாழ்வாரே! நானே வாடிவழகன். என்னைப் புருட உத்தமன் என்று அனைவரும் போற்றவில்லையா! பச்சை மாமலை போல் மேனி, பவள வாய், கமலச் செங்கண், அச்சுதன் என்றெல்லாம் என்னை தொண்டரடிப் பொடியார் பாடவில்லையா? கண்டவர்கள் விரும்பும் படியான தன்றோ என் வடிவழகு. சூர்பனகையும், தண்டக வன ரிஷிகளும், ஏன் பிரம்மச்சாரியான அனுமனும் என் அழகைக்கண்டு மயங்கவில்லையா? என்னைக் கொல்ல வந்தவர்களும் என் வடிவழகைக் கண்டு என்னை காக்கத் துணியும்படியானதல்லவா? என் வடிவழகு. என் வடிவழகைக் கண்டல்லவோ யான் யார் என்று அறிந்தும் எனக்கு மூவடி மண் தந்தான் மாவலி. இதோ என் வடிவழகைக் கண்டு களியும் (எனறு கூறித் தன் வடிவழகைக் காட்டினார்)

ஆழ்வார்: நவரத்தினங்களின் ஒளியை விடப் பன்மடங்கு ஒளி பொருந்திய மணிவண்ணா! உமது அழகைக் கண்டு ஆனந்தம் அடைந்தேன். உமது அழகும், இளமையும்தான் எனது பயத்திற்குக் காரணமாக உள்ளன. தீயவர்கள் கண்ணெச்சில் படுமே. இப்பூமி சூன்யக்காரர்கள் வாழும் சுடுகாடு போன்றதாயிற்றே. சபிக்கக்கூடிய வல்லமை பெற்ற தபோதனர்கள் வாழும் நிலமாயிற்றே. உமது அழகை நீரே கண்ணாடியில் பார்த்தாலும் நீரே ஆச்சரியப்பட்டு கண் கலங்க வேண்டிய நிலையை அடைவீரே! அப்படிப்பட்டதன்றோ உம் அழகு.

எம்பெருமான்: விட்டுசித்தரே! அகில உலகங்களையும் காத்து வரும் எனக்கோ கண்ணெச்சில்படும். தபசிகள் சாபம் என்னை என்ன செய்யும். பிருகு மகரிஷி தனது மனைவி இறந்ததால் பதறி இட்ட சாபம் பலிக்காமல், பைத்தியம் பிடித்துக் கதறி என்னிடம் சரணாகதி அடைந்ததை நீர் அறியீரோ? ஈரேழு பதினான்கு உலகங்களையெல்லாம் அளந்த இப்பாதங்களைப் பாடும். நமுசியை வானில் சுழற்றியதும், மாபலியை பாதாளத்தில் அழுத்தியதும்,

விராதனை மிதித்துக் கொன்றதும், சகடாசூரனைச் சிதைத்ததும் காளிங்கன் மணிமுடி மீது நடனம் ஆடியதும், பக்தர்கள் விரும்பி வணங்குவதும் இத்திருவடிகளன்றோ?

விட்டுசித்தர்: நீர் மாபலியிடம் மூன்றடி மண் பெற்று, கல்லும் முள்ளும், காடும் மேடும் நிறைந்த இப்பூலகை அளந்த போதும், இராமாவதாரத்தில் தந்தை தயரதச் சக்ரவர்த்தியின் ஆணைக்கிணங்க காடு, மேடுகள் எல்லாம் நடந்த போதும், கிருஷ்ணாவதாரத்தில் பஞ்சவர்க்காக தூது நடந்த போதும் உமது திருவடிகள் பெருந்துன்பம் அடைந்திருக்குமே! அப்போது பல்லாண்டு பாட யாரும் இல்லையாதலால் இன்று யான் அத்திருவடிகட்குப் பல்லாண்டு பாடுகின்றேன். "அன்று நான் பிறந்திலேன். இன்று நான் பிறந்த பின் உமது திருவடிகட்குப் பல்லாண்டு பாட மறந்திலேன்; பாடினேன்" ஸ்ரீதேவியும், பூதேவியும் தமது மென்மையான திருக்கரங்களால் உமது திருவடிகளை வருடினாலும் உமது திருவடிகள் சிவந்து விடுமே. அத்தகைய மென்மையான உமது திருவடிகளின் பெருமை உமக்குத் தெரியாது. ஆனால் அத்திருவடிகளில் எங்க்ள் தலைகளைச் சாய்த்து வணங்கும்போது எங்களுக்கு அன்றோ தெரியும் அவற்றின் அருமையும், பெருமையும். எனவேதான் "உன் சேவடி செவ்வித் திருக்காப்பு" என்று பாடினேன். இதில் தவறு ஏது?

எம்பெருமான்: ஆழ்வாரே! அரக்கர்களை அழித்த திண்மையான தோள்களைக் காட்டினேன், அடியவர்களை ஆதரித்து அணைத்துக் காக்கும் கரங்களைக் காட்டினேன், உம்மை நிறைகொண்ட என் மேனியைக் காட்டினேன், என்னைச் சரணமடைந்தவர்களைக் காக்கும் திருவடிகளைக் காட்டினேன். மேலும் மேலும் நீர் இப்படி அஞ்சுவது நியாயமாகுமோ?

ஆழ்வார்: எனது ஆத்மத் தந்தையாகிய தேவரீருடைய திருவடி அழகும், பெருமையும் எனது உள்ளத்தை "அலைகடல் துரும்பென அலைய வைக்கின்றனவே", யான் என் செய்வேன். எனவே தான் பல்லாண்டு பாடுகின்றேன்.

எம்பெருமான் : சித்தரே! தன்னுயிரையும் பணயமாக வைத்து என்னை வணங்கும் உம் போன்ற பலகோடி பக்தர்களை உடையவனன்றோ யான்? வைகுண்டமும் பூவுலகும் ஆகிய இரண்டும் எனக்கு உடைமைகளல்லவா? விண்ணிலும், மண்ணிலும் இருக்க இடமில்லாமல் எங்கெங்கு நோக்கினும் என் அடியார்கள் நெருங்கி நிற்கின்றார்களே! அவர்களைப் பாரும். அவர்கள் இருக்க எனக்கு என்ன பயம்?

ஆழ்வார்: எங்கும் நிறைந்திருக்கும் விஷ்ணுவே! நான் ஒருவன் பல்லாண்டு பாடினால் போதுமோ? திருப்தி யுண்டாகுமோ? ஆராவமுதனாகிய உம்மை அடியேன் ஒருவனாகப் பருகலாமோ? நல்ல உயர்ந்த பொருளை தனி ஒருவனாகச் சாப்பிடக் கூடாது என்பதல்லவோ சித்தாந்தம். இன்டமிகு பெருங்குழுவாக அடியார்களுடன் கூடி உமக்குப் பல்லாண்டு பாடினாலும் நிறைவு பெறமுடியாதபடியன்றோ உமது திருமேனி அழகு உள்ளது. அடியோங்களையும், உம்மையும் பிரிக்கப் பார்க்கும் பல புல்லர்கள் இருக்கின்றனர் அன்றோ? அதனால்தான் "அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" இருக்க வேண்டுமென்று அடியேன் பாடினேன்.

எம்பெருமான் : நன்று, நன்று ஆழ்வாரே! என் வடிவழகில் ஈடுபட்டு பல்லாண்டு பாடினேன் என்றீர். அதுசரி. ஆனால் உமக்கு அழிவில்லாமையை வேண்டுவது சரியா?

ஆழ்வார்: எம்பெருமானே! ஒரு பலனைக் குறித்து ஆயுள் விருத்தியை வேண்டுவது உண்டு. அனைத்து ஆத்மாக்களுக்கும் கைங்கரியம் செய்வதே உண்மையான வடிவம். அவர்களுக்குத் தொண்டு புரிவதற்காகவே ஆயுள் விருத்தி வேண்டினேன்.

திருமால்: ஆழ்வாரே! நீர் வேண்டும் பலன்தான் யாது?

ஆழ்வார்: திருமாலே! உமக்கும் எமக்கும் இருக்கும் சேஷி-சேஷ (அடிமை-ஆண்டான்) உறவு என்றும் அழியாமல் இருக்க வேண்டும் என்பதே அடியேன் வேண்டும் பலன். அதற்காகவே வாழ்த்துகின்றேன்.

திருமால்: வாழ்த்தவில்லையென்றால் என்ன நேரும் என்று பயப்படுகிறீர் ?

ஆழ்வார்: திருமாலே! இம்மண்ணுலகில் நீர் அடியார்களுடன் கூடியிருக்கும் கூட்டுறவுக்கு கண்ணழிவு உண்டாகும். உம்மைக் குறித்து பல்லாண்டு பாட நீரும் வேண்டும். உமது அடியார்களாகிய அடியோங்களும் வேண்டும். பல்லாண்டு பாடுவதே ஒரு உயர்ந்த ஒருங்கிணைப்பு. பரமபதத்திலும் பிரிவின்றி சூழ்ந்திருந்து ஏற்றுவது பலம். அப்படியிருக்க அந்த உறவுக்கு இங்கு பல்லாண்டு பாடச் சொல்ல வேண்டுமோ?

எம்பெருமான்: உமக்கும் எம் அடியார்களுக்கும் பல்லாண்டு பாடினீர்! ஆனால் எனது மார்பில் உறையும் திருமகளை மறந்து விட்டீரோ? அடியார் தீமைகள் அழிவிற்கும், நன்மைகள் நிகழ்வதற்குமன்றோ அவள் "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கையாக" எனது மார்பில் வாழ் கின்றாள். அப்படியிருக்க அவளுக்கு நீர் பல்லாண்டு பாட வேண்டுமோ ?

ஆழ்வார்: எம்பெருமானே! அத்தகைய சிறப்புவாய்ந்த திருமகளுடன் சேர்ந்து இங்கு எமக்கு காட்சியளித்ததே என் பயத்துக்குக் காரணமாக உள்ளது. இராமவதார காலத்தில் தண்டக வனத்தில் நீர் சீதாதேவியுடன் சேர்ந்து இருந்த தனால்தானே, சூர்ப்பனகையால் துன்பமும் ஏற்பட்டது. உமக்காகப் பிறந்த ஜனகமகாராசனின் மகளாகிய சீதையைப் பிரித்தாலன்றி, உம்மை வெல்ல முடியாது என்றும், சீதையைப் பிரிக்குமாறும் இராவணனுக்கு மாரீசன் வழிமுறை கூறினான். பிருகு மகரிஷி உம்மைச் சோதிக்க உமது மார்பில் உதைத்தமையால் அங்கு வாழ்ந்த திருமகளுக்கும் உதையைப் பெற்றுத் தந்தீர் அல்லவா? ஆகையால்தான்

**"நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு"** என்று அவர்களுக்கும் பல்லாண்டு பாடினேன்.

எம்பெருமான்: எனது வலது மார்பில் வாழ்கின்ற என் திருமகளுக்கு எத்தகைய கேடும் நேராதபடி காவலாக எனது வலது

கையில் சக்கரத்தாழ்வானை ஏந்தியுள்ளதை இதோ காணும். அதைப் பயன்படுத்தவும் வேண்டுமோ? வேண்டாமே. இதைச் சுற்றியபோதே வாணாசூரனுடைய தோள்கள் ரத்த வெள்ளமெடுத்து முறிந்து விழுந்ததைக் கேட்டதில்லையா? அசுவத்தாமனால் இதை அசைக்க முடியாமல் போனதைக் கேட்டதில்லையா? கோடானு கோடி பகைவர்கள் எதிர்த்து வந்தாலும், கணப்பொழுதில் அழிக்க வல்லதன்றோ இச்சக்கரத்தாழ்வான்.

ஆழ்வார்: எம்பெருமானே! போதும்! போதும்! நிறுத்தும். இந்த சக்கதரத்தாழ்வான் துர்வாச முனிவரின் சாபத்தினால் ஒளி இழந்து தன் உடல் கருத்து உம்மிடம் வந்து நிற்கவில்லையா? உமது சகல சக்தியினால் அல்லவோ அந்தச் சாபம் பலனளிக்காமல் செய்தீர். ஜயந்திரனை சூரியன் மறைவிற்கு முன்னமே கொல்வேன் என்று சபதம் செய்த அர்ச்சுனனுக்கு உதவ இச்சக்கரதாழ்வாரை அனுப்பி சூரியனை மறைக்கவும், பொழுது சாய்ந்தது என்று வெளியே வந்த ஜயந்திரனை அர்ச்சுனன் கொல்லும்படிச் செய்தீர். ஒளிமயமாக விளங்கிய இச்சக்கரத்தாழ்வான் உம்முடன் சேர்ந்து பல்லாண்டு இருக்கவே **"வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு"** என்று பல்லாண்டு பாடினேன்.

எம்பெருமான்: ஆழ்வாரே! சக்கரத்தாழ்வான் விரோதிகளைக் கொல்ல எனது கையைவிட்டுச் சென்று எதிர்க்க வேண்டும். ஆனால் எனது இடது கையில் உள்ள பாஞ்சசன்னியத்தை இதோ பாரும். இது எப்பொழுதும் எங்கும் செல்லாமல் என்னுடனேயே இருக்கின்றதே! அப்படியிருக்க நீர் அஞ்சுவது ஏன்? மற்றும் இருக்குமிடத்தில் இருந்து கொண்டே எதிரிகள் மண்ணுண்ணும்படியும், அரக்கர் களின் இருதயங்களைப் பிளக்கும்படியும், விஷ்ணு பக்தர்கள் வாழும்படியும் செய்யும் பாஞ்ச சன்னியத்தின் நாதத்தைக் கேட்டதில்லையா? அப்படியிருக்க நீர் பல்லாண்டு பாடுவானேன்.

ஆழ்வார்: இந்த பாஞ்ச சன்னியமே அடியேன் பயத்திற்குக் காரணமாக உள்ளது. தேவரீருடைய இருப்பிடத்தை

ஆதாரங்கள் பல உண்டு. கடும் தவம் புரிந்த தண்டக வன ரிஷிகள் உம்மைக் கண்டவுடன் அவர்களை மறந்து, உம் அழகில் ஆழங்கால்பட்டு, உமக்கு மங்களங்களை வேண்டி வரவேற்கவில்லையா? நீர் சங்கு சக்கரங்கள் உடன் கண்ணனாகப் பிறந்தபோது, அவ்வடிவழகை மறைத்துக் கொள்ளும்படி வசுதேவர்-தேவகி உம்மை வேண்டவில்லையா? விலையுயர்ந்த மாணிக்கத்தைப் பெற்றவன் அது பத்திரமாக இருந்தாலும், காற்று அசைந்தாலும் திருடர் வருவாரோ என்று பயப்படுவது உலக இயற்கை தானே? கோடி சூரியப்பிரகாசனும், மிகுந்த அழகனும், புருட உத்த மனுமாகிய உமக்காக அடியேன் கலங்குவதற்கு வேறு காரணமும் வேண்டுமோ?

எம்பெருமான் : ஆழ்வாரே! உம்முடைய வடிவையும், என் வடிவையும் உள்ளபடி நீர் உணர்ந்திருக்கின்றீர். காக்கக்கூடியவனான என்னை காக்கத் தகுந்தவனாகவும், காக்கப்படும் உம்மை காப்பவராகவும் நினைக்கும் உமது விபரீத அறிவு விடக்கூடியதல்லவா?

ஆழ்வார் : எம்பெருமானே? இல்லை. கர்மத்தின் காரணமாக வரும் விபரீத அறிவுதான் விடத் தகுந்தது. எஜமானுமாகிய உமக்கு ஆனந்தத்தை உண்டாக்குவதே அடியேனுடைய கடமை. இறைவனுக்கு பல்லாண்டு பாடுவதே உமது பரமபத திருமாமணி மண்டபத்திற்குச் செல்லும் வழியைக் காட்டும் என்பதை சிற்றறிவாளனாகிய அடியேன் உமக்குச் சொல்லவேண்டுமோ?

எம்பெருமான் : விஷ்ணு சித்தராகிய ஆழ்வாரே! மிக்க மிகழ்ச்சி அடைந்தேன். மற்ற ஆழ்வார்கள் எப்பொழுதாவது எனக்கு பல்லாண்டு பாடுவர். ஆனால் பல்லாண்டு பாடுவதோ உமது தேகவாழ்விற்கு அவசியமான உண்ணும் சோறும், பருகும் நீருமாக இருப்பதோடு அல்லாமல்; ஆத்ம நன்மைக்கு ஆராவமுதாகவும் நீர் எண்ணியதைக் கண்டு களிப்பெய்தினேன். இதனையை

**"உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்"**

என்பது இங்கு நினைவு கூறத்தக்கது.

ஆழ்வாரே! நீரோ அந்தணர். பல்லாண்டு பாடவும் தகுதியுடையவர். இனி நான் உம்மைப் பெரியாழ்வார் என்றே கூப்பிடுவேன். உலகும் அப்படியே கூப்பிடட்டும்.

இவ்வாறு விஷ்ணு சித்தர் பெரியாழ்வார் என்னும் பெரும் பெயர் பெற்றார். இதனையே,

**"பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர், பட்டர்பிரான், பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்"**

என்றார் மணவாளமாமுனிகள்.

நாமும் எம்பெருமானுக்கு மிகுந்த பக்தியுடன் பல்லாண்டு பாடி, அவர் அருள் பெற்று உய்வோமாக!

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்!



நல்ல திருப்பல்லாண்டு நான் றுன்றோன் வாழியே!
நானூற்று அறுபத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே!
சொல்லரிய ஆனிதனில் சோதிவந்தான் வாழியே!
தொடை சூடிக்கொடுத்தவள் தன்
தொழும்தமப்பன் வாழியே!
செல்வநம்பி தன்னைப் போல் சிறப்புற்றான் வாழியே!
சென்று கிழி அறுத்து மால் தெய்வமென்றான் வாழியே!
வில்லிபுத்தூர் நகரத்தை விளக்கினான் வாழியே!
வேதியர் கோன் பட்டர்பிரான் மேதினியில் வாழியே!

# தொண்டரடிப் பொடியாழ்வாரும் — திருமாலடியார்களும்

ஆழ்வார்களுள், திருவரங்கனைப் பாடிய விப்ரநாராயணர் எனும் தொண்டரடிப் பொடியாழ்வாரும் ஒருவராவர். இவர் திருவரங்க நாதனுக்கு, துளப மாலையும், மலர் மாலையும், பா மாலையும் சூட்டியவர். தவறு செய்யும் மக்கள் தவறை உணர்ந்து, மனம் திருந்தினால், திருவரங்கன் தவறை மன்னித்து அருள்புரிவார் என்பதைத் தன் வாழ்க்கை வரலாற்றின் மூலமும், தான் அருளிய திருமாலையின் மூலமும் நமக்கெல்லாம் உணர்த்தியவர்.

அத்தகைய சிறப்புமிக்க தொண்டரடிப் பொடியாழ்வாரை திருமாலடியார்கள் சந்தித்துப் பேசியதை வினா-விடைகளின் மூலம் காண்போம் இக்கட்டுரையில்.

விப்ரநாராயணர் துளசித்தோட்டத்தில் செடிகளுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். சில திருமாலடியார்கள் அவரைக் கண்டு வணங்கினர்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! தேவரீரைச் சேவித்து, தங்கள் வாழ்த்துக்களையும், அறிவுரைகளையும் பெற வந்துள்ளோம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : வாருங்கள் திருமாலடியவர்களே, தங்கள் திருவடிகளை வணங்குகின்றேன். தங்கள் வரவால் இத்தோட்டம் செழிக்கட்டும். திருவரங்கனுக்குத் தொண்டு செய்து நீடுழி வாழ்வீராக.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே, அடியோங்கள் சம்சாரமாகிய கடலிலே விழுந்து துன்பப் படுகின்றோம். இத்துன்பக் கடலிலே இருந்து கரையேறி எம்பெருமான் அருள்பெற நல்லதொரு வழியைக் கூறுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : அனைவரும் இப்படி அமருங்கள். கலியுகத்திலே; எம்பெருமான் திருவடிகளை அடைவதற்கு ஒரே எளிய வழி, அவன் திருநாமங்களைச் சொல்வதும், அவன் புகழ் பாடுவதுமேயாகும். அதனால் வைகுந்தப் பதவி கிடைக்கும். இதனை திருமாலே கீழ்க்கண்டவாறு கூறுகின்றார்.

"என் பேரைச் சொன்னானா? அல்லது நான் எழுந்தருளி இருக்கும் ஊர்களின் பேரைச் சொன்னானா? சொல்லியிருந்தால் அவர்களுக்கு வைகுந்தப் பதவி அளிப்பேன்".

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே, திருமால் பேரைச் சொல்லுவதால் நாம் அடையும் நன்மைகளைக் கூறுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியவர்களே, சம்சாரிகளாயிருப்பவர்கள், தாய், தந்தை, மனைவி, பிள்ளைகள், செல்வம், புகழ் போன்ற வேண்டாத பொருள்களை விரும்பி, அதை அடைய பெரும்பாடுபட்டு, அதனால் துன்பத்தை அடைவதோடு மட்டுமின்றி காலத்தையும் வீணே கழிக்கின்றனர். அவர்களைத் தோற்றுவித்த திருமாலுக்கும், திருமாலடியவர்களுக்கும், தொண்டு செய்து, அதனால் வைகுந்தப்பதவி அடையலாம் என்பதையும், அதுவே தமது கடமை என்பதையும் மறந்து விடுகின்றனர். அவனது திருநாமத்தைச் சொல்வதால் ஏற்படும் நன்மைகளைச் சொல்லுகின்றேன் கேளுங்கள். திருமாலின் பெயரைச் சொன்னால், நமது ஐம்பொறிகளாகிய மெய், வாய், மூக்கு, காது, கண் முதலியன நமது கட்டளைக்கு அடங்கும். நமது மனம் தூய்மை அடையும். சிறந்த திருமாலடியார்களாகத் திகழலாம். கொடிய யமன் கூட நம்மைக் கண்டு அஞ்சுவதோடு மட்டுமின்றி நமக்கே பணிவிடை செய்வான்.

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே. திருமாலின் நாமங்களைச் சொல்லி நற்பயன் அடைந்தவர்கள் சிலரைச் சொல்லுங்களேன்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : அடியார்களே! திருமால் நமது கட்புலனுக்கு அப்பாற்பட்டவன் ஆனாலும், அவனது திருநாமம் நமது அருகில் நின்று, கூப்பிட்ட நேரத்தில் உதவும். இதனையே,

**"அவன் தூரத்தனானாலும் அது கிட்டி நின்னு உதவும்"** என்று முமுட்சுப்படி கூறுகின்றது.

கோவிந்த நாமம் துரௌபதியின் மானத்தைக் காத்ததையும், ஆதிமூலம் என்ற நாமம் கஜேந்திரன் என்ற யானையை முதலையிடமிருந்து காத்ததை யும், நீங்கள் நன்கு அறிவீர்கள் அல்லவா? இவற்றால் திருமாலின் நாமப் பெருமையை நன்கு உணரலாம்.

திருமாலடியார்கள் : ஆம் ஐயா. இதை அடியோங்கள் அறிந்திருந்தும் உணராமல் போய் விட்டோம். இப்போது தேவரீர் உணர்த்த உணர்ந்தோம். இன்னும் சில ஆதாரங் களைக் கொண்டு அவனது நாமப் பெருமையை விளக்குங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : சுத்திர பந்து என்ற கொடிய பாபி கோவிந்த நாமத்தைச் சொன்னதால் மோட்சத்தை அடைந் தான். **"மூன்றெழுத்து (கோவித) உடைய பேரால் சுத்திரபந்து மன்றோ பராங் கதி கண்டு கொண்டான்".**

என்ற திருமாலை பாசுரத்தைக் காணுங்கள். அதுமட்டுமா. இன்னும் கேளுங்கள். முற்கலன் என்ற கொடியவன், பல கொடுமைகள் செய்து, பின்னர் பெருந்துன்பத்தை அடைந்தான். ஒரு முதியவரை நாடி, தன் துன்பம் தீர வழி கேட்டான். எள்ளினால் செய்த பசுப் பொம்மையை ஒரு பிராமணருக்கு தானம் செய்து, **"சர்வம் கிருஷ்ணார்ப்பணம்"** என்று சொல்லும்படி அறிவுறுத்தினார். அவன் அவ்வாறு செய்ய, இறந்தபோது எமதர்மனால் வரவேற்கப் பட்டு, நற்கதியடைந்தான்.

எம் பெருமான் நாமங்களுள் கோவிந்த, கிருஷ்ண நாமங்களின் சிறப்பை அறிந்தீர்கள் அல்லவா?

திருமாலடியார்கள் : ஆழ்வாரே, நாராயண, கேசவ நாமங்களின் பெருமையைச் சொல்லுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : எம்பெருமான் உலகில் உள்ள அனைத்துப் பொருள்களிலும் **"எள்ளுக்குள் எண்ணெய் போலும்"**

**"கரந்த பாலில் நெய்யே போலும்"**
**"உடல் மிசை உயிரே போலும்",**

நீக்கமற நிறைந்துள்ளான். இதனை, எங்குமுளன் கண்ணன் என்று கூறி, மெய்ப்பித்துக் காட்டிய பிரகலாதனன் வரலாற்றால் நன்கு அறியலாம். அடியார்கள் படும் துயரத்தை எல்லாம் தரை மட்டமாக்கும் நாராயணா என்னும் நாமம். கேசவ நாமத்தைச் சொன்னால் நமது துன்பங்கள் எல்லாம் கெடும். இதனை **"கேசவா என்னக் கெடும், இடராய வெல்லாம்"** என்பதால் உணரலாம்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே, பகவான் தொண்டு பற்றியும், அதனால் நாம் அடையும் பலன்களையும் கூறுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : எம்பெருமானாகிய திருவரங்கனுக்கு பூமாலையும், துளசி மாலையும் அணிவித்து, அவன் பெயரைப் பாடி, ஆடினால் அவன் பெரிதும் மகிழ்வான். நாம் செய்யும் தொண்டு ஒன்றுக்கு பத்தாக நன்மை தருவான். நற்பேறு தருவான். அப்படியிருக்க பகவான் தொண்டை மறந்து சம்சார இன்பத்தைப் பெரியதாக எண்ணி, அதனால் துன்பம் பல அடைந்து வருந்துகின்றனர் மக்கள். அவர்கள் கீழ் மக்களே ஆவர். அத்தகைய நன்றி மறந்தவர்களுக்கு உணவிடுவதை நீக்கி, நன்றியுள்ள நாய்க்கு இடுவதே சிறந்ததாகும்.

திருமாலடியார்கள் : விட்ரநாராயணரே, தேவர்களுக்கெல்லாம் தேவனா வான் யார் என்று கூறுங்கள்?.

தந்தை தயரதன் கட்டளையைச் சிரமேற் கொண்டு நாட்டைத் துறந்து கானகம் சென்று முனிவர்களின் துயரைப் போக்க, அரக்கர்களை அழித்து, சீதையைக் கவர்ந்து சென்ற கயவனாகிய இராவணனையும், அவனது இலங்கையையும் அழித்து சீதையை மீட்ட சக்ரவர்த்தித் திருமகனான திருமாலே தேவர்களுக்கெல்லாம் தேவனாவான். மோட்சத்தைத் தரக்கூடியவனும் அவன் ஒருவனே ஆவான். இதனை

"**சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனாவான்**" எனும் திருமாலை பாசுரத்தால் உணரலாம்.

திருமாலடியார்கள் : தொண்டரடிப்பொடியாரே, திருவரங்கத்தின் பெருமையைச் சற்றே விளக்கிக் கூறுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமால் எழுந்தருளிய திருப்பதிகளுள் தலை சிறந்ததும் முதலானதும் திருவரங்கமே. இங்கு எழுந்தருளியுள்ள அரங்கன் பிரம்மாவாலும், இராமபிரான் வரை 40 ஷத்திரிய குல மன்னர் களாலும் வழிபடப்பட்ட சிறப்பைப் பெற்றவன். கங்கையை விடப் புனிதமான காவிரியானது எப்பொழுதும் திருவரங்கன் திருவடிகளைத் தன் அலையாகிய கைகளால் வருடிக் கொண்டே இருக்கும். பல முனிவர்கள் இங்கு தவம் இயற்றி யுள்ளனர். யாராவது ஒரு அடியவராவது தம்மை வணங்கி நற்பேறு பெற மாட்டாரா? என்று காத்துக் கிடக்கின்றான் திருவரங்கன். அத்தகைய எளியவன் வாழும் திருப்பதி திருவரங்கம். அவன் பெயரையும், திருவரங்கன் வாழும் இத்திருப்பதியின் பெயரையும் சொன்னாலே போதும். நமக்கு நற்பேறு கிடைக்கும். அதைச் செய்யாமல் மக்கள் கவலைப்பட்டு வீணே காலத்தைக் கழிக்கின்றார்களே என் செய்வது. நீங்களாவது அவன் பெயரையும், அவன் வாழும் திருவரங்கத்தின் பெயரையும் சொல்லி மற்றவர் களையும், சொல்லச் செய்தால், அனைவரும் நற்பேறு பெறுவீர்கள். நரகம் செல்ல ஆள் இன்றி புல் முளைக்கும்.

"**அறிவிலா மனிதரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில்**
**பொறியில் வாழ் நரக மெல்லாம் புல்லெழுந்து**
**ஒழியு மன்றே**"

"**அவனதூர் அரங்கமென்னாது அயர்ந்து வீழ்ந்தளிய மாந்தர் கவலையுள் படுகின்றார்**" என்று அதற்காக அடியேன் வருந்துகின்றேன்.

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே! தேவரீர் சொன்னபடி திருவரங்கன் பெயரையும், திருவரங்கத்தின் பெயரையும் மக்கள் சொல்லி நல்வழியடையச் செய்ய ஒரு எளிய முறையைச் சொல்லுங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே மக்கள் குழந்தையாய் கருவிலே வளருகின்றபோதே, தாயின் மூலம் எம்பெருமான் திருக்குணத்தை உணர்த்தினால், பிள்ளைகள் அந்த உணர்வுடன் பிறப்பர். பின்பு அவர்கள் தாங்களாகவே இறையுணர்வு பெற்று விடுவர். எனவே தாய்மார்கள் கருவுற்றிருக்கும் காலத்தில் இறையுணர்வு பெறச் செய்தால், மக்கள் தானாகவே இறையுணர்வைப் பெற்று விடுவர். அரக்கனான இரணிய கசிபுவின் பிள்ளையின் அரக்க குணத்தை மாற்ற, நாரதர் திருமாலின் குணங்களை அத்தாய்க்குச் சொல்ல, அக்குழந்தை திருமாலின் பக்தனாகத் தோன்றியதை நாம் அனைவரும் அறிவோம் அல்லவா? எனவே மக்கள் இறையுணர்வைப் பெற கருவிலேயே இறையுணர்வை ஊட்ட வேண்டும்.

**"மருவிய பெரிய கோயில் மதிள் திருவரங்கம் என்னா கருவிலே திருவிலாதீர்"** என்று பாடியுள்ளதை நோக்குங்கள்.

திருமாலடியார்கள் : ஆகா என்னே சுலபமான வழி! என்னே தத்துவஞானம்! ஆழ்வாரே திருமால் தான் முழுமுதற் கடவுள் என்பதை நன்கு விவரித்துக் கூறுங்கள் ஐயா!

தொண்டரடிப் பொடியாழ்வார் : வேதங்கள், திருமாலே முழுமுதற் கடவுள், அவனே மோஷத்தைத் தர்வல்லவன் என்று கூறுகின்றன. உலகில் தீயவர் தோன்றி அதர்மத்தை வளர்த்த காலங்களிலெல்லாம், தானே பல அவதாரங்களை எடுத்து, தீயவர்களை அழித்து, நல்லோர்களைக் காத்து, அதர்மத்தை அழித்து, தர்மத்தைக் காத்தவன் திருமால் ஒருவனே என்பதை நமது இதிகாச, புராணங்கள் நமக்கு **"உள்ளங்கை**

நெல்லிக்கனி'' என காட்டியுள்ளன. கஜேந்திரன் என்ற ஆனையின்கால் முதலையின் வாயில் அகப்பட்டு தன் முழு வலிமையாலும் மீட்க முடியாதபோது, திருமாலை நினைத்து, ஆதிமூலமே என்று குரல் கொடுத்தது. அக்குரல் விண்ணுலகம் முழுதும் ஒலித்தது. பிரமன், சிவன், இந்திரன் முதலான தெய்வங்கள் எல்லாம் இப்பெயர் தங்களது இல்லையென சும்மா இருந்தனர். இவ்வுலகையும், உலக மக்களையும் காத்தருளுபவனும், தானே முதலும் முடிவுமாயுள்ள திருமால் ஓடோடி வந்து முதலையின் கழுத்தை அறுத்து யானையைக் காத்தருளினான். மற்றும் கிருஷ்ணாவதாரத்தில் அருச்சுனன், கர்ணன் போன்றவர்க்குத் தனது முழு உருவத்தைக் காட்டி, அவற்றுள் உலகத்தையே அடக்கிக் காட்டிய தோடன்றி தானே முழுமுதற் கடவுள் என்பதைத் தனது வாயாலே எடுத்துக் கூறினான். பிரளய காலத்தில் உலகமனைத்தையும் உண்டு ஆலிலையில் சிறுபிள்ளையாகக் காட்சி தந்தவனும் அவனே! இவற்றை

**''மற்றுமோர் தெய்வமுண்டோ மதியிலா மானிடங்காள்**
**உள்ளபோது அன்றி நீங்கள் ஒருவனென்னுணர மாட்டீர்''**
**'' அற்றமேல் ஒன்றறியீர் அவனல்லால் தெய்வமில்லை''**

**''ஆலமாமரத்தின் இலை மேலொரு பாலகனாய்**
**ஞாலமேழு முண்டான்''**

**''ஆலினிலைப் பாலகனாய் அன்றுலக முண்டவனே''**

எனும் அருளிச்செயல் பாடல்களால் உணரலாம்.

திருமால்அடியார்கள் : விப்ரநாராயணரே ! திருமாலே முழுமுதற் கடவுளாக இருக்க மற்ற தெய்வங்கள் எவ்வாறு தோன்றினர்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே ! உங்கள் ஐயம் சரியானதே. மக்கள் அனைவரும் மோக்ஷ இன்பத்தை விரும்புவ தில்லையே. இவ்வுலக இன்பத்திற்கும், வாழ்விற்கும் தேவையான, பொருள், கல்வி முதலிய பொருள் களை விரும்பி வேண்டுகின்றனர் அல்லவா?

அவரவர் முன் பிறவியில் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப, அவற்றின் பலன்களை அனுபவிக்க அவரவர் விரும்பும் பொருள்களை அளிப்பதற்கே பல தெய்வங்களுக்கும், பற்பல சக்திகளைக் கொடுத்து தோற்றுவித்தான். இதனையே **"நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோர் அருள்தன்னாலே"** என்று பாடினேன்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! மோஷத்தைத் தரவல்லவன் திருமாலே என்பதை ஆதாரம் காட்டி விளக்குங்கள்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : செல்வத்திற்குத் தலைவியாக திருமகளையும், கல்விக்குத் தலைவியாக கலைமகளையும் உண்டாக்கிய திருமால் மோஷத்தைத் தரவல்லவன் தானே என்பதனை தனது அவதாரங்களில் பல இடங்களில் காட்டியுள்ளான். கஜேந்திராழ்வானுக்கும், ஜடாயுவுக்கும், ததிபாண்டவனுக்கும், அவனது தயிர் பானைக்கும், சபரிக்கும் மோஷத்தைக் கொடுத்த வரலாறு நீங்கள் அறிந்திருப்பீர். இதனை கீழ்க்காணும் வாக்கியங்களால் நன்கு அறியலாம். **"யானைக்கும், பானைக்கும் மோஷத்தைத் தந்தவன்"**. எவ்வாறு செல்வத்திற்கு அதிபதியான திருமகளை வேண்டாமல் மூதேவியை வேண்டினால் செல்வம் கிடைக்காதோ அவ்வாறே மோஷத்தை விரும்புபவர் திருமாலை வேண்டினால் தான் கிடைக்குமே தவிர இதர தெய்வங்களை வேண்டினால் கிடைக்காது. இதனையே

**"காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும்**
**வண்ணம் கேட்டீரோ!**
**நம்பி நீர்காள் கருடவாகனனும் நிற்க சேட்டை**
**(மூதேவி) தன் மடியகத்து**
**செல்வம் பார்த்திருக்கின்றீரே!** என்று பாடியுள்ளேன்.

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே! உண்மையான பக்தர்களுக்கு அருள்புரிந்து அவர்களைக் காப்பான் திருமால் என்றும், அதனால் காக்கும் கடவுளான அவன் மெய்யன் என்றும் பாடியுள்ளீர் அது உண்மை.

ஆனால் நீங்களே **"பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடி உடைய கோமான்"** என்று பாடியுள்ளீரே! இதனை ஏதேனும் சான்று காட்டி விளக்குங்கள் ஐயா!

தொண்டரடிப் பொடியாழ்வார் : அடியார்களே! வேறு எந்த சான்றும் தேவையில்லை. என்னுடைய வாழ்விலே இதற்குச் சான்று காட்டலாம். அடியேன் முதலில் திருத்துழாய் தோட்டம் அமைத்து, திருத்துழாய் மாலை கட்டி, திருவரங்கனுக்கே அணிவித்து தொண்டு செய்தபோது, எனக்கு அருள்புரிந்து தான் **"மெய்யர்க்கே மேய்யனாகும்"** என்று காட்டினான். ஆனால் நானோ, மெய்யான இறை தொண்டை மறந்து, தேவதேவியின்பால் மனம் வைத்து, அவளுக்கே அடிமையாக இருந்தேன். அப்போது நான் நிலையற்ற பெண்ணாசைக்கு அடிமைப்பட்டு பொய்யனானேன். என்னைத் தடுத்து நிறுத்த முடியாது என்று சும்மா இருந்து விட்டான். என்னைத் தடுத்து, நல்வழிப்படுத்தியிருந்தால், தனது காக்கும் தொழிலைச் செய்து மெய்யனாகியிருப்பான். என்னைக் காக்காமல் விட்டதால் அவன் **"பொய்யனாகி விட்டான்"** எனவே என்னைப் போன்ற **"பொய்யர்க்கே பொய்யனானான்"** என்று பாடினேன்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! நமது **உறுப்புக்களால்** நாம் செய்ய வேண்டிய கடமைகள் யாவை! முதலில் நமது கண் பயன் என்ன என்று கூறுங்கள் சுவாமி.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! நாம் நமது கண்களால் நல்லனவற்றையே காண வேண்டும். இறைவன் நமக்காக அர்ச்சா மூர்த்தியாக எழுந்தருளியுள்ளான். அவனது திருமேனியை திருவடி முதல் திருமுடி வரைக் கண்டு சேவித்து, நமது தீவினைகளைப் போக்கிக் கொண்டு, நற்கதி அடைவதே நம் கண் பெற்ற பயனாகும்.

**“கண்ணாரக் கண்டுகக்கும் காதல்”, “கண்ணனைக் கண்ட கண்கள் வேறொன்றினைக் காணாவே”** என்றனர் ஆழ்வார்.

மற்றும் திருவரங்கனைக் கண்டு சேவிக்கும்போது குளிர்ச்சியான ஆனந்தக் கண்ணீர் பெருகி, அரங்கனைக் காண முடியாமல் தடுக்கின்றன. என்ன செய்வதென்று அறியாமல் திகைக்கின்றேன். இதனையே

**“கண்ணனைக் கண்ட கண்கள் — பனியரும்பு**
**உதிரும் மாலே! என் செய்கேன் பாவியேனே”** என்று பாடினேன்.

மற்றும்

**“கருமணியை கோமளத்தை கண்டு கொண்டு என்**
**கண்ணிணைகள் என்று கொலோ! களிக்கும் நாளே!**

என்றார் குலசேகராழ்வார். எம்பெருமான் திருவரங்கனது திருவடிகளும், திருமகள் வாழ்வதும், திருத்துழாய் மாலையும், நறுமணப் பூமாலையும் தவழ்வதும் ஆகிய திருமார்பும், மரகத மணி போன்ற அவனது திருவுருவமும், தோள்களும், தாமரைமலர் போன்ற கண்களும், பவளம் போன்ற திருவாயும், சிறப்பு வாய்ந்த திருமுடியும் நமது கண் பார்வையிலிருந்து என்றும் விலகாமல் இருக்க வேண்டும். இதனைத்தான்

**“பாயுநீர் அரங்கந் தன்னுள் பாம்பனைப் பள்ளி கொண்ட**
**மாயனார் திருநன் மார்பும் மரகத உருவும் தோளும்**
**தூய தாமரைக் கண்களும் துவரிதழ் பவள வாயும்**
**ஆயசீர் முடியும் தேசும் அடியரோர்க் ககலலாமே”**

**“மணியனார் கிடந்த வாற்றை மனத்தினால்**
**நினைக்கலாமே”** என்று பாடியுள்ளேன்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! யாரை நாம் வணங்கி வாழ வேண்டும்?

தொண்டரடிப் பொடியாழ்வார் : மனம், மொழி, மெய்களால் தூய்மை பெற்றுள்ள பக்தர்களின் மனங்களையே கோயிலாகக் கொண்டு குடியிருப்பவன் திருவரங்கன். எனவே நமது தூய

மனங்களையே கோயிலாக்கி, மாதவனாகிய திருவரங்கனையே தெய்வமாக்கி பக்தியாகிய பூவினை அவனது திருவடிகளில் இட்டு வணங்கினால், அவனது திருவருளைப் பெற்று திருநாட்டை அடைவது உண்மை.

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே! நாம் எதை மறந்து வாழக்கூடாது?

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருவரங்கனை நாம் சென்று வணங்கி, அவன் பெயரையும், புகழையும் பாடுவதை மறந்து வாழக்கூடாது.

திருமாலடியார்கள் : ஓகோ! இதைத்தான்

**"எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்ததோர்**
**கிடக்கை கண்டு, எங்ஙனம்**
**மறந்து வாழ்வேன்? ஏழையேன் ஏழையேனே"**

என்று பாடினீரோ! ஆழ்வாரே! நாம் நமது மனம், மொழி, மெய்களால் என்ன செய்ய வேண்டும்?

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! அன்று ஈன்ற கன்றினை விட்டுப்பிரிய மனமில்லாத பசுவினைப் போல, மனத்தினால் எப்போதும் திருமாலை நினைந்து, இடைவிடாத ஆழ்ந்த பக்தி செலுத்த வேண்டும். தீயதை நீக்கி, நன்மை தரக்கூடிய ஆழ்வார்கள் அருளிச் செயல் பாசுரங்களைப் பாடி அவனை மகிழ்விக்க வேண்டும். தினமும் திருத்துழாய், மலர்கள் ஆகியவற்றை அவன் திருவடிகளில் சேர்த்து வழிபட வேண்டும்.

திருமாலடியார்கள் : திருமாலுக்கு நாம் எவ்வாறு தொண்டு செய்ய வேண்டும்?

தொண்டரடிப் பொடியாழ்வார் : பேரன்புடனும், பக்தியுடனும் திருமாலுக்கும், அவன் பெரிதும் விரும்பும் திருமாலடியார்களுக்கும் நம்மால் இயன்ற அளவு தொண்டு செய்ய வேண்டும். இராம பிரான் இலங்கை செல்லக் கட்டிய அணைக்கு சிறுமணல்களைத் தன் உடல் மூலம் சேர்த்த

அணில்களைப் போல சிறு தொண்டாவது செய்ய வேண்டும். அவை ஒன்று ஓராயிரமாகப் பலன் அளிக்கும்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! கஜேந்திரன் தூய்மையான உள்ளத்துடன் சரணாகதி பண்ணியதால் ஓடோடி வந்து காத்தருளினான். ஆனால் எங்கள் மனமோ தூய்மையாக இல்லை. நாங்கள் இன்சொல் பேசி மற்றவர்களை இன்பமடையச் செய்வதை விட்டு கடுஞ்சொல் பேசி அவர்கள் உள்ளம் வருந்தும்படி அல்லவோ செய்கின்றோம். அப்படியிருக்க எங்களுக்கு எவ்வாறு அருள்புரிவான் திருவரங்கன்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : அடியார்களே! உலகில் தவறு செய்யாதவர் ஒரு சிலரே. தவறுகளை உணர்ந்து மீண்டும் அத்தவறுகளைச் செய்யாமல் படி மனம் திருந்தி, உள்ளம் உருகி வேண்டினால் தவறுகள் மலை போன்றதானாலும் அவற்றை கடுகளவாகக் கருதி மறந்து அருள்புரிவான்.

**"மலையை ஒரு கடுகாகக் காட்டுவான் போலே"**

திருமாலடியார்கள் : ஆஹா! என்னே அருமையான உதாரணம் சொன்னீர். இனி அடியோங்கள் உங்கள் அறிவுரைகளைப் பொன்னே போல் போற்றி கடைப்பிடிப்போம். இதுவரை பொருட் செல்வத்தை மட்டுமே நிலையானதாக நம்பி, எங்கள் உறவினர்களுக்குக் கூட ஒரு சிறு உதவியும் செய்யாமல் இருந்து விட்டோம். எதற்கும் பயன்படாத உப்புநீரைக் கொண்டு முகம் அலம்பும்போது, உப்புநீர் வாயில் படும். அதை நாம் துப்புவதைப் போல யாருக்கும் எந்த உதவியும் செய்யாததால் எங்கள் உறவினர்கள் எங்களைக் கண்டதும் வெறுத்து ஒதுக்கலாயினர். இனி இப்பொருள் ஆசையை விட்டு விடுவோம். பொருள் பெற்றால் அனைவருக்கும் உதவுவதோடு மட்டுமின்றி, திருமால் மற்றும் திருமாலடியார்கள்

தொண்டுக்கும் ப்யன்படுத்துவோம். ஆழ்வாரே! எமக்குத் தாயும் தந்தையும் யாவர் என்று கூறும்.

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! உமது உடலைப் பெற்றெடுத்த தாய் தந்தையர்கள் முதல் தெய்வங்கள் ஆவர். அவர்களைப் பேணிக்காப்பது நமது கடமையாகும். ஆனால் அழியாத நமது ஆத்மாவிற்குத் தாய் தந்தையர் எம்பெருமாட்டியும், எம்பெருமானுமே ஆவர். அத்துடன் நமது ஆத்மா நமது ஊழ்வினைக் கேற்ப நன்மை தீமைகளை அனுபவிக்கச் செய்பவனும், நமது ஆத்மா கடைத்தேற கருணை புரிபவனும் இத்திருவரங்கனே ஆவர். எனவே நாம் திருவரங்க நாயகியையும், திருவரங்கனையும் நமது ஆத்மத் தாய் தந்தையர்களாகக் கருதி, தொண்டு செய்ய வேண்டியது நமது தலையாய கடமையாகும்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! திருவரங்கன் எதைப் பெரிதும் விரும்புவான்?

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! யார் ஒருவர் பேரன்புடன் திருவரங்கன் திருமுடியில் திருத்துழாய் மாலையைச் சூட்டுகின்றார்களோ அவர்களையே திருவரங்கன் பெரிதும் விரும்புவான்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! கொடிய வினைகளின் பயனை யார் அனுபவிக்க மாட்டார்?

தொண்டரடிப் பொடியாழ்வார் : யார் ஒருவர் தங்கள் மனத்தை தூய்மையாக்கி, அம்மனத்தையே கோயிலாகக் கொண்டு, அதில் திருவரங்கனைத் தெய்வமாக வைத்து, பெரும் பக்தி யுடன் வணங்குகின்றனரோ, அவர்கள் எவ்வளவு கொடிய தீவினைகளைச் செய்திருந்தாலும், அவை சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கி விடும். எனவே கொடிய வினைகளின் பயனை அவர்கள் அனுபவிக்க மாட்டார்கள்.

திருமாலடியார்கள் : விப்ரநாராயணரே! புனிதமானது எது?

தொண்டரடிப் பொடியாழ்வார் : துளசி மாலையணிந்த திருவரங்கனைப் போற்றிப் புகழும் திருமாலடியார்கள் தாங்களே மனமுவந்து

அவர்கள் உண்ட உணவில் எஞ்சியதைத் தந்தால் அந்த எஞ்சிய உணவே புனிதமானதாகும்.

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! திருமாலடியார்களிடையே சாதி மத பேதம் காணலாமா?

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! திருமாலடியார்களிடத்தே வேறுபாடு காண்பதோ, காட்டுவதோ மிகக் கொடிய பாவமாகும். திருமாலுக்குத் தீங்கு செய்தாலும் அவனைப் பழித்தாலும் பொறுத்துக் கொள்வான். ஆனால் திருமால் அடியார்களுக்குத் தீங்கு செய்தாலோ அல்லது பழித்தாலோ சிறிதும் பொறுத்துக் கொள்ள மாட்டான். மாறாகச் சீறி பொங்கியெழுந்து அவர்களைத் தண்டிப்பான். அடியார்களுக்குத் தீங்கு செய்தவர்கள் வேதம் ஓதும் உயர்ந்த குலத்தில் தோன்றினாலும், அவர்கள் தாழ்ந்த குலத்துப் புலையர்கள் ஆவர். அடியார்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் அவர்களிடம் இருக்கும் சிறந்த கருத்துக்களைக் கேட்டு அறிய வேண்டும். அவர்களுக்கு சிறந்த கருத்துக்களைக் கூற வேண்டும். அவர்களைப் பணிய வேண்டும். அவர்களைத் திருமாலுக்குச் சமமாக நினைத்துப் போற்ற வேண்டும். இக்கருத்துக்களை மக்களுக்குப் புகட்டவே, திருமால் மீனாகவும், ஆமையாகவும், பன்றியாகவும், நரசிங்கமாகவும், அந்தணர் குலத்தில் வாமனனாகவும், பரசுராமனாகவும், அரச குலத்தில் இராமனாகவும், யாதவ குலத்தில் பரசுராமனாகவும் கண்ணனாகவும் அவதரித்துக் காட்டினான். மற்றும் ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை நான்காவது பிரிவிலும், குலசேகரரையும், திருமங்கையாழ்வாரையும் அரச குலத்திலும், தொண்டரடிப்பொடி, மதுரகவி ஆகியவர்களை அந்தணர் குலத்திலும் தோற்றுவித்துக் காட்டினான். இதனால் அடியார்கள் எவ்வுயிரிலும், எக்குலத்திலும் தோன்றிய போதிலும், திருமால் எத்தகைய வேறுபாடுமின்றி, கருணை காட்டினான், என்றும் காட்டுவான் என்பது **“உள்ளங்கை நெல்லிக் கனியாகும்”**

எனவே நீங்கள் உங்கள் மனதை தூய்மையாக வைத்துக்கொண்டு, திருமாலுக்கும், திருமாலடியார்களுக்கும் தொண்டு செய்து, திருமாலின் திருநாடு அடைவீர்களாக! இதை மற்ற மக்களுக்கும் எடுத்துச் சொல்லி, அவர்களும் திருநாடு அடையச் செய்வீர்களாக!

திருமாலடியார்கள் : ஆழ்வாரே! என்னே உமது மெய்யறிவு திருமாலின் நெறிமுறைகளைப் பழச்சாறு போல பிழிந்து கொடுத்தீர். தாங்கள் வழங்கிய நெறிமுறைகளைப் பொன்னே போல் போற்றி, கடைபிடித்து, பகவத் பாகவத தொண்டுகள் செய்து, மற்றவர்களையும் செய்யும்படிக் கூறி பலவகையால் தொண்டாற்றுவோம் என்று உறுதியளிக்கிறோம். எங்களை வாழ்த்துங்கள்!

தொண்டரடிப் பொடியாழ்வார் : திருமாலடியார்களே! கசப்பு மருந்து உடல் நோயைப் போக்கினாலும் மக்கள் அதை விரும்பாமல், உடல் நோயை உண்டாக்கும் இனிப்புப் பொருள்களையே விரும்புவர். அதைப்போல் நன்மை தரும் அறிவுரைகளை விரும்பிப் பின்பற்றாமல், தீமை தரும் தீய பழக்கங்களையே விரும்பிப் பின்பற்றி தீமை அடைந்து துன்புறுவர். நீங்கள் கொடுத்த உறுதிமொழி அடியேன் காதில் தேன் பாய்ந்தது போல் இனிக்கின்றது. உங்களை வணங்கி வாழ்த்துகின்றேன். வாழ்க பல்லாண்டு! பல்லாண்டு!



← தொண்டரடிப் பொடியாழ்வார்

# திருவரங்கனும் திருப்பாணாழ்வாரும்

ஸ்ரீமந் நாராயணன் நம்மையெல்லாம் சம்சாரமாகிய பாபக் கடலிலேயிருந்து பரமபதமாகிய கரையில் கொண்டு சேர்க்க திருவுள்ளம் கொண்டார். தனது பரத்துவ, விபவ, வியூக, அந்தர்யாமித்துவ நிலைகளால் முடிய்வில்லை என்பதை உணர்ந்தார். எனவே தனது பரமபத நிலையில் இருந்து தன்னைத் தாழவிட்டுக் கொண்டு, மண்ணுலகில் அர்ச்சையாகிய சிலை உருவில் எழுந்தருளினார். இந்த அர்ச்சை நிலை, தேங்கிய மடுக்களிலுள்ள நீரை வேண்டுமளவு அள்ளிப்பருகி, தாகம் தீர்த்துக் கொள்ளுவதைப்போல, எம்பெருமானை கண்ணாரக் கண்டு இன்பமடைந்து நற்பேறு பெற வழிவகுக்கும்.

இப்படி முதன் முதலாக அர்ச்சை நிலையில் எழுந்தருளிய இடமே திருவரங்கம் ஆகும். இங்கு எழுந்தருளிய அரங்கநாதன் பரமபதத்தில் நித்ய சூரிகளால் வழிபடப்பட்டு, பின்பு பிரம்மனாலும், சூரிய குல மன்னர்களில் இராமபிரான் முடிவாக நாற்பது மன்னர்களாலும் வழிபடப்பட்ட பெருமையுடையவன். இராமபிரானால் விபீடணுக்கு வழங்கப்பட்டது. விபீடணன் இலங்கைக்கு எடுத்துச் செல்லும் போது காவிரிக்கரையில் திருவரங்கத்தில் எழுந்தருளினான். மனம் வருந்திய விபீடணன், தனது தென்னிலங்கை திசை நோக்கியாவது எழுந்தருளும்படி வேண்ட, தென்திசை நோக்கி எழுந்தருளினான், திருவரங்கன். இதனையே **"தென்திசை இலங்கை நோக்கி"** என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரும், **"மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கை திசைநோக்கி மலர்க்கண் வைத்த என்னுடைய திருவரங்கன்"** என்று பெரியாழ்வாரும் பாடியுள்ளனர்.

இத்தகைய திருவரங்கனை ஆழ்வார்கள் தமது திருவாக்கால் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களால் பாடிப்பரவியுள்ளனர். அவர்களுள் திருப்பாணாழ்வாரும் ஒருவராவார். இவர் பாணர் குலத்தில் உதித்ததால் திருவரங்கன் கோவிலுக்குள் சென்று வழிபட முடியவில்லை. எனவே கோயிலுக்கு வெளியில் நின்று தினமும் யாழ் கொண்டு பாடிப் பரவி மகிழ்ந்து வந்தார். ஒருநாள் தன்னை மறந்து பாடிக்கொண்டிருந்தார். அன்று லோகசாரங்கர் என்ற அர்ச்சகர் திருவரங்கன் நீராட்டத்திற்கு தண்ணீர் கொண்டு வர காவிரிக்குச் சென்றார். வழியில் பாணாழ்வார்

ஆனால் தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்த பாணாழ்வார் விலகவில்லை. பொறுமையிழந்து கோபங்கொண்ட லோகசாரங்கர் ஒரு கல்லை எடுத்து பாணாழ்வார் மீது வீசினார். கல்பட்டு அவரது நெற்றியில் இரத்தம் கொட்டியது. நினைவுபெற்ற பாணாழ்வார் திடுக்கிட்டார். லோக சாரங்கரைக்கண்டு திகைத்தார். திருவரங்கன் வழிபாட்டுக்கு இடையூறாக இருந்ததை எண்ணி மனம் வருந்தினார். தன்னை மன்னிக்கும்படி வேண்டி, கவலையுடன் விலகி நின்றார்.

லோகசாரங்கர் பாணாழ்வாருக்குச் செய்த தீங்கை நினைத்து மனம் வருந்தினார். தண்ணீர் எடுத்துச் சென்று, அரங்கனை நீராட்ட கோயிலின் உள்ளே நுழைந்தார். அரங்கன் நெற்றியில் இரத்தம் வடிவதைக் கண்டு திடுக்கிட்டார். மனம் வருந்தினார். வழிபாட்டை முடித்து வீடு திரும்பினார். அன்றிரவு உணவு இன்றி உறங்கினார். திருவரங்கன் அவர் கனவில் தோன்றி, அவரது செயலை வன்மையாகக் கண்டித்தார். தவறுக்குத் தண்டனையாக, மறுநாள் பாணாழ்வாரைத் தோளின் மீது தூக்கி வந்து கோயில் கருவறையில் விடும்படிப் பணித்தார். விழித்தெழுந்த லோகசாரங்கர், காலையில் காவிரிக்கரைக்குச் சென்று பாணாழ்வாரைக்கண்டு வணங்கி, திருவரங்கன் ஆணையக் கூறி, தன் தோள் மீது அமரும்படி வேண்டினார். ஆழ்வார் முதலில் மறுத்தார். அரங்கன் ஆணையை மீற மனமின்றி, லோகசாரங்கர் தோள்மீது அமர்ந்து கோயிலுக்குச் சென்றார். (இந்நிலையில் மன அமைதியில்லாத திருப்பாணாழ்வார் திருவரங்கனிடம் முறையிடலானார்)

திருவரங்கனே! நான் என்ன பாபம் செய்தேன். நான் பிறந்தது தாழ்ந்த குலம் என்பதனால் உமது திருக்கோயில் உள்ளே வராமல், உன்னைத் தரிசிக்காமல், காவிரிக்கரையில் நின்று பாடினேன். என்னை மறந்து உன்னைப் பாடியதால் லோகசாரங்கருக்கு வழிவிடாமல் உமது திருப்பணிக்குத் தடையாகி விட்டேன். அதற்குத் தண்டனையாகத் தானே சாரங்கர் என் மீது கல் எறிந்தார். அதனால் தவறு ஒன்றுமே இல்லையே. அப்படியிருக்க, தினமும் உமக்குத் திருவாராதனை செய்பவரான உத்தமரின் தோள் மீது நான் ஏறி வரும்படிச் சொன்னது சரியல்லவே! மீண்டும் என்னைப் பாபத்திற்கு ஆளாக்க திருவுள்ளம் கொண்டீரோ?

திருவரங்கன்: திருப்பாணாழ்வாரே! திருமாலடியார்களிடையே சாதி மத பேதம் பார்ப்பது பெருந்தவறு. நான் எடுத்த ஒன்பது அவதாரங்களைக் காணுங்கள். மீன், ஆமை, பன்றி போன்ற உயிரினங்களாகவும், விலங்கும் மனிதனும் கலந்த நரசிங்கமாகவும்,

வாமனன், பரசுராமன் போன்ற அந்தணனாகவும், இராமாவதாரத்தில் ஷத்திரியனாகவும், கிருஷ்ணாவதாரத்தில் பலராமன் - கண்ணன் என்பவராக "யது" குலத்திலும் அவதரித்ததை நீவிர் அறிவீர் அல்லவா? மற்றும் ஆழ்வார்களில் பெரியாழ்வாரையும், மதுரகவி ஆழ்வாரையும் அந்தணர் குலத்திலும், நம்மாழ்வாரை வேளாளர் குலத்திலும், குலசேகரரை அரச குலத்திலும், திருமங்கையாழ்வாரை கள்ளர் குலத்திலும், உம்மைப் பாணர் குலத்திலும் சாதி மத பேதமின்றி அல்லவோ தோற்றுவித்தேன். எவராவது என்னைப் பழித்தாலும், எனக்குத் தீங்கு செய்தாலும் பொறுத்துக் கொள்வேன். ஆனால், என் அடியாருக்கு யாராகிலும் தீங்கு செய்தாலும் அவர்களைப் பழித்தாலும் நான் பொறுத்துக் கொள்ள மாட்டேன். எனது அன்பிற்குரிய திருமகளே ஆனாலும் யான் பொறுத்துக் கொள்ள மாட்டேன். இராமாவதாரத்தில் நான் காட்டிற்குப் புறப்பட்டபோது சீதை என்னை பின்வருமாறு பழித்தாள்.

**"என்னைக் காட்டில் பாதுகாப்பது கடினம் என்று கூறும் நீர் ஓர் ஆண் மகனா? என் தந்தை ஒரு ஆண் மகனுக்கு என்னைக் கொடுக்காமல், பெண் மகனுக்குக் கொடுத்து விட்டார்."**

இப்பழிச்சொல்லை நான் பொறுத்துக்கொண்டேன். ஆனால் சித்திரக்கூடத்தில் நான் மாரீசனென்ற மானைத் துரத்திச் சென்றபோது, என் தம்பியும் எனது அடியவனுமான உத்தமனான இலக்குவனைப் பழித்துப் பேசிய சிறிது நேரத்திற்கெல்லாம், எங்களைப் பிரிய நேர்ந்து விட்டது. இதைத்தான் எனைப்பாடிய தொண்டரடிப்பொடியாழ்வாரும்

> **"நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோர் அளவில் ஆங்கே அவர்கள்தாம் புலையர் போலும்"** என்றார்.

மற்றும் பெரியாழ்வாரும்,

> **"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாள்**
> **ஆகிலும் சிதகு உரைக்குமேல்"** என்றார்.

எமது அடியவரான உம்மை லோகசாரங்கர் அடித்துவிட்டாரே! நான் எப்படி பொறுத்துக் கொள்வேன். அதனால் நான் அவருக்கு இத்தண்டனையைக் கொடுத்தேன். எனவே நீர் வருந்தாமல் வாரும். உமக்கு எனது திருவுருவைக் காட்டுகின்றேன். சேவித்து என்னைப் பாடிக்கொண்டே வாரும்.

உமது மாமனாராகிய பெரியாழ்வாரும், உன் சிவந்த திருவடிகட்கன்றோ பின்வருமாறு காப்பிட்டார்.

**"உன் சேவடி செவ்வித் திருக்காப்பு"** என்றார்.

பொய்கையாழ்வாரும் உமது திருவடிகட்கு அன்றோ சொல்மாலை சூட்டினார்.

**"சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை"** என்றார்.

காவிரி நதியானது என்றும் எப்பொழுதும் தனது அலைகளாகிய கைகளால் உமது திருவடிகளை வருடிக்கொண்டிக்கின்றன என்றன்றோ! குலசேகராழ்வாரும் கூறுகின்றார்.

**"பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணியை – கோமளத்தை"** என்றார். மற்றும்

**"பாரினில் நின் பாதமூலம் பற்றினேன் பரம மூர்த்தி"** என்றார் தொண்டரடிப் பொடியாழ்வார். இவற்றையெல்லாம்விட நீர் பெரிய பிராட்டியாருக்கு உபதேசித்த துவய மந்திரத்தில்

**"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே"** என்றபடி, உமது திருவடிகளையல்லவோ பற்றும்படிக் கூறினீர். எனவே அடியேன் உமது திருவடிகளை முதன் முதலில் சேவித்ததற்கான காரணங்கள் இவற்றை விட வேறு ஏதேனும் வேண்டுமோ?

(திருவடிகளைச் சேவித்து நிமிர்ந்த ஆழ்வாரின் பார்வை திருவரங்கள் அணிந்திருந்த சிவந்த பட்டாடையின்பால் சென்றது)

**"உவந்த வுள்ளத்தனாய் உலகமளந்துண்டமுற**
**நிவந்த நீள்முடியன் அன்றுநேர்ந்த நிசாசரரைக்**
**கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில்**
**அரங்கத்தம்மான் அரைச்**
**சிவந்த ஆடையின்மேல் சென்றதாம் என் சிந்தனையே!"**

வாமனாவதாரத்தில் மாபலியின் கர்வத்தை அடக்க, அந்தணனாகத் தோன்றி, மூன்றடி மண் தானம் பெற்று, உடனே வானளாவி ஓங்கி உயர்ந்து வளர்ந்து, திரிவிக்ரமனாகி, உலகங்களை அளந்தவரே! இராமாவதார காலத்திலே சீதையுடனும் இலக்குவனுடனும் கான்கம் சென்றபோது, உம்மை எதிர்த்த பல்லாயிரம் அரக்கர்களையும், கர தூடணர்களையும் அழித்து மாய்த்தவரே! இன்று மணம் மிக்க மலர்ச்

சோலைகளால் சூழப்பட்ட இத்திருவரங்கத்தில் எழுந்தருளி அருள் சுரக்கும் அரங்கநாதரே! உமது இடையில் உடுத்தியுள்ள சிவந்த பட்டாடை என் உள்ளத்தைக் கவர்ந்து விட்டதே!

திருவரங்கன் : பாணாழ்வாரே! எமது திருவடிகளை முதலில் சேவித்ததற்கான காரணங்களைக் கூறினீர். நீர் கூறிய காரணங்கள் அனைத்தும் பொருத்தமே! அடுத்து எனது இடையில் அணிந்துள்ள சிவந்த ஆடையின் மேல் உமது நினைவு சென்றதன் காரணம் என்னவோ?

திருப்பாணாழ்வார் : உமது திருவடிகள் செந்தாமரை மலரின் இளஞ்சிவப்பு நிறத்தை ஒத்திருந்தன. அதை தரிசித்தவுடன், அடர்சிவப்பு நிறமுடைய உமது இடையில் அணிந்துள்ள அழகான பட்டாடை என் கண்களைக் கவர்ந்தது. இந்த அழகான ஆடை உமது அழகுக்கு, அழகூட்டுவது போலன்றோ விளங்குகின்றது. நீர் உடுத்துக் களைந்ததும் அந்த ஆடையை அடியேனுக்கு அளித்தால், அதை யான் உடுத்தி பெருமகிழ்வும், பெருமையும் அடைவேன் அல்லவா? அந்த ஆடை அடியேன் உடலில் பட்டவுடனே என் தீவினைகள் யாவும் தீயில் பட்ட பஞ்சுபோல் தீய்ந்து போகும் அல்லவா? இதனையே

**"உடுத்துக் களைந்த நின் பீதகவாடை உடுத்துக் கலத்த துண்டு"** என்றார் பெரியாழ்வார்.

"ஆடை உடுப்போம்" (நீ களைந்து கொடுத்த) என்றார் ஆண்டாள். எனவே அடியேன் உள்ளம் உமது சிவந்த ஆடையைத் தரிசித்தது தகுந்ததுதானே!

திருப்பாணாழ்வார் : **"மந்திபாய் வடவேங்கடமாமலை, வானவர்கள்**
**சந்தி செய்ய நின்றான் அரங்கத் தரவினணையான்**
**அந்திபோல் நிறத்தாடையும் அதன் மேல் அயனைப்**
**படைத்ததோ ரெழில்**
**உந்திமேல தன்றோ அடியேன் உள்ளத்தின் னுயிரே!"**

திருவரங்கன் : ஆழ்வாரே! சிவந்த ஆடையின்மேல் உமது சிந்தனை சென்றதற்கான காரணத்தைச் சொன்னீர்.

என்ன! பொருத்தம் உமது காரணங்கள். கேட்டுக் களித்தேன். ஆனால் தற்போது உமது உள்ளம் எனது கொப்பூழின் மேலும் தாமரைத் தண்டு, தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் /ஆகியவர்களை தரிசித்ததுதான் ஏனோ?

திருப்பாணாழ்வார் : அடர் சிவப்பு நிறமுள்ள சிவந்த பட்டாடையைக் கண்டு சேவித்ததும், அதன் நடுவே உள்ள சங்கினைப் போன்ற அழகான கொப்பூழைக் கண்டு களித்தது. அங்கு பசுமையான உயர்ந்தோங்கியுள்ள தாமரைத் தண்டையும், அதன் உச்சியுள்ள இளஞ் சிவப்பான தாமரையில் வீற்றிருக்கும் பரமனையும் கண்டு சேவித்தேன். அந்த பரமனன்றோ அடியேன் தந்தைக்குத் தந்தை, தந்தைக்கு முந்தை, முந்தைக்கு தந்தையானவன். அந்த முதல் தந்தையைத் தோற்றுவித்த மூலக்கிழங்காகிய தேவரீருடைய கொப்பூழைத் தேடிக் கண்டேன். இதனையே,

**"எந்தை தந்தை, தந்தை தந்தைதன் மூத்தப்பன்"** என்றார் பெரியாழ்வார். மற்றும்

**"நாராயணன் படைத்தான் நான்முகனை"** என்றார் திருமழிசையாழ்வார். ஆகவே அடியேன் தேவரீருடைய கொப்பூழினைச் சேவித்தேன். (அடுத்து ஆழ்வார் திருவரங்கனின் திருவயிற்றைக் கண்டு சேவித்தார்)

திருப்பாணாழ்வார் :

"சதுரமாமதின்சூழ் இலங்கைக் கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி, ஓர்வெங்கணை உய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமா வண்டுபாட மாமயிலாட அரங்கத்தம்மான், திருவயிற்
றுதரபந்தம் என்உள்ளத்துள் நின்று உலாகின்றதே"

இலங்கைக்கு இறைவணான இராவணனின் பத்து தலைகளையும் ஓர் அம்பினால் வீழ்த்திய இராமனாக அவதாரம் செய்த நீரே இங்கு இத்திருவ ரங்கத்தில் அரங்கநாதனாக எழுந்தருளிய உமது திருவயிற்றின் அழகு என் உள்ளத்தில் நின்று உலவுகின்றதே ஐயா!

திருவரங்கன் : திருப்பாணரே! இவ்வுலகைப் படைத்த பிரமன் தோன்றிய என் கொப்பூழ், இவ்வுலக மூலக்கிழங்கு என்று கூறி, அதைச் சேவித்ததாகக் கூறினீர். அதை அடுத்து எனது வயிற்றைச் சேவித்ததற்கு என்ன காரணம் கூறப்போகின்றீர்?

திருப்பாணாழவார் : திருவரங்கநாதரே! தேவரீரது கொப்பூழ் அமைந்துள்ள இடம் உமது திருவயிறு அல்லவா? அதைச் சேவிக்க வேண்டாமா? எனவேதான் உமது திருவயிற்றைச் சேவித்தேன். அதோடு மட்டுமின்றி, ஊழிக் காலத்தில் இவ்வுலக உயிரினங்கள் அனைத்தையும் உமது திருவயிற்றிலன்றோ வைத்துக் காப்பாற்றினீர். படைப்புக் காலத்தில் மீண்டும் உமிழ்ந்து உலகில் தோற்றுவிக்கின்றீர் அல்லவா. எனவே உமது திருவயிறு உலக உயிர்களின் பாதுகாப்புப் பெட்டகமாக அல்லவா விளங்குகின்றது. இதனையே

**"மூவுலகு உண்டு உமிழ்ந்த முதல்வன்"** என்றார் பெரியாழ்வார்.

கிருஷ்ணாவதார காலத்தில் யசோதைக்குத் தன் வாயில் இவ்வுலகம் முழுவதையும் காட்டியருளினீர். இதனையே.

**"அங்காத்திட வையமேழும் கண்டாள் வாயுள்ளே"** என்றார் பெரியாழ்வார். மற்றும் அருச்சுனனுக்கும், கர்ணனுக்கும் உமது விசுவரூபத்தில் உலக முழுவதையும் காட்டி அருளினீர். இத்தகைய பெருஞ்சிறப்பு வாய்ந்த உமது திருவயிற்றினைச் சேவித்து மகிழ்ந்தேன். (ஆழ்வாரின் பார்வை மகிழ்வால் சற்று மேலே நிமிர்ந்தது. திருவரங்கனின் திருமார்பைக் கண்டு மகிழ்ந்து பாடினார்)

திருப்பாணாழ்வார் :

**"பாரமாய பழவினை பற்றறுத்து, என்னைத்தன்**
**வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி யென்னுள்புகுந்தான்.**
**கோரமாதவம் செய்தனன்கொல் அறியேன் அரங்கத்தம்மான், திரு**
**வாரமார்பதன்றோ அடியேனை யாட்கொண்டதே"**

திருவரங்க நாதரே! அடியேனுடைய பழமையான பெரும் பாபங்களையெல்லாம் போக்கி, அடியேனை உன்னுடையவனாக ஆக்கிக் கொண்டு, அடியேன் மனத்திலும் புகுந்து விட்டீரே! உமது திருமார்பின்

பேரழகு அடியேனை அடிமை கொண்டுவிட்டதே. இந்நிலையை அடியேன் அடைவதற்கு எத்தகைய பெருந்தவம் செய்தேனோ! அறிய முடியவில்லையே!

திருவரங்கன்! பாணாழ்வாரே! எனது மார்பு உம்மை ஆட் கொண்டது என்று பாடினீரே! அதற்கு என்ன காரணமோ"

திருப்பாணாழ்வார்! திருவரங்கநாதரே! உமது மார்பகத்தைவிட்டு சற்று நேரமும் நீங்காமல் அன்றோ எமது ஆத்மத் தாயாகிய மகாலட்சுமி வாழுகின்றாள். சற்று நேரம் நீங்கினாலும் நீர் எம்போன்ற சேதனர்களை நாங்கள் செய்யும் தவறுகளுக்காக கண்டித்து விடுவீரே என்று பயந்துதான் நீங்காமல் வாழு கின்றாள். அவர் வாழ்வதால் உமது மார்பகமே மிகுந்த ஒளியுடன் பிரகாசிக்கின்றது. இதனையே,

**"அகலகில்லேன் இறையுமென்று அவர்மேல் மங்கையுறை மார்பா"** என்கின்றார் நம்மாழ்வார். மற்றும்
**"வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டே"** என்று பாடினார் பெரியாழ்வாரும்.
**"திரு மரு மார்ப"** என்றார்.

அதுமட்டுமா! ஒளி பொருந்திய கௌத்துப மணியும், நறுமணம் மிக்க துளசி மாலையும் தவழுகின்ற திரு மார்பு அல்லவோ? மற்றும் சண்பகம், மல்லிகை, இருவாட்சி, செங்கழுநீர் போன்ற மணம் மிகுந்த எட்டு வகை பூக்களால் தொடுக்கப்பட்ட, பல நிற வண்ணங்களாலும், பலவித நறுமணங்களாலும் ஆன கதம்பமாலை மிகவும் அழகுடன் தவழ்ந்து அடியேனது கண்ணையும் கருத்தையும் ஒழுங்கே கவர்ந்து விட்டதே. உமது மார்பில் தவழும் மாலையிலுள்ள மலர்களிலுள்ள தேனை உண்ட வண்டுகள் உமது திருப்புகழை ரீங்காரமிட்டுப் பாடிமகிழ்கின்றதல்லவா ?

இவ்வளவு சிறப்புக்களையும் ஒருங்கே பெற்ற உமது திருமார்பு அடியேனை ஆட்கொண்டதில் என்ன அதிசயம் உள்ளது? யான் பெற்ற பேற்றினை யாரே பெறுவர், யான் பெரும் பாக்யசாலி யன்றோ.

(அடுத்து திருமார்பை தரிசித்த ஆழ்வாரின் பார்வை மேலே உயர்ந்து அரங்கனின் கண்டத்தைத் தரிசித்தன)

**துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்**
**வண்டு வாழ் பொழில் அரங்க நகர்மேய — அப்பன்**
**அண்ட ரண்ட பகிரண்டத் தொருமால்வரை மற்றும்**
**உண்ட கண்டம் கண்டீர் அடியேன் உள்ளத்தின் இன்னுயிரே!**

பிறைச் சந்திரனைத் தன் முடியில் சூடிய சிவபெருமானின் துயரத்தைப் போக்கியவனே! வண்டுகள் மலர்களில் உள்ள தேனை உண்டு ரீங்காரம் செய்யும் சோலைகளையுடை திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! ஊழிக் காலத்தில் மூவுலகத்தையும், உலக உயிரினங்கள் அனைத்தையும் உண்ட, சங்கினைப் போன்ற உமது கண்டம் (கழுத்து) அடியேனுடைய உள்ளத்தின் இன்னுயிராக விளங்குகின்றதே!

திருவரங்கன்-: பாணாழ்வாரே! எனது மார்பகத்தின் சிறப்புக் களைக்கூறி அதை சேவித்ததற்கான காரணங்களைக் கூறினீர். மிகவும் பொருத்தமானதே! ஆனால் அடுத்து என் கண்டம் உமது இன்னுயிராக விளங்கு கின்றது என்று கூறினீரே! அதற்கு என்ன காரணத்தைக் கூறப்போகின்றீர்!

திருப்பாணாழ்வார் : திருவரங்க நாதரே! ஊழிக்காலத்தில் உமது கண்டமானது அண்டம் முதலான அனைத்து உலகங்களையும், யாதொரு இடையூறும் ஏற்படாத வாறு பக்குவமாக விழுங்கிய பெருமையையும் மற்றும் படைப்புக்காலத்தில் அவற்றையெல்லாம் வெளியே உமிழ்ந்த பெருமையையும் உடைய தன்றோ உமது கண்டம். ஆபத்துக் காலத்தில் பாதுகாத்து ஆதரிப்பதன்றோ சிறந்த தருமம். அதைச் செய்த உமது திருக்கண்டத்தை அடியேனது இன்னுயிராகக் கருதுவதற்கு இதைவிட வேறு காரணம் வேண்டுமோ?

(பின்னர் ஆழ்வாரின் பார்வை இன்னும் சற்று மேலே உயர்ந்தது. செந்துவர் நிறமான அரங்கனின் திருவாயின்பால் சென்றது. கண்டு சேவித்துப் பாடுகின்றார்.)

**"பரியனாகி வந்த அவுணன் உடல்கீண்ட**
**கரியவாதிப் பிரான் அரங்கத்தமலன் மிசைந்து**
**கரியவாகிப் புடைபரந்து செவ்வரியோடிய நீண்ட அப்**
**பெரிய வாய கண்கள் என்னைப்போதமை செய்தனவே."**

நரசிம்மாவதார காலத்தில் பக்தனாகிய பிரகலாதனுக்காக அவன் தந்தையான இரண்யகசிபு என்ற அசுரன் பருத்த உடலை கிழித்துக் கொன்ற, காயாம்பூ போன்ற கரிய நிறமுடைய கண்ணனான நீ! இன்று இத்திருவரங்கத்தில் அர்ச்சையான சிலை வடிவில் அரங்கநாதனாக, எல்லோரும் எளிதில் கண்டு சேவிக்கும் வண்ணம் எழுந்தருளியுள்ளீர்! யாங்கள் உங்கள் திருமேனி வடிவழகைக் கண்டு சேவிக்கும்போது, எங்களுக்கு அருட்பார்வை பொழிந்து ஆனந்திக்கச் செய்வது உங்கள் திருக்கண்கள் அன்றோ. உமது திருக்கண்கள் எம்மைக் கண்டும் காணாததுபோல் இருந்தும், அருள் மழை பொழிகின்ற கண்கள் அல்லவா? கரிய படலத்துள், செம்மையான வரிகளில் இடையே கருவிழிகள் மிகவும் அழகாகத் தோன்றுகின்றனவன்றோ! உமது திருக்கண்கள் செந்தாமரை மலர் போன்ற கண்களல்லவோ. இதனையே ஆண்டாளும்.

**“பங்கையக் கண்ணனைப் பாடேலொரெம்பாவாய்”** என்றும் **“செங்கண்”** என்றும், **“தாமரைப் பூப்போலே செங்கண்”** என்று ஆண்டாளும்,

**“செந்தாமரைக் கண்ணன்”, “ செந்தாமரைக் கண்ணனெம்மான்”** என்றார் நம்மாழ்வாரும்.

உமது இருகண்களில் ஒன்றினால் கடுமையாக நோக்கி எமது பாபங்களுக்கான தண்டனையை அளிக்கின்றீர்! மற்ற கண்ணினால் கருணை பொழிந்து குளிர்ச்சியாக நோக்குகின்றீர்! அதனால் உமது கண்கள் வெப்பத்தைக் கொடுக்கும் சூரியனைப் போலவும், குளிர்ச்சியைத் தரும் சந்திரனைப் போலவும் அன்றோ விளங்குகின்றன. இதனையே,

**“திங்களும் ஆதித்யனும் எழுந்தாற்போல் அங்கண்**
**இரண்டும் கொண்டு**
**எங்கள் மேல் நோக்குதி யேல்”** என்றார் ஆண்டாள்.

இவ்வாறு, உமது திருக்கண்கள் அல்லவா அடியவர்கள் மீது கருணை பொழிந்து காக்கின்றன. எனவேதான் அடியேனது கண்கள் உமது திருவாயினை தரிசித்த பின்னர் திருக்கண்களை தரிசித்தன.

**“ஆலமா மரத்தினிலை மேலொரு பாலகனாய்**
**ஞாலமேழு முண்டான் அரங்கத்தர வினணையான்**
**கோலமா மணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில்**
**நீலமேனி யய்யோ நிறைகொண்டதென் னுசினையே!”**

ஊழிக் காலத்தில் ஏழு உலகங்களையும் உண்டு, வயிற்றினுள் வைத்துப் பாதுகாத்து, ஒரு ஆலிலையில் துயில் கொண்ட திருமாலாகிய நீர், இன்று இத்திருவரங்கத்திலே திருவநந்தாழ்வான் மேல் கண் வளர்ந்தருளியுள்ளீர். உமது திருமார்பை இரத்தினங்களால் செய்யப்பட்ட அழகிய மாலையும், முத்து மாலையும் அலங்கரிப்பதால் மிகுந்த அழகுடன் விளங்குகின்றது. இத்தகைய உமது திருமார்பின் அழகும், கருநெய்தல் நிறம் போன்ற உமது திருமேனியின் அழகும், எனது மனத்தில் இருந்த அடக்கத்தை அழித்தது. மற்றும் என் மனத்திலிருந்து நீங்காமல் நிலைத்து நின்று கொள்ளை கொண்டுவிட்டதே.

திருவரங்கன் : பாணாழ்வாரே ! இதுவரையில் எனது திருமுடியிலிருந்து திருக்கண்கள், முதலான அவயவங்களை தரிசித்ததற்கான காரணங்களைக் கூறினீர். ஆனால் தற்போது திடீரென்று எனது மார்பில் அணிந்துள்ள இரத்தின மாலையையும், முத்து மாலையையும் அணிந்துள்ள எனது திருமேனியை தரிசித்ததற்கும் ஊழிக்காலத்தில் யான் ஆலிலையில் துயின்ற நிலையை நினைத்து பாடியதற்கும் என்ன காரணம் கூறப்போகின்றீர்.

திருப்பாணாழ்வார் : திருவரங்கநாதரே ! நீர் இரத்தின மாலையை அணிந்துள்ளதால் அம்மாலையால் ஏற்படுகின்ற பிரகாசமான நீல ஒளியானது உமது திருமேனி முழுவதும் பரவியதால் உமது திருமேனி அழகு எனது உள்ளத்தில் நிறைந்து, எனது உள்ளத்தை கொள்ளை கொண்டதே. எனது உள்ளமே கொள்ளை கொண்ட பின்னர் அடியேனது கண்கள் உமது திருமேனியை தரிசித்ததற்கு வேறு காரணமும் வேண்டுமோ? மற்றும் ஊழி முடிவில் நீர் ஒருவரன்றோ ! அதுவும் ஒரு சிறிய ஆலிலையில் பள்ளி கொண்டு, உலகமனைத்தையும் உண்டு, காத்து, துயில் கொண்டனையல்லவா? இதனால் நீர் முழுமுதற் கடவுள் என்பது புலனாகின்றதல்லவா? எனவேதான் ஆலிலையில் துயில்கொண்ட நிலையை நினைத்துப் பாடினேன்.

நீல முகில் வண்ணத்தையுடையவரான நீர் அன்று ஆயர்பாடியில், கோபாலர்களிடையே வளர்ந்து, வெண்ணையுண்ட திருவாயினையுடைய உமது திருமேனி அடியேனுடைய உள்ளத்தைக் கவர்ந்துவிட்டதே. தேவர்களுக்குத் தலைவனும், திருவரங்கத்தில் எழுந்தருளிய திருவரங்கநாதனும், அடியேனுக்கு அமுதத்தைப் போன்றவனுமாகிய தேவரீரைக் கண்ணாரக் கண்டு தரிசித்த கண்கள், உம்மைக் காண்பதைத் தவிர வேறு ஒன்றினைக் காணவில்லையே. எங்கெங்கு நோக்கிலும் உமது திருமேனியன்றோ தோன்றுகின்றது. இதனைத்தானே,

**"தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே"** என்றார் நம்மாழ்வார். திருப்பாணாழ்வாரின் ஆழ்ந்த பக்தியைப் பாராட்டிய திருவரங்கன் தமது கருவறைக்குள் அழைத்து திருநாடு நல்கினார்.

இவ்வாறு திருப்பாணாழ்வார், திருவரங்கன் திருவடி முதல் திருமுடி வரைக் கண்டு சேவித்ததற்கான பொருத்தமான காரணங்களைக் கூறினார். நாமும் அக்காரணங்களை உணர்ந்து, உள்ளுணர்வோடும், ஆழ்ந்த பக்தியுடனும் திருவரங்கனைச் சேவித்து திருநாடு அடைவோமாக !





★ஆலமாமரத்தினிலைமேல் ஒருபாலகனாய்
ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான்
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில்
நீலமேனிஐயோ! நிறைகொண்டதென்நெஞ்சினையே.

# திருவேங்கடவனும் – திருமங்கை ஆழ்வாரும்

திருவேங்கடம் என்றாலே பாபங்களைத் தீயில் பட்ட பஞ்சுபோல் போக்கக்கூடிய சிறந்த மலை என்பதுதான் பொருள். எனவே மன்னனாய் இருந்து ஆழ்வாரான திருமங்கையாழ்வாரின் உள்ளம் "திருவேங்கடம் அடை" என்று ஆழ்வாரைத் தூண்டியது. ஆழ்வார் திருவேங்கடம் என்னும் திருப்பதிக்குப் புறப்பட்டார். மிகவும் சிரமப்பட்டு திருமலையை அடைந்து திருவேங்கடவனை தரிசித்தார்.

ஆனால் திருவேங்கடவனோ! ஆழ்வார் சிரமப்பட்டு ஆவலுடன் வந்து தன்னை வணங்கினாரே! அவரை இன்முகம் காட்டி, இனிய வார்த்தைகள் மூலம் நலம் விசாரிக்க வேண்டுமே என்று கருதாமல் பேசாமல் இருந்து விட்டார். இதைக்கண்ட ஆழ்வார் மிகவும் மனம் வருந்தினார்.

இப்படி வேங்கடவன் புறக்கணித்தது தன் தீவினைப் பயனே என்று துயரப்பட்டு உள்ளம் உருகினார். பலவாறு புலம்பினார். கண்ணீர்விட்டு அழுதார். தனது தீவினைகளைப் போக்கி, திருவருள் புரியுமாறு வேண்டினார். உடலும், உள்ளமும் தளர்ந்து மயங்கி விழுந்தார்.

இதைக் கண்டு மனம் தளரந்தார் கருணைக்கடலான வேங்கடவன். ஆழ்வாரின் கனவில் தோன்றினார். அவருடன் பேச ஆரம்பித்தார்.

**திருவேங்கடவன்:**

திருமங்கை மன்னரே! நான் உம்மை வரவேற்று உபசரிக்க வில்லையென்று மனம் வருந்துகின்றீர். நீர் எமக்கோ அல்லது எனது அடியார்களுக்கோ என்ன தொண்டு செய்துள்ளீர்! தொண்டு செய்து வாழாத மானிடராகத்தானே இருக்கின்றீர். அப்படியிருக்க நான் உம்மை நலம் விசாரிக்கவில்லையென்று வருந்துவதில் நியாயம் ஏதும் இல்லையே!

**திருமங்கை ஆழ்வார்:**

கார்மேகம் போன்று எந்த பயனையும் என்னிடம் இருந்து எதிர்பார்க்காமல் அருள்புரியும் கருணைக்கடல் அல்லவா? நீர். இருந்தாலும் சொல்லுகின்றேன் கேளும்.

திருவரங்கத்தில் அரங்கனாகக் கோயில் கொண்டுள்ள உமது கோயிலுக்கு கோபுரமும், மதிலும் கட்டுவதற்கு எவ்வளவு துன்பப்பட்டேன். திருடனாகி, வழிப்பறி செய்தும், நாகப்பட்டினத்திலிருந்து பொன் சிலையைக் கொண்டு வந்தும் திருப்பணி செய்யவில்லையா? உமது அடியவர்களுக்கு தினமும் அமுது படைக்கவில்லையா? இவற்றையெல்லாம் மறந்து விட்டீரோ?

திருவேங்கடவன் : ஆம். நீவிர் செய்த திருத்தொண்டினை யான் மறக்கவில்லை. ஆனால், நீவிர் உமது உழைப்பால் பெற்ற பொருளைக் கொண்டு திருப்பணி செய்யவில்லையே. திருவமுது அடியவர்களுக்குப் படைத்தது உண்மையே. ஆனால் குமுதவல்லியை மணப்பதற்காகத்தானே செய்தீர். நீரே மனமுவந்து, பயன் நோக்காமல் செய்யவில்லையே.

திருமங்கையாழ்வார் : ஆம் சுவாமி! என் சுயநலத்திற்காகத்தான் செய்தேன். இப்போதுதான் உணருகின்றேன். என்னைப் பெற்ற தாய், தந்தை, மனைவி ஆகியோர்தான் ஆதரவு என்று தவறாக நினைத்து, சம்சாரக் கடலிலே விழுந்து துன்பப்பட்டு காலத்தை வீணாகக் கழித்து விட்டேன். நாயைப்போல கீழ் மகனாக இருந்து விட்டேன். நீர்தான் அடியேனுக்கு ஆத்மத் தந்தையென்றும் அவர்மேல் மங்கைதான் ஆத்மத்தாய் என்றும் உமது அடியார்கள்தாம் உறவினர்கள் என்றும் இப்போதுதான் உணருகின்றேன். இவ்வாறு அடியேன் செய்த பாபங்களைப் போக்கிக்கொள்ள வேண்டி, உம்மை வணங்கி, உமது திருவடிகளில் சரணமடைய வந்துள்ளேன். எமக்கு அருள் புரிவீராக!

**“தாயே தந்தை யென்றும் தாரமே கிளை மக்களென்றும்**
**நோயே பட்டொ ழிந்தேன் நுன்னைக்’ காண்பதே ராசையினால்**
**வேயேய் பூம்பொழில் சூழ் விரையார் திரு வேங்கடவா!**
**நாயேன் வந்த டைந்தேன் நல்கி ஆளென்னைக் கொண்டருளே.”**

திருவேங்கடவன் : குமுதவல்லியின் மணவாளரே! உலகில் மக்கள் தாங்கள் செய்யும் பாப, புண்ணியங்களுக்கேற்ற பலனை நிச்சயம் அனுபவித்துத்தான் தீரவேண்டு

மென்பது நீர் அறியாதது இல்லையே! நீரும் சில பாடங்களைச் செய்துள்ளீரே! அதை நீர் அனுபவிக்க வேண்டாமா?

திருமங்கையாழ்வார் : திருவேங்கடமுடையாரே! நீர் சொல்லுவது முற்றிலும் உண்மையே. மானின் பார்வையுடைய இளம் பெண்களின் கண் மயக்கத்திலே மயங்கி பல பாடங்களைச் செய்தேன். அதுவும் நான்கு விதமாக நரக தண்டனையை அடையும்படியான பாடங் களைச் செய்துள்ளேன். அதையும் பிறர் தூண்டு தலின்றி நானே செய்தேன். அப்படிப்பட்ட பாடங்களைச் செய்தது பெரும் தவறு என்பதை இப்போதுதான் உணருகின்றேன். தவற்றை உணர்ந்து, இனி அப்படிப்பட்ட பாடங்களைச் செய்யக் கூடாது என்று உறுதி பூண்டேன். மன்னிக்க வேண்டி உமது திருவடிகளையே சரணமாகப் பற்றினேன். என் பாடங்களைப் போக்கி எனக்கு அருள்புரிவீராக!

**"மானேய் கண்மடவார் மயக்கிற்பட்டு மாநிலத்து**
**நானே நானாவித நரகம்புகும் பாபஞ்செய்தேன்**
**தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலை – என்**
**ஆனாய் வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே!**

திருவரங்கன் : மன்னர் குலத்தில் தோன்றிய ஆழ்வாரே! நீர் மண்ணாசை கொண்டு பல போர்களைச் செய்து பல்லாயிரம் வீரர்களைக் கொன்று குவித்ததை மறந்து விட்டீரா?

திருமங்கையாழ்வார் : திருவேங்கட மாமலை எப்போதும் குளிர்ந்த மேகங்களால் சூழப்பட்டு குளிர்ச்சியாக இருப்பதைப்போல், நீரும் என்றும் கருணையே வடிவாகக் கொண்டவர் அல்லவா? நீர் சொன்னதைப்போல (நற்காரியங்கள்) உமக்கும் உமது அடியவர்க்கும் தொண்டு செய்ய வேண்டும் என்ற நல்ல குறிக்கோள் எதையும் நான் பெற்றிருக்க வில்லை. அதற்கு மாறான மண்ணாசைகொண்டு பல போர்களைச் செய்து, பல்லாயிரம் வீரர்களைக்

கொன்று கொலைக்காரனானேன். மற்றும் யாசித்து வந்தவரிடம் நன்மை பயக்கும் இனிய வார்த்தை களைச் சொல்லி உதவி புரியாமல், தீமை தரும் கொடிய சொற்களைச் சொல்லி, அவர்கள் மனம் புண்படும்படிச் செய்தேன். நீங்கள் எடுத்துச் சொல்லும்போதுதான் தவறை உணருகின்றேன். அடியவர் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் கோவிந்தனே! அடியேன் குற்றங்களை மன்னித்து அருள் புரிவீராக!

**"கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோள் ஒன்றிலாமையினால்**
**என்றேனும் இரந்தார்க்கு இனிதாக வுரைத்தறியேன்**
**குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா!**
**அன்றே வந்தடைந்தேன் அடியேனை யாட்கொண்டருளே!**

திருவேங்கடவன் ! நீவிர் பலபிறவிகள் எடுத்து வருந்தினீர்! நீர் உய்ய வேண்டுமென்பதற்கே மானிடப் பிறவியைத் தந்தேன். இப்பிறப்பைத் தெப்பமாகக் கொண்டு சம்சாரமாகிய கடலைக் கடந்து, எம்மை வந்தடைவீர் என்று நினைத்தேன். ஆனால்

திருமங்கையாழ்வார் : அணுவளவும் உம்மை விட்டுப் பிரிந்தால் நீர் அடியவர்கள் செய்யும் தவற்றுக்காக தண்டித்து விடுவீரே என்று பயந்து உம்மை விட்டுப் பிரியாமல் உமது திருமார்பிலே வாழ்கின்ற அவர் மேல் மங்கை மணவாளரே! நீர் சொன்னதைப் போல் யான் பலபிறவிகள் எடுத்தேன். கஜேந்திர ஆழ்வானைப் போல் உம்மை வணங்கினேன் இல்லை. ஜடாயுவைப்போல் உமக்கு உதவினேன் இல்லை. எனவே இப்பிறப்பிலாவது உம்மை யடைவதற்குரிய யாதொரு சிறிய தொண்டையும் செய்யாமல், பல துன்பங்களில் சிக்கி துயரம் அடைந்தேன். இறுதியாக திருவேங்கடமலையில் உம்மைக் கண்டு வணங்கி, பாபம் நீங்கி, பரமபதம் அடையலா மென்று வந்தேன். எனக்கு அருள்புரிவீராக!

**"குலந்தா னெத்தனையும் பிறந்தே யிறந்தெய்த் தொழிந்தேன்**
**நலந்தா னொன்றுமிலேன் நல்லதோ ரறஞ்செய்து மிலேன்**
**நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா!**
**அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனை யாட்கொண்டருளே."**

திருவேங்கடவன் : திருவாலி நாடுடைய ஆழ்வாரே! எனக்குச் செய்யும் தொண்டை விட, என் அடியவர்களாகிய பாகவதர் களுக்குச் செய்யும் தொண்டு, தினை அளவாக இருந்தாலும் அதை நான் பனை அளவாகக் கொண்டு அருள்புரிபவன். அப்படி ஏதாகிலும் செய்தீரோ?

திருமங்கையாழ்வார் : திருமகள் கேள்வனே! உலகில் என்னென்ன பாபங்கள் உள்ளனவோ! அவ்வளவு பாபங்களையும் செய்து விட்டேன். தேனில் மொய்க்கும் ஈக்களைப் போல, அப்பாபங்கள் என்னை வந்தடைந்து துன்புறுத்தின. அதனால் மிகவும் இளைத்து விட்டேன். அதன் பிறகாவது உமது, திருவடிகளை வணங்கி, உன் புகழைப்பாடினேனா? என்றால் அதையும் செய்யவில்லை. தவறு செய்த பிள்ளை, துன்பத்தையெல்லாம் அனுபவித்து மனம் நொந்து தன் தந்தையின் உதவியையும், அன்டையும் எதிர்நோக்கி வருவதைப் போல, அடியேனும் எனது ஆத்மாவிற்குத் தந்தையாகிய உம்மை வந்தடைந் தேன். என் அப்பா! எனக்கு அருள் புரிவீராக!

**"எப்பாவம் பலவும் இவையே செய்திளைத் தொழிந்தேன்**
**துப்பா! நின்னடியே தொடர்ந் தேத்தவும் கிற்கின்றிலேன்**
**செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட மாமலை, என்**
**அப்பா! வந்தடைந்தேன் அடியேனை ஆட் கொண்டருளே"**

திருவேங்கடவன் : திருமங்கை மன்னரே! நீர் மன்னராக இருந்தபோது உமது நாட்டில் ஐம்பெரும் பாபங்கள் ஏதும் நடவாமல் குற்றம் செய்தவரை தண்டித்து நல்லாட்சி நடத்தினீர். ஆனால் உமது உடலில் உள்ள ஐம்பொறிகளை அடக்கி, ஆண்டு எம்மீது பக்தி செய்ய இயலாமல் போய்விட்டீரே!

திருமங்கையாழ்வார் ! திருவேங்கடமலைக்கு அதிபதியான எனது அண்ணலே! மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களும் ஐந்து பொறிகளால் ஆகியது அவ்வுடல். புண்கள் நிறைந்த இவ்வுடலில் அகப்பட்டுக்கொண்ட யான் சொல்ல முடியாத துன்பங்களை அனுபவித்தேன். எனவே இன்னும் ஒரு மறுபிறவி எடுக்க பயந்து கொண்டு, உமது திருவடிகளில் சரணாகதி பண்ணினேன். அடியேனுக்கு அருள்புரிவீராக!

**"மண்ணாய் நீ ரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாய்**
**புண்ணா ராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந் தெய்த்தொழிந்தேன்**
**விண்ணார் நீர்சிகர விரையார் திருவேங்கடவா!**
**அண்ணா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே!**

திருவேங்கடவன் : திருமங்கை ஆழ்வாரே! மக்களில் இளம்பருவத்தில் தருமநெறியைத் தெரிந்து கொள்ள முடியாமையால் தீமைகள் செய்யலாம். ஆனால் வயது முதிர்ந்த நிலையில் தரும நெறியைப் பின்பற்றி நடக்க வேண்டும் அல்லவா? ஆனால் நீர் அப்படிச் செய்யவில்லையே. அப்படியிருக்க என் அருள் வேண்டுவது எப்படிப் பொருந்தும்?

திருமங்கையாழ்வார் : ஸ்ரீநிவாசப் பெருமானே! நீர் கேட்பது முற்றிலும் பொருத்தமே. அடியேன் சிறியவனாக இருந்தபோது அறியாமையால் பல தீயசெயல்களைச் செய்து விட்டேன். இவை தெரியாமல் செய்த குற்றம். ஆனால் பெரியவனான போது உடல் இன்பத்தையே பெரிதும் விரும்பி, தவறான வழியில் பல பெண்களுடன் கூடி, காலத்தை வீணே கழித்து விட்டேன். என் அழகும், பெருமையும், வலிமையும் கெட்டு ஒழிந்தன. இவை தெரிந்தே செய்த குற்றங்கள். நரக தண்டனைக்கு பயந்து வந்துள்ளேன். இப்போது உன் கருணைமிகு பார்வை என்மீது பட்டதால் தவற்றை உணர்ந்து உம்மை தரிசித்து உய்ய வந்துள்ளேன். நீர் பாபங்களைப் போக்குபவன் என்பதால்தானே 'ஹரி' என்ற

பெயரைப் பெற்றாய். உன் திருநாமத்தின் பெருமைக்கு பங்கம் வராமல் என்னைக் காப்பாற்றுவாயாக !

**தெரியேன் பாலகனாய் பலதீமைகள் செய்துவிட்டேன்**
**பெரியோனாயினபின் பிறர்க்கேயுழைத் தேழையானேன்**
**கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!**
**அரியே! வந்தடைந்தேன் அடியேனை யாட் கொண்டருளே.**

திருவேங்கடவன் : திருமங்கை மன்னரே! நீர் செய்த தீமைகளால் இன்னும் பல பிறவிகள் எடுக்க வேண்டியுள்ளதே. அப்படியிருக்க நீர் இப்பிறவியிலே பரமபதம் கேட்டால் எப்படிக் கிடைக்கும்?

திருவேங்கடவன் : திருவேங்கடமுடையானே ! அடியேன் செய்த தீமைகளால் பல பிறவிகள் எடுக்க வேண்டியது தகும். அதை உணர்ந்து தானே உம்மிடம் சரணாகதி பண்ணினேன். இப்போது உன்னைத் தரிசிக்கும் பேற்றினைப் பெற்றேன். உனது தரிசனத்தால் அடியேன் பாபங்கள் பகலவனைக் கண்ட பனிபோல் போகுமல்லவா? உம்மைச் சரணமடைந்த, காகாசூரன், சுக்ரீவன், விபீடணன் ஆகியோரைக் காத்து இரட்சிக்கவில்லையா? எனவே அடியேன் தீவினைகளைப் போக்கி இரட்சிக்கப்பட வேண்டியவனே! தயங்காமல் அருள்புரிவீராக !

**“நோற்றேன் பல்பிறவி நுன்னைக் காண்பதோ ராசையினால்**
**ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றனன் எம்பெருமான்!**
**கோற்றேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா!**
**ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை யாட்கொண்டருளே.”**

திருவேங்கடவன் : ஆழ்வாரே! நீர் வேண்டுவது நியாயமானதே. உமது பாபங்கள் மன்னிக்கக் கூடியதே. நீர் மிகவும் வருத்தப்பட்டு, துன்பங்களை அனுபவித்து வந்துள்ளீர். உமது ஆத்மத் தந்தை என்ற நிலையிலே உமது தீமைகளுக்கு தண்டனை அளிக்க வேண்டுமென்றுதான் என் உள்ளம் கருதுகின்றதே

தவிர, மன்னித்து அருள்புரிய வேண்டுமென்று கருதவில்லையே. தண்டனையை அனுபவித்து பின்னர் வாரும் அருள்புரிகின்றேன்.

திருமங்கையாழ்வார் : (தனக்குள்) எம்பெருமான் உள்ளத்தைக் கனிய வைக்க நமது ஆத்மத் தாயாகிய அலர்மேல் மங்கையாரால்தான் முடியும். அவர் புருஷகாரம் (பரிந்துரை) செய்வார். அவரைச் சென்று வேண்டுவோம்.

"அகலகில்லேன் என்று உறையும் அலர்மேல் மங்கையரே! இதுகாறும் யான் திருவேங்கட முடையானுடன் வேண்டிக்கொண்டதை நீர் கேட்கவில்லையா? அடியேன் எவ்வளவோ வேண்டியும் அவர் உள்ளம் கனியவில்லையே? நீராகிலும் பரிந்துரை செய்து இரட்சிக்கச் செய்யமாட்டீரா?"

அலர்மேல்மங்கை : வாரும் எனதருமை ஆழ்வாரே! நீர் படும் துயரங்களை யான் நன்கு அறிவேன். யான் என்ன செய்ய. நீர் என்னை மறந்தீர். உம் போன்றவர் மேல் கோபித்து தண்டித்து விடுவாரே என்று பயந்துதானே நான் ஒருகணமும் அவரைப் பிரிய இயலாமல் மார்பிலே வாழ்ந்து கொண்டிருக் கின்றேன். நான் உடன் இல்லாமையால்தான் மாரீசன், இராவணன் போன்றவர் மாண்டனர். நான் உடன் இருந்ததால்தானே காகாசுரன் காப்பாற்றப்பட்டான். கவலைப்படாதீர்! யான் பரிந்துரைத்து உமக்கு அருள்புரியச் செய்கின்றேன். சற்றேபொறும்.

(அலர்மேல் மங்கை திருவேங்கடவனை நோக்கி)

அலர்மேல்மங்கை : சுவாமி! தேவரீரை அடியேன் நமஸ்கரிக்கின்றேன். நீண்ட நேரமாக யாரிடம் வாதம் செய்து கொண்டிருந்தீர்?

திருவேங்கடவன் : அதுவா! நாம் அன்றொருநாள் கல்யாண கோலத்தில் சென்று திருமந்தர உபதேசம் செய்தோமே! அந்த

திருமங்கை ஆழ்வார்தான். அவர் செய்த தவறுகளை உணர்ந்து, வருந்தி, தரிசித்து, சரணாகதி செய்து தன்னை ரட்சிக்க வேண்டுமென்கிறார். நான் அவற்றுக்குரிய தண்டனையை அனுபவித்தால்தான் ரஷிப்பேன் என்றேன்.

அலர்மேல்மங்கை.: சுவாமி! தேவரீர் அடியவருடைய குற்றங்களையே குணமாகக் கொள்ளக் கூடியவர். கருணாகரன், ஆபத்பாந்தன் என்றெல்லாம் பேரைப் பெற்றவர். அதுவும் ஆழ்வார் தவறை உணர்ந்து, மனம் வருந்தி, துன்பப்பட்டு, உமது திருவேங்கடமலை வந்தடைந்து, உம்மை தரிசித்து, சரணாகதி பண்ணியுள்ளார். இப்படியிருக்க இன்னும் தாமதிக்கலாமோ? மானிடராகப் பிறந்தவர்களில் குற்றம் செய்யாதவர் யார்? அரிசிச் சோற்றிலே கல்லை ஆயலாம். ஆனால் மணல் சோற்றில் கல்லை ஆயலாமா? குற்றம் காண்பது மணல் சோற்றில் கல் ஆய்வது போலாகும். என் அடியார் அது செய்யார், செய்தாரேல் நன்று செய்வார் என்றது பொய்யோ!

அதுபோகட்டும். நீர் மட்டுமென்ன. ராமாவதாரத் திலே, பத்துமாத காலமாக என்னை அசோக வனத்திலிருந்து மீட்காமல் இருந்தீரே. அது குற்றமல்லவா? குற்றம் பார்க்கில் சுற்றமில்லை. எனவே நீர் ஆழ்வாரை இன்னும் துன்பப் படுத்தாமல் விரைவில் இரட்சிக்க வேண்டும்.

சுவாமி! உமது கருணையே கருணை! இராமா வதாரத்தில் அரக்கர்கள் உமக்கோ! எனக்கோ! எந்த தீங்கும் செய்யவில்லை. இருப்பினும் உமது அடியவர்களாகிய முனிவர்களுக்குத் தீங்கு செய்தமையால் அவர்களைக் கொன்றீர். உமது அடியவர்கட்காக நீர் நன்மைகள் செய்யத் தயங்க மாட்டீர் என்பதை நன்கு அறிவேன். விரைவில் நமது திருமங்கை ஆழ்வாருக்கு அருளுவீராக!

திருவேங்கடவன் : எனதருமைப் பத்தினியே! அலர்மேல் மங்கையே! நீயன்றோ கருணைக்கடல்! பசுவானது அன்று ஈன்ற கன்றின் மீதுள்ள அழுக்கையெல்லாம் தான் உண்டு கன்றைக் காப்பதுபோல், உன் ஆத்மக் குழந்தைகளாகிய பாகவதர்களின் குற்றங்களை யெல்லாம் நீ ஏற்று அவர்கள் அருள்பெற பரிந்துரைக்கும் பத்மாவதி! நீ பரிந்துரைத்த பின்னும் தாமதிப்பேனா! இப்போதே அருள்புரிகின்றேன்.

திருவேங்கடவன் : ஆழ்வாரே! வாரும்! நீர் அருள் பெறுவதற்கு எவ்வகையிலும் தகுதி பெற்றவரே! இருப்பினும் நீர் உமது ஆத்மத் தாயாகிய அலர்மேல் மங்கையை மறந்து விட்டதால் தாமதித்தோம். இனி உமக்கு அருள் புரியத் தடையில்லை! இன்று இத்திருவேங்கட மலைக்கு எழுந்தருளி எம்மை மங்களா சாசனம் (பாடியது) செய்ததைப் போல, நான் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்களை யெல்லாம் தரிசித்து மங்களாசாசனம் செய்து வாரும். விரைவில் உமக்கு பரமபதம் நல்குகின்றேன். (அர்ச்சகர் மூலமாக தீர்த்தம், திருத்துழாய், சடாரி பிரசாதம் தந்தருளினார்)

**முடிவுரை:**

இந்த உரையாடல் மூலம் திருமங்கையாழ்வாரும் திருவேங்கடவனும், அலர்மேல்மங்கையும் நாம் இவ்வுலகில் கடைபிடிக்க வேண்டிய கீழ்க்காணும் தருமங்களை நமக்கு எடுத்துரைத்தனர். திருமங்கையாழ்வார் மக்கள் செய்யும் தவறுகளையெல்லாம் தாம் செய்ததாகக் கூறி திருவேங்கடமுடையவனிடம் சரணடைந்து மன்னித்து அருளும்படி வேண்டுகின்றார்.

1. திருவேங்கடமலையும் – திருவேங்கடவனும் – அலர்மேல் மங்கையும் நமது பாபங்களைப் போக்கி அருள்புரிவர்.
2. அடியவர்கள் குற்றங்களை குணமாகக் கொள்வான் இறைவன்.
3. நாம் செய்யும் நல்வினை – தீவினைப் பயன்களை அனுபவித்தே தீரவேண்டும்.

4. நாம் குற்றங்களை உணர்ந்து, அவற்றுக்காக வருந்தி, மனம் திருந்தி சரணாகதி செய்தால் இறைவன் நமது பாபங்களைப் போக்கி அருள்புரிவான்.

5. இறைவன் நமது ஆத்மாவிற்குத் தந்தையாகவும், பிராட்டி நமது ஆத்மாவிற்குத் தாயாகவும் உள்ளனர்.

6. பகவானுக்கும், அடியவர்களுக்கும் (பாகவதர்களுக்கும்) . நாம் தவறாது தொண்டு செய்ய வேண்டும்.

7. நேர்மையாக, உழைத்துத் தேடும் பொருளே இறைவன் தொண்டிற்கு உரியது.

எனவே நாம் அறநெறி தவறாது, இறைவனுக்குத் தொண்டு செய்து இறைவன் திருநாடு சேர்வோமாக!



திருமங்கையாழ்வார்

# பெரிய நம்பியும் – மாறனேரி நம்பியும்

திருமால் நெறிபரப்பத் தோன்றிய ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களுக்கு உரை எழுதியும், திருமால் நெறியைப் பரப்பியும் வந்த ஆசாரியர்கள் பலர். அவர்களுள் ஆளவந்தாருக்குச் சீடராகவும், இராமாநுசருக்குக் குருவாகவும் இருந்து, திருமாலுக்கும், திருமாலடியார்களுக்கும், திருமால் நெறி வளரவும் தொண்டாற்றியவர் **"பெரிய நம்பிகள்"** என்ற குரு ஆவார்.

திருக்குலத்தார் என்று இராமாநுசரால் சிறப்புப் பெயர் சூட்டப்பட்ட அரிஜன வகுப்பைச் சேர்ந்த உத்தமமான திருமாலடியவர் மாறனேரி நம்பிகள். இவர் பெரிய நம்பிகளையும், அவரது குரு ஆளவந்தாரையும் குருவாகப் பெற்றவர். ஆளவந்தாரின் வைணவச் சொற்பொழிவுகளைத் தவறாமல் கேட்டு வந்தவர். தீண்டாதார் வகுப்பில் தோன்றியதால் கூட்டத்தின் கடைசியில் இருந்து கேட்டாலும், மிகுந்த கவனத்துடனும், ஊக்கத்துடனும் கேட்பார். மறுநாள், முன்னாள் சொற்பொழிவு நிறுத்தப்பட்ட இடத்தை ஆளவந்தார் கேட்கும் பொதெல்லாம் இவர் தான் அதைக் கூறுவார். இவரது ஆர்வத்தையும், ஆழ்ந்த பக்தியையும் கவனித்து உணர்ந்த ஆளவந்தார், இவர் வரும் வரை காத்திருந்து வந்த பின்பே சொற்பொழிவைத் தொடங்குவார். அத்துடன், இவருக்குக் கேட்கும்படியாக உரத்த குரலிலும் பேசுவார். இதைக்கண்ட அந்தணப் பெருமக்கள் பொறாமை கொள்வதோடு மட்டுமின்றி அவர் மீது வெறுப்பையும் காட்டினர். தம் குருவான ஆளவந்தார் உடலில் தோன்றிய **"இராஜப்பிளவை"** என்ற கட்டியை, திருமாலிடம் வேண்டி தான் பெற்றுக் கொண்டார். அத்தகைய சிறந்த குருபக்தி உடையவர்.

ஆளவந்தார், திருமால் திருநாடு அடைந்த பின் பெரிய நம்பிகளையே குருவாகப் பற்றி வாழ்ந்து வந்தார். இவருக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லாமையால் தோப்பொன்றில் ஓலையால் கட்டப்பட்ட குடிசையில் தங்கி வந்தார். குரு ஆளவந்தாரிடம் இருந்து பெற்ற இராஜப்பிளவை கட்டியால் படுத்த படுக்கையில் இருந்தார். இதையறிந்த பெரிய நம்பிகள் மாறனேரி நம்பியின் குடிசைக்குச் சென்றார்.

பெரியநம்பிகள் : மாறனேரி நம்பியே! உமது உடம்பிற்கு என்ன ஆயிற்று? ஏன் படுத்த படுக்கையாய் கிடக்கின்றீர்? உணவு ஏதேனும் உண்டீரா?

மாறனேரி நம்பி: சுவாமி! அடியேன் தங்கள் திருவடிகளை வணங்குகின்றேன். எழுந்திருந்து வணங்க முடியாமல் கிடக்கின்றேன். அடியேனை மன்னித்து விடுங்கள். இராஜ பிளவைக் கட்டியால் வலி மிகுந்துள்ளது. எழுந்திருக்கவும் சக்தியற்றவனானேன். ஆனாலும் நமது குரு ஆளவந்தாரின் திருமேனியில் தோன்றிய இக்கட்டியை அடியேன் வேண்டிப் பெற்று, அவரை இத்துன்பத்திலிருந்து நீக்கி, நலமே திருநாடு அடைய இச்சிறு உதவியைச் செய்த பேற்றைப் பெற்றதை எண்ணி பெரிதும் மகிழ்கின்றேன். என்றாகிலும் அழியக்கூடிய இந்த உடலுக்கு ஏற்ற துன்பத்தை ஒரு பொருட்டாகக் கருதவில்லை.

(பெரிய நம்பிகள் மாறனேரி நம்பிகளைத் தூக்கி உட்கார வைத்து, அவர் உடலில் தோன்றியிருந்த கட்டியிலிருந்து சீழ், இரத்தம் முதலியவற்றை அகற்றினார். தான் கொண்டு வந்திருந்த பச்சிலை மருந்தை வைத்துக் கட்டினார். தண்ணீர் கொண்டு அவர் முகம், கைகளை அலம்பினார். கொண்டு வந்திருந்த உணவை ஊட்டினார்).

மாறனேரி நம்பிகள்: சுவாமி தீண்டத்தகாத அடியேனைத் தீண்டி, தூக்கி உட்கார வைத்து, சுத்தம் செய்து, மருந்து கட்டி, உணவூட்டிய உங்கள் செயல் அனைவராலும் விரும்பத்தகாதது. சிஷ்யனாகிய அடியேன் தேவரீருக்குத் தொண்டு செய்ய வேண்டும். இதனையே நமது குரு கூறியுள்ளார். அப்படியிருக்க நீரே அடியேனுக்கு உதவி செய்வது சரியல்லவே. இதனால் அடியேனுக்குப் பாபமே வரும். தயவு செய்து நீர் இனி எனக்கு இத்தகையப் பணிகளைச் செய்ய வேண்டாம் சுவாமி.

பெரிய நம்பி: நம்பியே! சிஷ்யனுக்கு ஆபத்துக் காலத்தில் உதவி செய்வது ஆசாரியனாகிய எனது கடமையல்லவா? பிறர் நோவு கண்டு, ஐயோ! என்று இரக்கம் கொண்டு, அவருக்கு உதவி செய்பவனன்றோ உண்மையான வைணவன். அதுதானே ஒரு வைணவனுக்கு இலக்கணம். நான் உமக்கு குருவாக இருந்து கொண்டு, குருவின் கடமையையும்,

வைணவனின் இலக்கணத்தையும் மீறலாமா? மீறினால் "வேலியே பயிரை மேயும்" தன்மை யாகுமே. அது மட்டுமா "சிஷ்யன் ஆரயிரைப் பேணுபவன் ஆசாரியன்" என்றல்லவா குருவின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

மாறனேரி நம்பிகள்: சுவாமி! தேவரீரை மறுத்துப் பேசுவதாகக் கருத வேண்டாம். அடியேன் சிறு துரும்பு எந்தத் தகுதியும் இல்லாதவன். தங்கள் உதவியைப் பெறத் தகுதியற்றவன். அது மட்டுமா! தீண்டத் தகாதவன். எனவே தான் வேண்டாமென வேண்டினேன்.

பெரியநம்பிகள்: நம்பியே! தீண்டாமை என்பதும் தீண்டத்தகாதவர் என்பதும் குணத்தைப் பொருத்ததேயன்றி உடலைப் பொருத்ததல்ல. தீய பண்புகளைப் பின் பற்றாமையே தீண்டாமை ஆகும். தீய பண்புகளைக் கொண்டவர்களே தீண்டத்தகாதவர். அவர்களே தீண்டாதார். அவர்களே தாழ்ந்த குலம் ஆவார். எனவே, நல்ல பண்புகளைக் கொண்ட உம் போன்றவர் எந்தவிதமான தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் தீண்டத் தக்கவரே ஆவர். எனவே, நான் உமக்குத் தொண்டு செய்வதில் எந்த விதத் தவறும் இல்லை. எனவே, நீர் வருந்தாதீர். ஒரு உத்தமமான திருமாலடியாரான எமது சிஷ்யருக்கு இத்தகைய உதவி செய்து காப்பதே எமது கடமையாகும்.

மாறனேரி நம்பிகள்: சுவாமி! தேவரீர் வாக்கிற்கு அடியேன் மறுத்துப் பேசலாமா? பேசினால் "தீட்டிய மரத்தில் கூறு பாய்ச்சுவது" போலாகுமே. அடியேன் தங்களது தொண்டைப் பெற்று புண்ணியனானேன். இருப்பினும் வைணவர்களும், அந்தணர்களும் அறிந்தால் இதையெல்லாம் ஏற்றுக் கொள்ளாமல் உம்மைப் பழிப்பதோடு மட்டுமின்றி, உமக்குத் தீமைகளும் செய்வார்களே. அடியேனால் உமக்குப் பழியும், தீங்கும் நேர்ந்தால் அப்பாவம் என்னை யல்லவோ சேரும்.

பெரியநம்பி: நம்பியே! நீர் சொல்வது முற்றிலும் உண்மையே. என்றாலும் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன், தன்னை யார் பழித்தாலும் அதைப் பொருட்படுத்த மாட்டான். ஆனால் தன் அடியார்களைப் பழித்தால் சீறுவான். ஒன்றுக்குப் பத்தாகத் தண்டிப் பான். சீதாதேவி தன்னையும் காட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டினார். காட்டில் கொடிய விலங்கு களும், அரக்கர்களும் இருப்பர். உம்மை அவர்களிட மிருந்து காப்பது கடினமாகும் என்றார் இராம பிரான். ஒரு மனைவியைக் காக்க முடியாத கணவன் ஓர் ஆண் மகனா? என்னை என் தந்தை பெண்ணுக்குப் பெண்ணைத் தந்து விட்டாரோ? என்றாள். இராமபிரான் அதைப் பொறுத்துக் கொண்டார். காட்டில் இராமன் மாரீசனாகிய மானைத் தொடர்ந்து சென்று அம்பு எய்தான். அம்மான் இறக்கும் போது இராமன் குரலில் இலக்மணா! சீதா! என்று கத்தினான். இதைக் கேட்ட சீதை உடனே இராமனைக் காக்க இலக்குவனைப் போகச் சொன்னாள். இலக்குவன் இராமனுக்கு எந்த ஆபத்தும் வராது. அது அரக்க மாயைக் குரல் என்று கூறியும் சீதை எடுத்துக் கொள்ளவில்லை. இராமன் இறந்தால் நீ என்னை அடையலாம் என்று நினைக்கிறாயா? என்று கடுஞ்சொல் கூறி, உத்தமமான திருமாலடியாரைப் பழித்தாள். இலக்குவன் பிரிந்த உடனே இராவண னால் தூக்கிச் செல்லப்பட்டாள். எனவே, திருமாலடியார்களைப் பழித்தால் அந்தக்கணமே துன்பத்தை அடைவர். இதனையே தொண்டரடிப் பொடியாழ்வார்.

**“சாதி அந்தணர்களேனும் நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோர் அலவில் அங்கே அவர்கள்தாம் புலையர் போலும்”** என்றார்.
அதுமட்டுமன்றி

**“இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாயின் தொழுமினீர், கொடுமின், கொண்மீன், நின்னொடும் ஒக்க வழிபட அருளினாய் போன்ம்.”** என்று திருமாலையில் பாடியுள்ளார்.

ஆழ்வார் வாக்கிற்கு எதிர் வாக்குண்டோ? எனவே கலங்காதீர்! வருந்தாதீர்! அமைதி கொள்ளும். (இப்படிப் பல காலம் சென்றது. மாறனேரி நம்பிகளின் இறுதிக் காலம் நெருங்கியது. உயிர் பிரியும் நேரம் பெரிய நம்பிகள் உடனிருந்து உதவினார்).

மாறனேரி நம்பிகள்: சுவாமி! அடியேனுக்கு உயிர் பிரியும் நேரம் வந்து விட்டது. அடியேன் உயிர் பிரிந்தால் யாராகிலும் ஒரு திருமாலடியாரைக் கொண்டு இறுதிச் சடங்கு களைச் செய்ய ஏற்பாடு செய்யுங்கள். உங்கள் திருவடிகளை வணங்குகின்றேன். அருளிச் செயல் பாசுரங்களைப் பாடுங்கள். அவற்றைக் கேட்டுக் கொண்டே என் ஆவி பிரியட்டும்.

பெரிய நம்பி: நம்பியே! உமது விருப்பப்படியே செய்கிறேன் கேளும். (அருளிச் செயல் பாசுரங்களைக் கேட்டுக் கொண்டே இருந்தார் மாறனேரி நம்பிகள்.. சற்று நேரத்திற்கெல்லாம் வானிலிருந்து ஒளி தோன்றியது. மாறனேரி நம்பியின் ஆத்மா பிரிந்து, திருநாடு அடைந்தது. இறுதிக் கடன் செய்வது பற்றி பெரிய நம்பிகள் ஆலோசித்தார். தானே ஈமக்கிரியைகள் செய்ய முடிவு செய்து, செய்து முடித்து, தனது இல்லத்திற்கும் திரும்பினார். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அந்தணர்கள் பெரிய நம்பிகள் மீது கோபமும், வெறுப்பும் கொண்டனர். அவர் வரும்போது தடுத்து நிறுத்தினர்).

அந்தணர்கள்: பெரிய நம்பிகளே! நீர் அந்தணராகவும், ஆசாரியராகவும் இருந்து கொண்டு நீரே ஒரு தீண்டத்தகாதவருக்கு இறுதிக் கடன்களைச் செய்தீரே! இது நமது குல வழக்கத்துக்குப் புறம்பானதும், இழுக்கும் ஆகின்றதே. நீர் இப்படிச் செய்யலாமா? இனி உம்மை எங்கள் குலத்திலிருந்து நீக்கி "சாதிப்புறம்பு" செய்கின்றோம்.

பெரியநம்பிகள்: அந்தணர்களே! எல்லாம் அறிந்த நீங்களா இப்படிப் பேசுகின்றீர். சிஷ்யருக்குச் செய்ய வேண்டிய கடமையயன்றோ நான் செய்தேன். இராமபிரான் பறவை அரசனான ஜடாயுவுக்கு இறுதிக்

கடன்களைச் செய்த செயல் தவறாயின் நான் மாறனேரி நம்பிக்கு இறுதிக்கடன் செய்ததும் தவறாகும். எம்பெருமான் இராமபிரான் காட்டிய வழிச் செய்வது எப்படித் தவறு என்று நீங்கள் கூற முடியும். எனவே, மன அமைதி பெறுங்கள்.

அந்தணர்கள்: உங்கள் எடுத்துக்காட்டும், உமது செயலும் ஏற்காது. இன்று முதல் உங்களை நாங்கள் சாதிப் புறம்பு செய்கின்றோம். (இதைக் கேட்ட பெரிய நம்பிகள் அவர்கள் செயலுக்கு வருந்தினாலும், தன் செயல் சரியே என்று மன அமைதி பெற்று வீடு திரும்பினார். இதைக் கேட்ட அவரது மகள் அத்துழாயும் மனம் வருந்தினாள். சில நாள் சென்று, திருவரங்கன் திருத்தேரில் வீதி வலம் வந்து கொண்டிருந்தார். திருத்தேர் பெரிய நம்பிகள் வீட்டை அடைந்தது. அத்துழாய் திருத்தேரின் முன் சென்று, திருவரங்கனை நோக்கினாள். கண்ணீர் விட்டு அழுதாள். திருவரங்கனை நோக்கி "திருவரங்கரே! என் தந்தை மாறனேரி நம்பிக்கு இறுதிக்கடன் செய்தது சரியானால் இத்தேர் நகராமல் நிற்கட்டும். அதை இந்தப் பிராமணர்கள் உணர்ந்து சாதிப்புறம்பை நீக்கிய பின்னரே இத்தேர் நகர வேண்டும். "இராமபிரானான நீர் செய்த செயலைத் தானே என் தந்தையும் செய்தார்" என்று கூறி வீட்டிற்குச் சென்று விட்டாள். (தேர் ஓடாமல் நின்று விட்டது. அந்தணர்கள் செய்வதறியாது திகைத்தனர். "தெய்வம் மானுஷ ரூபானாம்" என்கின்றபடி திருவரங்கன் மூத்த அர்ச்சகர் மூலமாக அந்தணர்களுக்கு திருமால் நெறியை விளக்கி, பெரிய நம்பிகளை சாதிப் புறம்பை நீக்கும்படிச் செய்தார். அந்தணர்கள் பெரிய நம்பிகளிடம் சென்றனர்.)

அந்தணர்கள்: நம்பிகளே! நாங்கள் அறியாமையால் செய்த தவறை மன்னித்து அருள் புரியவேண்டும். இனி இப்படி திருமாலடியார்களுக்குத் தீங்கு செய்ய மாட்டோம். வந்து திருத்தேர் வீதிவலத்தில் கலந்து கொண்டு, தேரை நகர விடுங்கள்.

பெரியநம்பிகள் : அந்தணர்களே! பிறப்பால் எந்த வேறுபாடும் இல்லை. அவர்கள் செய்கின்ற தொழிலால்தான் வேறுபாடு. இங்கு

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்ற வள்ளுவர் குறள் நோக்கத்தக்கது. திருமாலடியார்களிடம் இனி எந்த வேறுபாடும் காட்டாதீர்! அது பெரும் பாவம். அது மட்டுமல்ல திருமாலும் சீறிப் பொக்கியெழுந்து தண்டிப்பான். வாருங்கள் போகலாம். (திருத்தேர் முன் நிற்கின்றார் பெரிய நம்பிகளும் அவர் மகள் அத்துழாயும்) திருவரங்கனே! என்னே உனது கருணை! திருமாலடியார்களின் பெருமையை நன்கு விளக்கினீர். இந்த அந்தணர்கள் மனம் திருந்தினர். இனி நீர் உம் திருத்தேரைப் புறப்படச் செய்யும்.

(பெரிய நம்பிகளின் வேண்டுகோளையும், அத்துழாயின் வேண்டுகோளையும் ஏற்று திருவரங்கன் திருத்தேர் நகர்ந்தது. திருமாலடியார்கள் ஆரவாரம் செய்தனர். பெரிய நம்பிகளை வாழ்த்தினர்).

பெரிய நம்பிகளும் – மாறனேரி நம்பிகளும் என்ற இக்கட்டுரையால் கீழ்காணும் நீதிகளை நாம் உணர்கின்றோம்.

1. அடியார்களிடத்தே திருமால் எந்தவித சாதி, மத வேறுபாடுகளைக் காண்பதில்லை. நாமும் காணக்கூடாது. கண்டால் பெரும் பாவம்.

2. திருமால் தன்னைப் பழித்தாலும் பொறுத்துக் கொள்வான். திருமாலடியார்களைப் பழித்தால் பொறுத்துக் கொள்ள மாட்டான். பழிப்பவர்கள் மீது, பொங்கி எழுந்து சீறி தண்டிப்பான்.

3. உயர்ந்த சாதியில் பிறந்தவர்கள் திருமாலடியார்களைப் பழித்தால் அப்போதே அவர்கள் புலையர்களாகக் கருதப்படுவார்கள்.

4. உத்தமமான திருமாலடியார்கள் கீழ்க்குலத்தில் பிறந்திருந்தாலும் போற்றப்பட வேண்டும்.



## ஒப்பில்லாதவை

| | | | |
|---|---|---|---|
| ஒப்பில்லாத நாட்கள் | பொய்கையார் உதித்த | ஐப்பசி | திருவோணம் |
| | பூதத்தாழ்வார் உதித்த | ஐப்பசி | அவிட்டம் |
| | பேயாழ்வார் உதித்த | ஐப்பசி | சதயம் |
| | நம்மாழ்வார் உதித்த | வைகாசி | விசாகம் |
| | ஆண்டாள் உதித்த | ஆடி | பூரம் |
| நன்குடனே கொண்டாடும் நாள் | திருப்பாணாழ்வார் உதித்த | கார்த்திகை | ரோகிணி |
| நான்மறையோர் கொண்டாடும் நாள் | தொண்டரடிப்பொடி யாழ்வார் உதித்த | மார்கழி | கேட்டை |
| நற்றவர்கள் கொண்டாடும் நாள் | திருமழிசையாழ்வார் உதித்த | தை | மகம் |
| | குலசேகராழ்வார் உதித்த | மாசி | புனர்பூசம் |
| நாற்றிசையும் கொண்டாடும் நாள் | இராமானுஜர் உதித்த | சித்திரை | திருவாதிரை |

| | | |
|---|---|---|
| ஒப்பில்லாதவர் | = | சடகோபரும் – பெரியாழ்வாரும் |
| ஒப்பில்லாத மொழி | = | திருவாய்மொழி |
| ஒப்பில்லாத ஊர் | = | திருக்குருகூர் |
| ஒப்பில்லாத கலை | = | திருப்பல்லாண்டு |

# இராமாநுஜரும் - திருக்கோட்டியூர் நம்பியும்

திருக்கச்சி நம்பிகளின் மூலம் காஞ்சி பேரருளாளன் அருளிய கட்டளைப்படி, இராமாநுஜர் பெரிய நம்பிகளை ஆசாரியராகக் கொண்டு பஞ்ச சம்ஸ்காரங்களைப் பெற்றார். என்றாலும், திருமந்திரம் சரமஸ்லோகம் ஆகியவற்றின் பொருளை அறிய திருக்கோட்டியூர் நம்பிகளிடம் செல்லும்படி, பெரிய நம்பிகள் ஆணையிட்டார்.

குருவின் ஆணையை சிரமேற்கொண்டு திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூர் சென்றார் இராமாநுஜர். திருக்கோட்டியூர் நம்பிகளின் திருமாளிகை இருக்குமிடம் கேட்டறிந்து சென்று நம்பிகளைக் கண்டு தெண்டனிட்டு வணங்கி நின்றார்.

இராமாநுஜர் 18 முறை திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூர் சென்று நம்பிகளிடம் இரகசியப் பொருள் அறிந்ததைக் காண்போம்.

இராமாநுஜர்: சுவாமி! அடியேன் இராமாநுஜன் குருவாகிய பெரிய நம்பிகளின் ஆணையைச் சிரமேற்கொண்டு, தேவரீரிடமிருந்து, இரகசியப் பொருள்களை அறிய பேராவல் கொண்டு வந்துள்ளேன். தேவரீர் திருவுள்ளம் பற்றி அடியேனுக்கு இரகசியப் பொருள்களை வழங்க வேண்டும்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: இராமாநுஜரா? பெரிய நம்பிகளின் சீடரா? ஆளவந்தாரின் ஆவல்களைப் பூர்த்தி செய்வதாக உறுதிபூண்டவரா? என்றாலும் இரகசியப் பொருள் களை அறிவதற்குரிய தகுதியும், ஆவலும் உமக்குள்ளதா என்பதை அறிந்துதான் முடிவு செய்ய வேண்டும். போய் வாரும்.

(இராமாநுஜர் மனம் வருந்தி திருவரங்கம் மீண்டார். இராமாநுஜர் திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூர் நடந்து சென்று வேண்டியபோதும் நம்பிகள் திருவுள்ளம் செய்து இரகசியப் பொருள்களை வழங்காமல் காலம் தாழ்த்தினார். மனம் வருந்திய இராமானுஜர் செய்வதறியாது உள்ளம் நொந்தார். இதையுணர்ந்தார் திருவரங்கன். திருக்கோட்டியூர் நம்பிகள் திருவரங்கம் வந்து, திருவரங்கனைச் சேவிக்கும்போது, இராமாநுஜருக்கு

இரகசியப் பொருள்களை வழங்கும்படி அர்ச்சகர் மூலமாக திருவாய் மலர்ந்தார்.)

திருவரங்கன் : (அர்ச்சகர் மூலமாக) நம்பிகளே! நம் இராமாநுஜனுக்கு இரகசியப் பொருள்களை வழங்க தாமதித்து வருவதை உணர்ந்தேன். ஏன் தயக்கம்.

திருக்கோட்டியூர் நம்பிகள் : சுவாமி இரகசியப் பொருள்களை, பக்குவமறிந்து, தகுதியுடையோருக்கு மட்டுமே அருள வேண்டும் என்பதன்றோ வழிவழியாக பின்பற்றப்படுகிறது. இராமாநுஜருக்கு தகுதியும், ஆவலும் உள்ளதா என்பதை சோதித்தறியவே தாமதிக்கின்றேன்.

திருவரங்கன் : நம்பிகளே! நம் இராமாநுஜனிடம் சிஷ்ய இலக்கணம் அனைத்தும் முழுமையாக உள்ளன. அதற்கு மேல் ஆசாரியர் பெரிய நம்பிகளின் விருப்பமும் உள்ளது. அறிய வேண்டுமென்ற ஆவலும் மிகுந்துள்ளது. எனவே "சகலபூர்த்தியுமுள்ள உடையவருக்குச் சொல்லக் குறையில்லை"

திருக்கோட்டியூர் நம்பிகள் : உடையவரே! திருவரங்கன் கட்டளையை ஏற்றோம். உம் தகுதி பற்றிய திருவரங்கன் திருவாக்கு தவிர வேறு வேண்டுமோ? வேண்டாம். திருக்கோட்டியூர் வாரும்.

இராமாநுஜர் : அடியேன் பேறுபெற்றவனானேன். தேவரீர் ஆணையை சிரமேற்கொண்டு திருக்கோட்டியூர் வருகின்றேன்.

(நம்பிகள் திருக்கோட்டியூர் திரும்பிய சில நாட்களில் இராமாநுஜர் திருக்கோட்டியூர் சென்று, நம்பிகளை வணங்கி நின்றார்)

சுவாமி அடியேன் உடையவன் வந்துள்ளேன். தேவரீர் திருவுள்ளம் பற்றி இரகசியப் பொருள்களை வழங்கவும்.

திருக்கோட்டியூர் நம்பிகள் : இராமாநுஜரே! இன்றைக்குப் போய் வாரும். பின்னர் பார்ப்போம்.

(இப்படி ராமாநுஜர் 16 முறை சென்று சேவித்து நின்ற போதும் திருக்கோட்டியூர் நம்பிகள் திருவுள்ளம் பற்றாமை கண்டு இராமாநுஜர் பெருங்கவலையுடன், கண்களில் கண்ணீர் மல்க திருவரங்கம் மீண்டார்.

ஒரு நாள் திருக்கோட்டியூர் நம்பிகளின் சீடர் ஒருவர் திருவரங்கம் வந்து. திருவரங்கனை வணங்கி, மீண்டு வரும்போது உடையவரை வணங்கி நின்றார்.)

உடையவர்! வாரும் திருமாலடியவரே! இப்படி அமருங்கள். இதோ தீர்த்தம், தாகம் தீர்த்துக் கொள்ளுங்கள். நீர் எங்கிருந்து வந்துள்ளீர்.?

திருமாலடியார்: சுவாமி! அடியேன் திருக்கோட்டியூர் நம்பிகளின் சிஷ்யன். திருவரங்கனை வணங்க வந்தேன். வணங்கி திரும்பும்போது தேவரீரைக் கண்டு வணங்கவே வந்தேன்.

உடையவர்: திருமாலடியவரே! நன்று. நம்பிகள் நலமாக உள்ளாரா? திருக்கோட்டியூர் எம்பெருமான் திருவாராதனம் குறைவற சிறப்பாக நடந்து வருகின்றதா?

திருமாலடியார்: சுவாமி நம்பிகள் நலமே. எம்பெருமான் திருவாராதனையும் குறைவற நடந்து வருகின்றது.

உடையவர்: திருமாலடியவரே! நம்பிகளிடம் இரகசியப் பொருள்களை அறிய வேண்டுமென்று 17 முறை திருக்கோட்டியூர் வந்து, நம்பிகளை வணங்கி நின்றேன். நம்பிகள் திருவரங்கம் வந்து, திருவரங்கனை வணங்கி நின்றபோது, அடியேனுக்கு இரகசியப் பொருள்களை வழங்கும்படி திருவரங்கன் அர்ச்சகர் மூலமாக திருவாய் மலர்ந்து அருளினார். எனினும் அடியேனுக்குத் தகுதியில்லையென்று நம்பிகள் அருளவில்லை. அடியேனால் இத் துக்கத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

"பூந்துழாய் முடியார்க்குத் தகவல்ல
பொன்னாழி கையார்க்குத் தகவல்ல"

இதை உமது ஆசாரியரிடம் விண்ணப்பிக்கவும்.

திருமாலடியார்: உடையவரே! கலங்க வேண்டாம். நம்பிகள் உமது தகவு அறியவே காலம் தாழ்த்துகின்றார் என்று கருதுகின்றேன். அடியேன் தேவரீருடைய ஆழ்ந்த

வருத்தத்தையும், பெருத்த ஆவலையும் நம்பிகளிடம் விண்ணப்பிக்கின்றேன். சென்று வருகின்றேன்.

(திருமாலடியார் இராமாநுஜர் கூறிய வார்த்தைகளையும், அவரது ஆழ்ந்த வருத்தத்தையும், பெருத்த ஆவலையும் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் விண்ணப்பிக்க, இதைக் கேட்ட நம்பிகள் உடையவரின் ஆவலைப் பூர்த்தி செய்ய திருவுள்ளம் கொண்டார். திருமாலடியவரைத் திருவரங்கம் அனுப்பி, உடையவரிடம் தண்டும் பவித்திரமுமாக அவர் ஒருவர் மட்டுமே வரும்படி கூறச் செய்தார். இச்சேதி கேட்ட உடையவர் வாடிய பயிர் மழையைக் கண்டு மகிழ்ந்ததைப் போல் மனம் மகிழ்ந்து, திருக்கோட்டியூர் விரைந்தார். ஆனால் உடன் முதலியாண்டானையும், கூரத்தாழ்வானையும் கூட்டிச் சென்று, நம்பிகளைக் கண்டு வணங்கி நின்றார்).

திருக்கோட்டியூர் நம்பிகள்: (அப்போதும் கண்டிப்பான குரலில் உடையவரைப் பார்த்து) உடையவரே! உம்மைத் தண்டும் பவித்திரமும் கொண்டு தனியாகத்தானே வரச் சொன்னோம். அப்படியிருக்க, இவர்களைக் கூட்டிக்கொண்டு வருவானேன்.

இராமாநுஜர்: சுவாமி! தேவரீர் தண்டும், பவித்திரமுமாக வரச் சொன்னீர். இவர்கள் தாம் அடியேனுக்கு தண்டும் பவித்திரமும்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: இவர்களுள் தண்டு யார்? பவித்திரம் யார்?

உடையவர்: இவர்களுள், இதோ நிற்கின்றாரே முதலியாண்டான் இவர்தாம் தண்டு. அதோ நிற்கின்றாரே கூரத்தாழ்வான் அவர்தாம் பவித்திரம்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: அப்படியா? இந்த இரகசியப் பொருளை இவர்கள் தகுதியை அறிந்து இவர்களைத் தவிர மற்ற ஒருவருக்கும் சொல்ல மாட்டேன் என்று எம் திருவடியைத் தொட்டு சூளுரைக்கவும், உரைத்த பின்னரே உமக்கு வழங்குவோம்.

உடையவர்! சுவாமி அப்படியே! தேவரீர் திருவடிகளைத் தொண்டு சூளுரைக்கின்றேன். இந்த இரகசியப்

பொருளை இவ்விருவர்க்கன்றி வேறு எவருக்கும் உரைக்க மாட்டேன்.

(திருக்கோட்டியூர் நம்பிகள் உடையவரைத் தனியே அழைத்துச் சென்று இரகசியப் பொருளை வழங்கினார். ஒருவாறு இரகசியப் பொருளை அறிந்து உடையவர் மகிழ்ந்தார். அதே நேரம் இத்தகைய இரகசியப் பொருளை இத்துணை கண்டிப்புகளுடன் எவர் உணர்ந்து அறிந்து உய்யப் போகின்றார். எவர் தாம் எளிதில் உரைக்கப் போகின்றார் என்றும், மேற்கொண்டு என்ன செய்வது என்றும் இரவெல்லாம் யோசித்தார். குருவின் ஆணையை மீறினால் தமக்கு நரகம் கிடைக்குமென்பதையும், தாம் ஒருவர் நரகம் புகுந்தாலும், இவ்வூரில் உள்ள ஆசையுடைய திருமாலடியார்கள் அனைவருக்கும் வழங்குவதென உறுதிபூண்டு, மறுநாள் அவ்வூர் எம்பெருமான் தெற்காழ்வார் கோபுரத்தில் நின்று, அனைத்து திருமாலடியார்களுக்கும் திருமந்திரப் பொருளை வழங்கினார். இதையறிந்த குரு திருக்கோட்டியூர் நம்பிகள் வெகுண்டு, உடையவரை உடனே அழைத்து வரும்படி ஒரு திருமாலடியவரை அனுப்பினார். சிறிது நேரத்திற்கெல்லாம் உடையவர் நம்பிகள் திருமாளிகை வந்து, நம்பிகளை வணங்கி நின்றார்.)

திருக்கோட்டியூர் நம்பிகள்: உடையவரே! என்ன காரியம் செய்தீர்! இந்த பரம ரகசியப் பொருளை வேறொருவருக்கும் சொல்லக்கூடாது என்று உம்மிடம் சூளுரை பெற்று, உமக்குச் சொல்லியிருந்தும், நீர் அதை மறுத்து, அநேக வைஷ்ணவர்களுக்குச் சொன்னீர் என்று கேள்விப்பட்டேன். உண்மையா?

உடையவர்: ஆம் சுவாமி! தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டே சொன்னோம்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: சூளுரையையும், ஆசாரியரின் கட்டளையையும் மீறியதற்குப் பலன் என்னவென்று தெரியுமோ?

உடையவர்: சுவாமி! அதற்காக அடியேனுக்கு நரகம் கிட்டும் என்பது தெரியும்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: அதை அறிந்திருந்தும் சொன்னது ஏன்?

உடையவர்: சுவாமி! அடியேன் ஒருவனன்றோ நரகம் புகுவது. தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு

சொன்னதாலே இந்த வைஷ்ணவர்கள் எல்லாம் தேவரீர் திருவடி சம்பந்தத்தாலே உய்வார்கள் என்று கருதியே சொன்னேன். பிறர் நோவு கண்டு ஐயோ என்று இரங்குபவன் தான் வைஷ்ணவன் என்பது தேவரீர் அறியாததல்லவே.

திருக்கோட்டியூர் நம்பிகள்: உடையவரே! உமக்குள்ள இக்கருணையுள்ளம் எமக்கு உண்டாகவில்லையே. சம்சாரிகள் நோவு கண்டு அவர்களை கரைமரமேற்றி, திருநாடு நல்கவன்றோ எம்பெருமான் திருமந்திரத்தை வெளியிட்டருளினான். எனவே நீர் செய்தது முற்றிலும் சரியே! வாரீர் உடையவரே! (அணைத்து ஆனந்தமடைந்தார்) எம்பெருமானாகிய அவரே நீர். இன்று முதல் நீர் எம்பெருமான் ஆனீர். எனவே உமக்கு (எம்பெருமான் +ஆனார்) எம்பெருமானார் என்று திருநாமம் சூட்டுகின்றேன். இன்று வரை வைஷ்ணவ நெறி பரம வைதீக நெறியாக இருந்து வந்தது. இன்று முதல் எம்பெருமானார் தரிசனம் என்று பெயர் சூட்டுகின்றேன். எம்பெருமானார் தரிசனமென்றே வழங்கட்டும்.

வாரீர், எம்பெருமானாரே! உமக்கு இன்னும் சரமஸ்லோகத்தின் ரகசியப் பொருளையும் வழங்க விரும்பினோம். இதோ கேட்டருளும். இதன் பொருளை நாத்திகர் செவியில் படாதபடி பேணிக்காத்து வாரும்.

எம்பெருமானார்: சுவாமி! இப்பொருளை அடியேன் பவித்ரமான கூரத்தாழ்வானுக்கு மட்டும் சொல்லும்படி அனுமதி வழங்க வேண்டும்.

திருக்கோட்டியூர் நம்பிகள்: எம்பெருமானாரே! ஒரு வருட காலம் அவரிடம் பணிகொண்டு சொல்லும்.

உடையவர்: சுவாமி! தேவரீர் திருவருளால் அடியேனும் இத்துணை ஸ்ரீவைஷ்ணவர்களும் உய்யப்பெற்றோம். பேறு பெற்றோம். உமது கருணையாக வெள்ளத்தில் மூழ்கி களிப்படைகின்றோம். அனைவரையும் வாழ்த்தியருளும்.

| | |
|---|---|
| திருக்கோட்டியூர் நம்பிகள்: | எம்பெருமானாரே! திருமாலடியார்களே! பெற்ற ரகசியப் பொருளைப் பேணிக்காத்து, அதன்படி நடந்து, எம்பெருமான் திருநாடு அடைவீர்களாக! |

(அனைவரும் திருக்கோட்டியூர் நம்பிகள், எம்பெருமானார் திருவடிகளில் விழுந்து வணங்கினர்.)

**எம்பெருமானார் தரிசனமென்றே இதற்கு**
**நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார் அம்புவியோர்**
**இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த**
**அந்தச் செயல் அறிகைக்கா**

(உபதேச ரத்தின மாலை)



# மணவாள மாமுனிகளும் — திருமாலடியார்களும்

உத்தமமான பரம காருண்யரான மணவாள மாமுனிகள், ஆசார்யர்கள் வரிசையை நிறைவு செய்தவர் ஆவர். மயர்வற மதி நலம் அருளப் பெற்ற, ஆழ்வார்கள் திருவாய் மலர்ந்தருளிய அருளிச் செயல்களின் பெருமையினையும், ஆழ்வார்களின் பெருமையினையும், மாமுனிகளுக்கு முன்னம் உதித்த ஆசாரியப் பெருமக்களின் பெருமையினையும், அவர்கள் அருளிய வியாக்யானங்களின் பெருமையினையும், அறியாத பக்தகோடிகளும், பாமரமக்களும் அறிந்து உய்யும்படியாக திருவுள்ளம் பற்றி, **உபதேச ரத்தின மாலை** என்ற நூலை நமக்கு அருளிய பெருமை பெற்றவர்.

இவர், இராமாநுஜர் மறுபிறப்பாக, அனந்தாழ்வான் அம்சமாகத் தோன்றி திருமால் நெறி திக்கெட்டும் பரவும்படிச் செய்தபடியால், திருவரங்கனே சிறுபிள்ளை வடிவில் தோன்றி வாழ்த்தி மறைந்தார். அத்தகைய சிறப்பு வாய்ந்த நம் மாமுனிகள் அருளிய உபதேச ரத்தின மாலையின் அறிவுரைகளை, மாமுனிகளும் — திருமாலடியார்களும் சந்தித்து உரையாடும் பாங்கில் இக்கட்டுரையில் காண்போம். இந்நூலின் பெருமையை விளக்க, இந்நூலின் பொருளை உணர்ந்து ஓதுபவர் களுடைய திருவடிகளை நாம் சரணாகதி செய்வோமாக. இதனையே

**“மணவாள மாமுனி தன்னன்புடன் செய்**
**உபதேச ரத்தின மாலை தன்னை தன்னெஞ்சு தன்னில்**
**தரிப்பவர் தாள்கள் சரண் நமக்கே”**

**திருமாலடியார்கள்**

மாமுனிகளுக்கு திருமாலடியார்கள் வணக்கம் செலுத்துகின்றோம். அடியோங்கள் திருமாலடியார்களாகப் பிறந்தும், திருமால், ஆழ்வார்கள், ஆசாரியர்கள், அருளிச் செயல்கள், மறைபொருள்கள், மறைபொருள் களின் விளக்கங்கள் ஆகியவற்றின் பெருமைகளை உணராமல் வீணே காலத்தைக் கழித்து விட்டோம். அவைகளைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு தேவரீரை நாடி வந்துள்ளோம். தேவரீர் திருவருள் கூர்ந்து அடியோங்களுக்கு அருள வேண்டும்.

திருமாலடியார்களே! வாருங்கள். இப்படி அமருங்கள். இதோ தாகம் தீர்த்துக் கொள்ளுங்கள். உம் போன்ற திருமாலடியார்களுக்கு வேண்டுவனவற்றையெல்லாம், வழங்கும்படியன்றோ நம் காரேய் கருணை இராமானுஜர் கட்டளையிட்டுள்ளார்.

"பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் – ஆரியர்காள் கூறுமென்று" கூறியுள்ளார் இராமாநுஜர். அவரது கட்டளையை சிரமேற்கொண்டு செயலாற்றுவது அன்றோ அடியேன் செய்ய வேண்டுவது. இப்படி அடியார்களுடன் கூடியிருந்து, குலாவுகின்ற நாளே மண்ணுலகில் இருக்கும் நாள் என்கின்றார் குலசேகரப் பெருமான்.

**"அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழவு கண்டு யானும் இசைந்துடனே என்று கொலோ இருக்கும் நாளே"** (பெருமாள் திருமொழி)

கேளுங்கள் அடியார்களே! கேளுங்கள். நீங்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க.

திருமாலடியார்: மாமுனிகளே! நாம் எதைப் போற்ற வேண்டும் என்பதை அடியோங்கள் புரிந்து கொள்ளும்படி கூறுங்கள்.

மணவாள மாமுனிகள்: திருமாலடியார்களே! நாம் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனை வாழ்த்த வேண்டும். அவன் பேரைச் சொல்ல வேண்டும். அவன் விரும்பி எழுந்தருளிய திருப்பதிகளின் பேரைச் சொல்லிப் புகழ வேண்டும். ஏனெனில் திருமால்தான் நமக்கெல்லாம் திருநாட்டை அளிக்க வல்லவன். இதைத்தான்,

**"நாராயணனே நமக்கே பறை தருவான்",**
**" பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடிபாடி",**
**" ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி", "தாமோதரனை வாயினால் பாடி", என்று ஆண்டாளும், மற்றும்**

**"திருவரங்கமென்னா" , "அரங்கமென்றழைப்பராகில் "** என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும், எம்பெருமானும், **"என் ஊரைச் சொன்னானா! என் பேரைச் சொன்னான்ா! சொன்னால் திருநாடு நல்குவேன்"** என்றார்.

அதுமட்டுமன்றி, நமது ஆழ்வார்களையும், அவர்கள் அருளிச்செயல்களையும், ஆசார்யப் பெருமக்களையும், அவர்கள் வியாக்யானங்களையும் நன்கு உணர்ந்து, அவற்றின்படி நடந்து, அவர்களையெல்லாம் போற்றி வாழ வேண்டும்.

**"ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி**
**தாழ்வாதும் இல்குரவர்தாம் வாழி – ஏழ்பாரும்**
**உய்ய அவர்கள் உரைத்தவைகள்தாம் வாழி**
**செய்ய மறை தன்னுடனே சேர்ந்து"** (உபதேச ரத்தின மாலை)

திருமாலடியார்: மாமுனிகளே! நாம் உலக மக்களுக்குச் சொல்ல வேண்டியது எவை என்று கூறுங்கள்.

மணவாள மாமுனிகள்: திருமாலடியார்களே! இவ்வுலகிலும், இவ்வுலக மக்களிடையேயும் மண்டிக் கிடக்கும் அறியாமையைப் போக்கவும், மெய்யறிவைப் புகட்டவும், வேதக் கருத்துகள் அடங்கிய இனிய தமிழ் பாடல்களைப் பாடியருளிய ஆழ்வார்கள், இவ்வுலகில் அவதரித்த கீழே சொல்லுகின்ற மாதங்களையும், நாள்களையும், மண்ணுலக மக்கள் அறியும்படி எடுத்துக்கூறி, அந்நாட்களைக் கொண்டாடும்படிச் செய்ய வேண்டும்.

| | | | | |
|---|---|---|---|---|
| பொய்கையாழ்வார் | – | ஐப்பசி | – | திருவோணம் |
| பூதத்தாழ்வார் | – | ஐப்பசி | – | அவிட்டம் |
| பேயாழ்வார் | – | ஐப்பசி | – | சதயம் |
| திருமழிசையாழ்வார் | – | தை | – | மகம் |
| நம்மாழ்வார் | – | வைகாசி | – | விசாகம் |
| குலசேகராழ்வார் | – | மாசி | – | புனர்பூசம் |
| பெரியாழ்வார் | – | ஆனி | – | சோதி |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | – | மார்கழி | – | கேட்டை |
| திருப்பாணாழ்வார் | – | கார்த்திகை | – | ரோகிணி |
| திருமங்கையாழ்வார் | – | கார்த்திகை | – | கார்த்திகை |
| மதுரகவியாழ்வார் | – | சித்திரை | – | சித்திரை |
| ஸ்ரீ ஆண்டாள் | – | ஆடி | – | பூரம் |

திருமாலடியார்: மாமுனிகளே, உலகில் ஒப்பில்லாத நாட்கள் எவை என்று அருளவும்

மணவாள மாமுனிகள்: திருமாலடியார்களே! முதலாழ்வார்களாகிய பொய்கையார் அவதரித்த ஐப்பசி திருவோண நாளும், பூதத்தாழ்வார் அவதரித்த ஐப்பசி அவிட்ட நாளும், பேயாழ்வார் அவதரித்த ஐப்பசி சதய நாளும், நம்மாழ்வார் அவதரித்த வைகாசி விசாக நாளும், ஆண்டாள் அவதரித்த திருவாடிப்பூர நாளும் ஒப்பில்லாத நாட்களாகும்.

திருமாலடியார்: மாமுனிகளே! பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய இம்மூவருக்கும் முதலாழ்வார் கள் என்று ஏன் பெயர் வந்தது?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! இம்மூவரும் மற்ற ஆழ்வார்களுக் கெல்லாம் முன்னே பிறந்ததோடு மட்டுமின்றி, நல்ல தமிழ் பாக்களில் எம்பெருமான் பெருமைகளைப் பாடி, இவ்வுலக மக்கள் உய்யும் வழியைத் தந்தனர். இவர்கள் பாடிய முதல் மூன்று திருவந்தாதித் தொகுப்பே அருளிச் செயலாகிய நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் முதல் பாசுரங்களாகும். எனவேதான் இவர்களுக்கு முதலாழ்வார்கள் என்ற பெயர் வழங்கியது. இதனையே,

> **“மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து**
> **நற்றமிழால் நூல் செய்து நாட்டை உய்த்த பெற்றுமையோர்**
> **என்றும் முதலாழ்வார்கள் என்றும் பேர் இவர்க்கு**
> **நின்றது உலகத்தே நிகழ்ந்து”** என்று

உபதேச ரத்தின மாலையில் கூறியுள்ளேன்.

திருமாலடியார்: பெருமை உடைய நாள் எது? என்று கூறுவீர் மாமுனிகளே!

மணவாள மாமுனிகள்: திருமங்கையாழ்வார் இவ்வுலகில் அவதரித்த கார்த்திகை மாதம் கார்த்திகை நன்னாளே பெருமை உடைய நாளாகும்.

திருமாலடியார்: மாமுனிகளே! நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய நான்கு பிரபந்தங்கள் எந்த எந்த வேதங்களின்

சாரம்? என்றும், திருமங்கையாழ்வார் அருளிய ஆறு பிரபந்தங்கள் எவைகளுக்கு அங்கங்கள் என்றும் கூறுங்கள்.

மணவாள மாமுனிகள்: நம்மாழ்வார் அருளிய நான்கு பிரபந்தங்களும் முறையே நான்கு வேதங்களின் சாரமாகும்.

திருவிருத்தம் = ரிக் வேதம்

திருவாசிரியம் = யஜூர் வேதம்

பெரிய திருமொழி = அதர்வண வேதம்

திருவாய்மொழி = சாம வேதம்

அதேபோல் திருமங்கையாழ்வார் அருளிய 6 (கீழே உள்ள) பிரபந்தங்களும், மாறன் படைத்த 4 பிரபந்தங் களுக்கும் அங்கங்களாகும்.

சிக்ஷை = பெரிய திருமொழி

வியாகரணம் = திருக்குறுந்தாண்டகம்

நிருக்தம் = திருநெடுந்தாண்டகம்

சந்தஸ் = திருவெழுக்கூற்றிருக்கை

கல்பம் = சிறிய திருமடல்

ஜோதிஷம் = பெரிய திருமடல்

திருமாலடியார்: சாத்திரம் அறிந்தவர்கள் (ஆத்தியர்கள்) பிரியமுடன் கொண்டாடும் நாள் எது?

மணவாள மாமுனிகள்: அமலனாதிபிரான் என்ற அருளிச் செயலினைப் பாடிய திருப்பாணாழ்வார் அவதரித்த கார்த்திகை மாதம் ரோகிணி நாளை, சாத்திரம் அறிந்தவர்கள் பிரியமுடன் கொண்டாடுவர்.

திருமாலடியார்: மாமுனிகளே! நான்கு வேதங்களையும் அறிந்தவர் கள் (நான்மறையோர்) கொண்டாடும் நாள் எது?

மணவாள மாமுனிகள்: தேவர்களுக்கு விடியற்காலமாய், எம்பெருமானுக்கு மிகவும் பிரியமான ஆண்டாள் பாவை நோன்பு நோற்ற மார்கழி மாதத்தில் கேட்டை நன்னாள்.

கைங்கர்யமே மிகவும் சிறந்ததென்று உணர்ந்து, திருவரங்கனுக்கு திருத்துழாய் தோட்டம் அமைத்து தினமும் திருத்துழாய் மாலை அணிவித்து பகவத்தொண்டு செய்த, தொண்டரடிப்பொடி யாழ்வார் அவதரித்த நாளானதால் வேதம்வல்லார் அதனைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

திருமாலடியார்: மாமுனிகளே! **சிறந்த தவத்தையுடையவர்கள் (நற்றவர்கள்) கொண்டாடும் நாள்** எது?

மணவாள மாமுனிகள்: பலமதங்களிலெல்லாம் உழன்று, இறுதியில் பேயாழ் வாரால் திருத்திப் பணி கொள்ளப்பட்டவரும், ஸ்ரீமந் நாராயணனே முழு முதற் கடவுள் என்ற மெய்யறிவைப் பெற்று, நமக்கெல்லாம் உணர்த்திய பக்திசாரர் என்று சிறப்புப் பெயர் பெற்ற திருமழிசையாழ்வார் பிறந்த, தை மாதம் மகம் நன்னாளே தவசிகள் கொண்டாடும் நாளாகும்.

திருமாலடியார்: மாமுனிகளே! **நல்லவர்கள் கொண்டாடும் நாள்** எது?

மணவாள மாமுனிகள்: நன்று கேட்டீர். பெரும் சக்ரவர்த்தியாக இருந்தும், அரச இன்பத்தை வெறுத்து, ஸ்ரீமந் நாராயணன்பால் ஆழ்ந்த பக்தியும், திருமால் அடியார்களிடத்தில் மிகுந்த பாசமும், நேசமும் கொண்டு, பகவத்-பாகவத தொண்டாற்றிய குலசேகராழ்வார் அவதரித்த மாசி மாதம் புனர்பூச நன்னாளை நல்லவர்கள் சிறந்த நாளாகக் கொண்டாடுகின்றனர்.

திருமாலடியார்: மணவாள மாமுனிகளே! **ஏற்றம் மிகுந்த நாள்** எது?

மணவாள மாமுனிகள்: திருமாலினுடைய பெருமைகளைக் கூறுகின்ற வேதக் கருத்துகளை, தமிழில் நான்கு பிரபந்தங்களில், நாம் உணரும்படி அருளிய, திருக்குருகூரில் நம்மாழ்வார் அவதரித்த வைகாசி மாதம் விசாக நன்னாளும், பல்லாண்டு பாடிய பெரியாழ்வார் அவதரித்த ஆனி மாதம் சோதி நன்னாளும் ஏற்றம் மிகுந்த நாட்களாகும்.

திருமாலடியார்: மாமுனிகளே! இவ்வுலகில் **ஒப்புமை கூறமுடியாத உயர்ந்தவர்கள்** யார் யார்?

| | |
|---|---|
| மணவாள மாமுனிகள்: | சடமாகிய வாயுவை வென்ற சடகோபர் எனும் நம்மாழ்வாருக்கு இம்மண்ணுலகிலும், விண்ணுலகிலும் ஒப்புடையவர்கள் யாவரும் இல்லை. மற்றும் வேதமனைத்துக்கும் வித்தான திருப்பாவையைப் பாமாலையாக எம்பெருமானுக்குச் சூட்டிய ஆண்டாளை திருமகளாகப் பெற்றவரும், எம்பெருமானுக்குத் தினமும் பூமாலை சூட்டி பகவத் தொண்டு செய்து அவருக்கு பல்லாண்டு பாடி எம்பெருமானை மருமகனாகப் பெற்ற பெரியாழ்வாருக்கும் ஒப்புடையவர்கள் யாவரும் இல்லை. |
| திருமாலடியார்: | மாமுனிகளே! இவ்வுலகில் **ஒப்பில்லாத நூல்** (மொழி) எது? |
| மணவாள மாமுனிகள்: | வேதக் கருத்துகளையும், திருமாலே முழு முதற் கடவுள் என்பதனையும், அவரது பெருமைகளையும், உலகில் மக்கள் பின்பற்ற வேண்டிய கருத்துகளையும், வேத சாரமாக நல்ல தமிழில் நமக்கு அளித்தவரான நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியாகிய பிரபந்தத்திற்கு ஒப்பான நூல் ஏதும் இல்லை. |
| திருமாலடியார்: | மாமுனிகளே! இவ்வுலகில் **ஒப்பில்லாத ஊர்கள்** எவை? |
| மணவாள மாமுனிகள்: | திருமாலடியார்களே! இவ்வுலகில் ஸ்ரீமந் நாராயணன் ஆதிநாதப் பெருமானாக எழுந்தருளியதும், நம்மாழ்வார் அவதரித்த திருக்கூருகூர் ஆகிய ஆழ்வார் திருநகர் எனும் ஊருக்கு ஒப்புடைய ஊர் ஏதும் இல்லை. |
| திருமாலடியார்: | மாமுனிகளே! பட்டர் பிரான், பெரியாழ்வார் எனும் பெயரினை எப்படிப் பெற்றார்? |
| மணவாள மாமுனிகள்: | திருமாலடியார்களே! பட்டர்பிரானைத் தவிர மற்ற ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருமேனியழகையும், திருக்கல்யாண குணங்களையும் அனுபவித்தனர். ஒரு சில காலங்களில் போற்றினர். |

ஆனால் பட்டர்பிரானோ அவர்களைப் போலன்றி, அந்த ஆழ்வார்கள் பிரீதியை விட பன்மடங்கு பொங்கும் பரிவைக் கொண்டு, எம்பெருமானுக்கு பல்லாண்டு பாடிய காரணத்தால் பெரியாழ்வார் என்னும் பெயர் பெற்றார்.

திருமாலடியார்: நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துக்கு முதலாக ஏன் திருப்பல்லாண்டு பாசுரம் கருதப்படுகிறது?

மணவாள மாமுனிகள்: வேதத்துக்கு முதலாக "ஓம்" என்ற பிரணவம் போல, திவ்யப்பிரபந்தக் கருத்துக்களையெல்லாம் சுருக்கமாக திருப்பல்லாண்டு பாசுரங்கள் கூறுவதால், இத்திருப்பல்லாண்டு முதலாவதாகக் கருதப்பட்டு முதலிலும் முடிவிலும் ஓதப்படுகின்றது.

திருமாலடியார்: மாமுனிகளே! திவ்யப்பிரபந்தங்களில் ஒப்பில்லாத பிரபந்தம் (கலை) எது?

மணவாள மாமுனிகள்: திவ்யப்பிரபந்தங்களில் ஒப்பில்லாத பிரபந்தம் (கலை) திருப்பல்லாண்டே ஆகும்.

திருமாலடியார்: அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாக ஆண்டாள் பிறந்தாள் என்றும், பிஞ்சாய் பழுத்தாள் என்றும் ஏன் கூறப்படுகிறது?

மணவாள மாமுனிகள்: திருமாலின் அவதாரக்காலங்களில் இரணியன், இராவணன், கும்பகர்ணன், கம்சன், சிசுபாலன் போன்றவர்களால் ஏற்பட்ட தீங்குகளையும், அவர்களுடன் அவர் செய்த போர்களையும் நினைத்து, இப்போது என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சி (பயந்து) பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரின் வேயர் குலத்தில் ஒரு வாரிசாகப் பிறந்ததனால் ஆண்டாள் அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாய் பிறந்தாள் என்று கூறப்பட்டது.

மற்றைய ஆழ்வார்களைக் காட்டிலும் 5 வயது இளம் பருவத்திலேயே சிறந்த மெய்யறிவைப் பெற்ற தால் பிஞ்சாய் பழுத்தாள் என்று ஆண்டவனைச் சிறப்பித்துக் கூறியுள்ளனர்.

திருமாலடியார்: மாமுனிகளே! மற்றைய ஆழ்வார்கள் அவதரித்த நாட்களைக் காட்டிலும் தகுதியான நாள் எது?

மணவாள மாமுனிகள்: நம்மாழ்வாராகிய குருவைத் தவிர வேறு தெய்வமில்லை என்று கருதிய மதுரகவியாழ்வார் அவதரித்த சித்திரை மாதம் சித்திரை நன்னாளே மற்றைய ஆழ்வார்கள் அவதரித்த நாட்களைக் காட்டிலும் தகுதியான நாளாகும்.

திருமாலடியார்: மணவாளரே! நான்கு திசைகளிலும் உள்ள மக்கள் அனைவரும் கொண்டாடும் நாள் எது?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! நான்கு திசைகளிலும் வாழும் மக்கள் கொண்டாடுவது, எம்பெருமானார் அவதரித்த சித்திரை மாதம் திருவாதிரை நாளேயாகும்.

திருமாலடியார்: மாமுனிகளே! ஏற்றம் மிகுந்தவை எவை?

மணவாள மாமுனிகள்: ஆழ்வார்களும், அவர்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்யப்பிரபந்தமும் ஏற்றம் மிகுந்தவைகள் ஆகும்.

திருமாலடியார்: மணவாளரே! யாவர் நரகில் வீழ்வர்?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! ஆழ்வார்களையும், அவர்கள் பாடிய அருளிச்செயல்களையும் போற்றாமல் தாழ்வாக நினைப்பவர்கள் நரகில் வீழ்வர். எனவே நீங்கள் அவர்களை நெருங்காதீர்கள்.

திருமாலடியார்: மாமுனிகளே! நமது வைஷ்ணவ நெறிக்கு எம்பெருமானார் தரிசனமென்று ஏன் பெயர் வந்தது?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! மந்திரப் பொருள்களை திருக் கோட்டியூர் நம்பிகளிடமிருந்து அறிந்து, அதைத் தான் மட்டும் அறிந்து உய்ய வேண்டுமென்ற தன்னலமின்றி, அதனை ஆசையுடையவர்க் கெல்லாம் அறிவித்த பொது நலம் கருதிய இராமாநுஜருக்கு நம்பிகள் எம்பெருமானார் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார். அது மட்டுமின்றி இராமானுஜர் வைஷ்ணவ நெறியை வளர்த்த

காரணத்தால், அதற்கு எம்பெருமானார் தரிசனமென்று பெயரிட்டு மகிழ்ந்தார்.

திருமாலடியார்: மணவாளரே! யார் திருநாட்டை அடைய மாட்டார்கள்?

மணவாள மாமுனிகள்: ஆசாரியரிடத்தில் பக்தியில்லாதவர்கள் பகவானிடம் பக்தி கொண்டால், அதனை எம்பெருமான் ஏற்றுக் கொள்ளவும் மாட்டான், அவர்களுக்கு திருநாடும் அளிக்க மாட்டான். எனவே திருநாடு அடைய விரும்புபவர்கள், முதலில் ஆசாரியரிடத்தில் பக்தி கொண்டு, அவரைக் கொண்டு பகவத் பக்தி கொண்டால்தான்' திருநாடு அடைய முடியும்.

திருமாலடியார்: மாமுனிகளே! எம்பெருமான் தானே உவந்து நமக்கு திருநாடு அளிப்பான்! என்பதையும், ஆசாரிய பக்தியின் பெருமையையும் கூறுங்கள்!

மணவாள மாமுனிகள்: ஒரு பறவைக்கு இரண்டு இறகுகள் இருந்தால்தான் பறக்கும். அதே போல எந்த ஆசாரியர் மெய்யறிவை யும், அநுட்டானங்களையும் கொண்டு சிறந்து விளங்குகின்றார்களோ! அவர்களை நாம் ஆசாரிய ராகக் கொண்டு அவர்கள்பால் பக்தி கொண்டு அவர் அறிவுரைபடி நடந்தால் திருமகள் கேள்வனான திருமால் நமக்கு தானே மனமுவந்து திருநாடு நல்குவான். மற்றும் திருநாடு கிடைப்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகும். திருநாட்டில் பகவத் தொண்டே செய்ய முடியும். ஆனால் ஆசாரிய பக்தியை நாம் இவ்வுலகில் இருக்கும் நாளிலேதான் செய்ய முடியும். இவ்வுலகில் நமக்கு கண் கண்ட தெய்வம் ஆசாரியரே. எனவே நாம் ஆசாரிய பக்தியையே சிறந்ததாகக் கொண்டாட வேண்டும்.

திருமாலடியார்: மாமுனிகளே! ஆசாரியர்கள் கடமைகளைச் சற்றே கூறுங்கள்.

மணவாள மாமுனிகள்: ஆசாரியர் சிஷ்யர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குச் சங்கு சக்கரப் பொறிகளை தோள் களில் பொறித்து, திருமண் காப்பு அணிவித்து,

திருமந்திரம், துவயம், சர்மஸ்லோகம் முதலிய வற்றை போதித்து, திருவாராதனை முறைகளைக் கற்றுக் கொடுத்து, இராமாநுஜ அடியார் என்ற பெயர் சூட்டி அவர்கள் இவற்றைக் கடைப்பிடிக் கின்றார்களா என்பதையும் கவனித்து, அவர்கள் நெறி தவறாமல் இருக்கும்படிச் செய்ய வேண்டும். நெறி தவறினால், அவர்களைத் தடுத்து நல்வழிப் படுத்தி, சிஷ்யர்களின் ஆத்மாவை பேணிக் காக்க வேண்டும்.

திருமாலடியார்: மாமுனிகளே! இவ்வுலகில் நாத்திகர், ஆத்திகர், நாத்திக-ஆத்திகர் என்பவர்கள் யார் யார்? நாம் எவரைத் துணையாகக் கொள்ள வேண்டும்?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! புண்ணிய பாபங்களையும், பரலோகத்தையும், ஜீவனையும், ஈசுவரனையும் பற்றி சொல்வதோடு நிற்பவர் நாத்தீகர்கள் ஆவர். புண்ணியம், பாபம் முதலியவற்றை ஒப்புக்கொண்டு, மோஷத்திற்குரிய உபாயமான சரணாகதியிலும், ஆசாரிய பக்தியிலும் ஈடுபடுபவர் ஆத்திகர்கள் ஆவர். சாத்திரங்களை பிரமாணமாக ஒப்புக் கொண்டு அதன்படி நடக்காமல், தங்கள் விருப்பப் படி பேசிக்கொண்டும், செய்து கொண்டும் திரிபவர்கள் ஆத்திக-நாத்திகர்கள் ஆவர். இம் மூவருடைய குணங்களையும் ஆராய்ந்து, நாத்தி கரையும், ஆத்திக-நாத்திகரையும் விட்டு, ஆத்திகரைத் துணையாகக் கொண்டு வாழ்வதே சிறந்ததாகும்.

திருமாலடியார்: முனிகளே! ஞானிகளுடன் சேர்வதால் நமக்கு உண்டாகும் நன்மை என்ன?

சிக்கு நாற்றமுடைய தலையில் மணமிக்க மலர்களைச் சூடுவதால், சிக்கு நாற்றம் போய் நறுமண மலரின் மணமே மிகுந்து வீசும். அதைப்போல் மெய்யறிவுடைய ஞானிகளுடன் சேர்ந்தால் நமது அஞ்ஞானம் நீங்கி, மெய்யறிவு

உண்டாகும். எனவே நாம் ஞானிகளுடைய நட்பையே நாட வேண்டும்.

திருமாலடியார்: மணவாளரே! தீயவர்களுடன் சேர்ந்தால் நமக்கு என்ன உண்டாகும்?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! துர்நாற்றமுடைய வெங்காயத்துடன் வைத்த பொருள்கட்கு அந்த வெங்காயத்தின் துர்நாற்றமும் உண்டாகும். அதேபோல் தீய குணமுடையவர்களுடன் சேர்ந்தால், அவர்கள் குணமே நமக்கும் தோன்றும். எனவே நாத்திகரும், ஆத்திக நாத்திகருமாகிய தீயவர்களுடன் நாம் சேரக்கூடாது.

திருமாலடியார்: மணவாளமாமுனிகளே! மூர்க்கரென்று யாரைக் கூறலாம்?

மணவாள மாமுனிகள்: ஆழ்வார்கள், நாதமுனிகள் முதலான நமது பூர்வாசிரியர்கள் அருளிச்செய்த அர்த்தங்களை நாம் ஓர் ஆசாரியரைச் சென்றடைந்து, குருவுக்குப் பணிவிடை செய்து, கேட்டு, அவற்றை மறவாமல், பலகாலமும் நினைவு கூர்ந்து, தமது மாணாக்கர்களுக்குச் சொல்ல வேண்டும். அப்படி யின்றி தனது மனதிற்குத் தோன்றினபடி, தவறான அர்த்தங்களைச் சொல்லியும், மாணாக்கன் நம்புவதற்காக, இதுதான் உண்மையான பொருள் என்று சொல்லுபவர்கள் மூர்க்கராவார்கள்.

திருமாலடியார்: மாமுனிகளே! நாம் எப்படி வாழ வேண்டும்?

மணவாள மாமுனிகள்: நமது மூத்த ஆசாரியர்களுடைய ஒழுக்கங்களை அறிந்த, உத்தமர்கள் மூலமாகக் கேட்டறிந்து, மெய்யறிவுடைய ஞானவான்களான ஆசாரியர் களை அடைந்து, அவர்களுக்குத் தொண்டு செய்து, நலமாக வாழ வேண்டும்.

திருமாலடியார்: மாமுனிகளே! எம்பெருமான் ஸ்ரீமந் நாராயண னுடைய பரம கிருபையைப் பெற நாம் என்ன செய்ய வேண்டும்?

மணவாள மாமுனிகள்: அடியார்களே! அடியேன் இயற்றிய உபதேச ரத்தினமாலையின் கருத்துக்களை இதுவரையில் உமக்குச் சொன்னேன். இதன் பொருளை உணர்ந்து தினமும் பாடல்களை நீங்கள் ஓதி வந்தால் நமக்குப் பிதாவான எம்பெருமானாருடைய அருள் பெற்று, சிறப்பான வாழ்வை அடைவோம்.

திருமாலடியார்: மணவாள மாமுனிகளே! தேவரீர் அடியோங்களுடைய ஐயப்பாடுகளை நீக்கி, மெய்யறிவைப் புகட்டினீர். நீரே எமக்குக் குருவாவீர். எங்களை மாணாக்கர்களாக ஏற்றுக்கொண்டு எம்மை வாழ்த்தியருள்வீர். தேவரீர் அடியோங்களுக்கு அருளிய அறிவுரைகளைப் பொன்னே போல் போற்றி, கடைப்பிடித்து, எம்பெருமான், ஆழ்வார், ஆசாரியர்கள் அருளைப் பெற்று வாழ்வோம் என்று உறுதியளிக்கின்றோம். மற்றும் இவற்றையெல்லாம் உலக மக்களிடமெல்லாம் கூறி அவர்களும் இவற்றைப் பின்பற்றி வாழும்படிச் செய்வோம். நீங்கள் இன்னும் ஒரு நூற்றாண்டு வாழ்ந்து எம்போன்றவர்களை வாழச்செய்ய வேண்டும்.

மணவாள மாமுனிகள்: திருமாலடியார்களே! இதுகாறும் பொறுமையாக இருந்து, உங்கள் ஐயப்பாடுகளை நீக்கிக் கொண்டீர். நீங்கள் பெற்ற மெய்யறிவை மற்றவர்கட்கும் புகட்டி, உலகம் அனைத்தும் நன்மை பெற்று வாழ வழிவகை செய்யுங்கள். நீங்கள் எம்பெருமான், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் அருள் பெற்று நீடூழி! பல்லாண்டு பல்லாண்டு வாழுங்கள் என வாழ்த்துகின்றேன்.

**அடியார்கள் வாழ! அரங்கநகர் வாழ!**
**சடகோபன் தண்தமிழ் நூல் வாழ! கடல்சூழ்ந்த**
**மண்ணுலகம் வாழ! மணவாள மாமுனியே**
**இன்னுமொரு நூற்றாண் டு இரும்.**

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்!

நித்யஸ்ரீ நித்ய மங்களம்!

ஸ்ரீ



## உங்கள் பிறந்தநாளை பொன்னாளாக்கவும் திருமண நாளை திருநாளாக்கவும் ஓர் அரிய

# வாய்ப்பு

சான்றோர் வாழும் தொண்டை நாட்டில், ஸ்ரீ இராமாநுசர் அவதரித்த ஸ்ரீ பெரும்பூதூருக்கு தென்கிழக்கே, சென்னையிலிருந்து தாம்பரம் வழியாக காஞ்சிபுரம் செல்லும் பேருந்துப் பெருவழியை ஒட்டி, படப்பைக்கு மேற்கே 3 கி. மீ தூரத்தில் உள்ள நரியம் பாக்கத்தில் ஸ்ரீநிவாசபெருமாள் ஸ்ரீ வரசித்தி விநாயகருடன் கோயில் கொண்டு எழுந்தருளி கருணை பொழிந்து வருகின்றார்.

இத்திருக்கோயில் திருப்பணி நிறைவு பெற்று, ஸம்ப்ரோக்ஷணம் குரோதன வருடம், ஆனிமாதம் 14ஆம் நாள் ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ வரத யதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

இப்பெருமாள்களின் நித்ய திருவாராதனம் தொடர்ந்து இனிது நடைபெற வங்கியில் நிரந்தர வைப்புநிதி துவங்கப் பட்டுள்ளது. அன்பர்கள் தங்கள் திருமண நாளையும், தங்கள் பிறந்த நாளையும் தங்கள் மனைவி, பிள்ளைகள் பிறந்த நாளையும் நன்னாளாக்க ஓர் அரிய வாய்ப்பு. இந்த நன்னாளை இறை பணியில் இணைத்து, அவரது திருவாராதனையை நடத்தி அவரது பெருங் கருணையைப் பெற்று பேரின்பம் அடைவோமாக!

இதற்கு நீங்கள் செய்யவேண்டுவதெல்லாம் குறைந்தது ஒரு நூறு ரூபாயை தங்கள் பெயரில் ஒதுக்கி கோயிலுக்கு வழங்கினால் போதும். அத்தொகை வங்கியில் நிரந்தர வைப்பு நிதியில் வைக்கப்பெற்று அதன் மூலம் வரும் வட்டியினால் உங்கள் திருமண நாளில்/பிறந்த நாளில் திருவாராதனை நடத்தி பிரசாதம் உங்களை நாடிவரும். தாங்கள் தவறாமல் இப்பணியில் கலந்து கொண்டு நலம் பல பெற்று, நீடுழி வாழ்ந்து, நாரணன் நல்லருள் பெருவீராக!

**பணம் அனுப்பவேண்டிய முகவரி :**

புலவர். ஏ. பரந்தாமன், எம். ஏ.
எண். 5 மூன்றாவது தெரு மேத்தா நகர்,
சேலையூர் அஞ்சல், தாம்பரம்-600 073



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## நூலாசிரியர்

### புலவர் ஏ. பரந்தாம ராமாநுஜதாசர்

**தோற்றம்:** செங்கை அண்ணா மாவட்டம், ஸ்ரீபெரும்பூதூர் அடுத்த நரியம்பாக்கம் கிராமத்தில் 4.7.1939இல் வைணவ, க்ஷத்திரிய மரபில் பிறந்தவர்.

**பெற்றோர்:** ந.சி.ஏழுமலை ராமாநுஜதாசர் – கோவிந்தம்மாள்

**கல்வி:** புலவர், பி.லிட்., எம்.ஏ., பி.எட்.

**ஆசாரியர்:** ஸ்ரீபெரும்பூதூர் ஆசூரி. ஸ்ரீ வேங்கடாச்சாரி சுவாமிகள்

**ஞானாசிரியர்கள்:** குமாரவாடி ஸ்ரீ உ..வே. இராமாநுஜா சாரியார், திருக்குறுங்குடி ஸ்ரீ உ.வே. திருநாராயண சுவாமிகள்

**பெற்ற விருதுகள்:** வைணவ மணி, திவ்வியப்பிரபந்த பாமாலை சூடாமணி, ஸ்ரீ வைஷ்ணவ குணோத்தமர்

**பரிசுகள்:** வி.ஜி.பி. சந்தனம்மாள் அறக்கட்டளை ரூ. 1,000/- ரொக்கப் பரிசு (எழுத்தாளர்)

**வெளியிட்ட நூல்கள்:** 1. திருமால் 108 திவ்யதேச நாமாவளி, 2. திருமால் நெறிக்கட்டுரைகள், 3. நான் கண்டு கொண்டது, 4. ஸ்ரீ எம்பெருமானார் தரிசனம்

**சமயப் பணி:** திருமால் அடியார் குழாம் செயலாளராக இருந்து கொண்டு ஆங்காங்கு ஆழ்வார், ஆசாரியர் திருநட்சத்திரங்களைக் கொண்டாடுதல், சமய, இலக்கியப் பேருரைகளை ஆற்றி வருதல்.

ஆழ்வார் – எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம் !